# சங்க இலக்கியத்தில் தொழிலும் வாணிகமும்



திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக

முனைவர் பட்ட ஆய்வாளர் பட்டத்திற்காக

அளிக்கபெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மு. விஜயலெட்சுமி,**

பதிவு எண்: 006714 / Ph.D / F.T / Tamil / 12.4.2008

ஆய்வு நெறியாளர்

முனைவர். **ந. விஜயசுந்தரி,** எம்.ஏ., எம்ஃபில்., பி.எட்., பி.எச்.டி,
உதவி பேராசிரியர்





தமிழாய்வுத் துறை

**உருமு தனலெட்சுமி கல்லூரி**

காட்டூர், திருச்சிராப்பள்ளி – 620 019

அக்டோபர் – 2012.

# ஆய்வாளர் உறுதிமொழி

மு.விஜயலட்சுமி,
பதிவு எண்: 006714 / Ph.D / F.T / Tamil / 12.4.2008
முனைவர் பட்ட ஆய்வாளர், (முழு நேரம்)
தமிழாய்வுத்துறை,
உருமு தனலெட்சுமி கல்லூரி,
காட்டூர், திருச்சிராப்பள்ளி – 620 019.

"**சங்க இலக்கியத்தில் தொழிலும் வாணிகமும்**" என்னும் தலைப்பில் **முனைவர்.ந.விஜயசுந்தரி, எம்.ஏ., எம்.பில்., பி.எட்., பி.எச்டி.,** அவர்களின் மேற்பார்வையில் உருவாக்கப் பெற்றுள்ள இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானதேயாகும் என உறுதி அளிக்கிறேன்.

**நெறியாளர் கையொப்பம்** | **ஆய்வாளர் கையொப்பம்**

# நெறியாளர் சான்றிதழ்

முனைவர் ந. விஜயசுந்தரி, எம்,ஏ., எம்ஃபில். பி.எட்., பி.எச்.டி.,
உதவிப் பேராசிரியர்,
தமிழாய்வுத்துறை,
உருமு தனலெட்சுமி கல்லூரி,
காட்டூர், திருச்சிராப்பள்ளி – 620 019.

"**சங்க இலக்கியத்தில் தொழிலும் வாணிகமும்**"என்னும் தலைப்பில் செல்வி.மு.விஜயலெட்சுமி அவர்களால் முனைவர் பட்ட ஆய்வாளர் பட்டத்திற்கு 2008–2012 கல்வியாண்டில் என் மேற்பார்வையின் கீழ் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றுச் சான்றளிக்கிறேன்.

29/10/12

**துறைத்தலைவர் கையொப்பம்**

**நெறியாளர் கையொப்பம்**

**தலைவர்** (பொ).
முதுகலைத் தமிழ் உயராய்வுத்துறை
உருமு தனலட்சுமி கல்லூரி,
திருச்சிராப்பள்ளி - 13.

# நன்றியுரை

நன்றி கூறுவது என்பது வார்த்தைகளால் மட்டும் அல்ல அது உள்ளத்தின் வெளிப்பாடே ஆகும். உலகில் பிறந்தவர் எவரும் தனக்கு மற்றவர் செய்யும் உதவியை நினைத்து வார்த்தைகளால் கூறுவது நன்றி என்ற மூன்று எழுத்து மட்டுமே. அதையே நானும் இங்கு எனது உள்ளத்தின் வெளிப்பாட்டில் எழுத்து வடிவில் கூறுகிறேன்.

**“சங்க இலக்கியத்தில் தொழிலும் வாணிகமும்”** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி அளித்த பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கும் முனைவர் பட்ட ஆய்வாளர் பட்டம் பயில வாய்ப்பளித்த உருமு தனலெட்சுமி கல்லூரிக்கும் முதற்கண் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எங்களை நல்வழி நடத்திச் சென்ற கல்லூரி முதல்வர் முனைவர். **சா.சேகர், எம்.காம்., எம்.பில்., பி.எச்.டி.,** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பணியில் என்னை ஈடுபடுத்தியும் மேற்பார்வையாளராக இருந்தும் இந்த ஆய்வுக் கட்டுரையைச் செம்மைப்படுத்திக் கொடுத்தும் இவ்வாய்வுக் கட்டுரை நல்ல முறையில் உருவாகத் தேவையான உதவிகளையும் செய்த எனது நெறியாளர் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் **முனைவர்.ந.விஜயசுந்தரி, எம்.ஏ., எம்.பில்., பி.எட்., பி.எச்டி.,** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழ் ஆய்வுத் துறைத் தலைவர் **முனைவர். ஆ.கருணாநிதி,** அவர்களுக்கும் என் நன்றியைத்

தெரிவித்துக் கொள்கிறேன் மற்றும் துறை சார்ந்த உதவிபேராசிரியை **முனைவர்.தேவி, முனைவர். பேராசிரியர். முனைவர். கோ.வீரமணி, பேராசிரியர். முனைவர். இரா.ரவிச்சந்திரன், பேராசிரியை. முனைவர். சாவித்ரி** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் பிறப்பிற்கும் வளர்ப்பிற்கும் நல்வழிக்கும் முன்னோடியாக திகழும் எனது தந்தையார், தாயார் அவர்களின் பாதமலர் தொட்டு நன்றியை தெரிவத்துக் கொள்கிறேன். மற்றும் இவ்வாய்விற்கு உறுதுணையாக இருந்த எனது வகுப்பு தோழமைகளுக்கும் எனது மனமார்ந்த நன்றிகள் பல கூற கடமைப்பட்டுள்ளேன். மேலும் இவ்வாய்வேட்டினை தட்டச்சு செய்துக் கொடுத்த ஜெயம் ஜெராக்ஸ் சிவாப்பிரியா, சசிகலா மற்றும் சகுந்தலா அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

**நன்றி!**

**இப்படிக்கு,**

**மு. விஜயலெட்சுமி.**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | பா. எண் | – | பாடல் எண் |
| 2. | நூ | – | நூற்பா |
| 3. | ப | – | பக்கம் |
| 4. | மேலது | – | மேற்குறித்த நூல் |
| 5. | பக் | – | பக்கங்கள் |
| 6. | திரு | – | திருக்குறள் |
| 7. | சிலம்பு | – | சிலப்பதிகாரம் |

# பொருளடக்கம்

# முன்னுரை

## சங்க இலக்கியத்தில் தொழிலும் வாணிகமும்

இயற்கையையும், மனிதனின் அகவாழ்வு புறவாழ்வு ஆகியவற்றையும் அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டவை சங்க இலக்கியங்கள் ஆகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்களின் வாழ்க்கை முறையை பழந்தமிழ் இலக்கியங்கள் பறை சாற்றுகின்றன. தமிழகத்தின் பழங்காலச் சிறப்புகள், மக்கள் வாழ்க்கை முறை மன்னர்களின் ஆட்சி முறை நாட்டில் நிலவிய தொழில்கள் அத்தொழில்களின் வளர்ச்சியால்உயர்நிலையை அடைந்த வாணிகம் அவ்வாணிகத்தால் பெருகிய பொருளாதார நிலை ஆகியவை ஆக்கால இலக்கியங்களின் வழி உணரப்பெறுகின்றன.

**ஆய்வுத் தலைப்பு:**

சங்க இலக்கியத்தில் தொழிலும் வாணிகமும்.

**ஆய்வு நோக்கம்:**

சங்க கால மக்கள் உருவாக்கிய வாணிக நெறிகள் சமகால சமூக மேம்பாட்டிற்கு பெரும் துணையாக அமையும் என்பதை அடிப்படை நோக்கமாகக் கொண்டு இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வுப் பயன்:**

பண்டையக் கால வரலாறுகளைக் குறித்து ஆராய்வதால் நம் பழம்பெருமை வெளிப்படுகிறது. உலகிற்கு முன்னோடியாக விளங்கிய தமிழர்களின் வாணிகம் மற்றும் வாழ்க்கை நிலை, அயல் நாட்டவர்களுடன் கொண்ட தொடர்பு, அயல் நாட்டவரின் கலை, நாகரீகம், பண்பாடு ஆகியவற்றை சமுதாயத்திற்கு அறியத்தருவது இவ்வாய்வின் பயனாகும்.

**கருதுகோள்:**

சங்ககால மக்களின் வாழ்வியல் முன்னேற்றத்திற்கு அவர்கள் ஏற்றுக்கொண்ட தொழிலும் வாணிக நெறிகளுமே காரணம் என்பதை நிறுவதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வின் அணுகுமுறை:**

இவ்வாய்வு சமூகவியல் நோக்கில் அமைந்துள்ளது. ஆங்காங்கே விளக்கமுறையும் பின்பற்றப்பற்றப்பட்டுள்ளது.

**முதன்மை ஆதாரங்கள்:**

சங்க இலக்கிய நூல்கள் முழுமையும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.

**துணைமை ஆதாரங்கள்:**

சங்க இலக்கியம் தொடர்பான திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைத் தொகுப்பு ஆகியன துணைமை ஆதாரமாகக் கொள்ளப்பட்டன.

**ஆய்வுப் பகுப்பு:**

இவ்ஆய்வேடு முன்னுரை. முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**அவை:**

இயல் 1. பெருந்தொழில்கள்

இயல் 2. சிறுதொழில்கள்

இயல் 3. உள்நாட்டு வாணிகம்

இயல் 4. வெளிநாட்டு வாணிகம்

இயல் 5. வாணிகர்களின் வாழ்க்கை முறை

# இயல் ஒன்று

**பெருந்தொழில்கள்:**

ஐந்திணையில் மக்களால் முதன்மையாக மேற்கொண்ட தொழில்களே பெருந்தொழில்கள் எனப்பட்டன. அவையாவன உழவுத் தொழில், நெசவுத் தொழில், கட்டிடத் தொழில், களவுத் தொழில் ஆகியன இவை வாயிலாக ஆராய்ந்து வெளிக் கொணரப்பட்டுள்ளன.

# இயல் இரண்டு

**சிறுதொழில்கள்:**

சங்க மக்கள் தங்கள் பொருளாதார நிலையை உயர்திதிக் கொள்ளவும், தங்கள் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்து கொள்ளவும், சிறுதொழில்களை மேற்கொண்டனர்.

**அவையாவன:**

1. தேன்எடுத்தல்
2. உப்புவிளைவித்தல்
3. நகை செய்தல்
4. கட்டில் பின்னுதல்
5. பாய் பின்னுதல்
6. மோர் விற்றல்

7. சலவை செய்தல்

8. மண்பாண்டம் செய்தல்

9. கிணறு தோண்டல்

10. தாழிகள் தயாரித்தல்

11. விறகு வெட்டுதல்

12. துணி தைத்தல்

13. பூ விற்றல்

ஆகியன வாயிலாக ஆராய்ந்து வெளிக் கொணரப்பட்டுள்ளன.

# மூன்றாம் இயல்

**உள்நாட்டு வாணிகம்:**

சங்க மக்கள் வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களை பெற்றுக் கொள்ள "பண்டமாற்று" முறையை பின்பற்றியுள்ளனர். பண்டமாற்று முறை என்பது சங்க மக்கள் தம்நிலத்தில் விளைந்த பொருட்களுக்கு மாற்றாக பிறநிலத்து விளைப் பொருட்களைப் பெற்றதாகும்.

இவ்வகையில் மீன் இறைச்சிக்கு மாறாக கள்ளை பெறுதல், தானியத்திற்கு மாறாக யானைத் தந்தத்தைக் பெறுதல், யானையின் தந்தத்திற்கு மாறாக கள்ளைப் பெறுதல், தேனிற்கு மாறாக கள்ளை பெறுதல், மான் இறைச்சிக்கு மாறாக கள்ளை பெறுதல், உப்பிற்கு பதிலாக நெல்லை பெறுதல், கள்ளுக்கு மாறாக முத்தைப் பெறுதல், முத்திற்கு மாற்றாக கள்ளை பெறுதல் ஆகியன வாயிலாக ஆராய்ந்து வெளிக் கொணரப்பட்டுள்ளன. காசிற்கு பொருட்களை விற்றல், காசினைக் கொடுத்து மதுபாட்டில் வாங்குதல்.

# நான்காம் இயல்

**வெளிநாட்டு வாணிகம்:**

சங்க மக்கள் பொருளாதாரத்தையும், தங்களிடம் விளங்கயி கலைத்திறனையும் வளர்க்க கடல் கடந்து சென்று வாணிபம் செய்யும் வழக்கத்தை மேற்கொண்டனர். இதனால் பல்வேறு மொழி அறிவைப் பெற்றிருந்தனர். வெளிநாட்டிலிருந்து யவனர் கொண்டு வந்த விளக்கு, குதிரை, கழுதை, சந்தனம், அகில், வட்டக்கல், மிளகு, ஆடைகள், உணவுதானியங்கள் ஆகியவை இவ்வியல் வாயிலாக ஆராயப்பட்டுள்ளது.

# ஐந்தாம் இயல்

**வாணிகர்களின் வாழ்க்கை முறை:**

சங்க மக்கள் பல்வேறு தொழில்கள் வாயிலாக கிடைத்த பொருளை திருவிழாகாலங்களில் தமது சுற்றத்தாருடனும், நண்பர்களுடனும் பகிர்ந்து அளித்து மகிழ்ச்சியுடன் பொண்டாடுவார்கள். இதனால் அறவு முறைகள் வளர்ந்தன. வாணிகர்கள் சடங்கு முறைகளுக்கு பெரும் பொருளை செலவு செய்து உறவுகளையும், நட்புகளையும் வளர்த்துள்ளன. இங்ஙனம் வாணிபர்களின் வாழ்வில் தொழிலும், வாணிகமும், பிண்ணிப் பிணைந்திருந்த செய்தியும் வாணிகர்களின் வாழ்க்கை நிலை உயர்ந்திருந்த நிலையும், இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

# இயல் – 1

# பெருந்தொழில்

**1.0. வேட்டையாடுதல்**

1.1. முள்ளம்பன்றி வேட்டையாடுதல்

1.2 மான் வேட்டையாடுதல்

**2.0. ஆநிரைமேய்த்தல்**

**3.0. உழவுத்தொழில்**

3:1 நன்செய் உழவு

3.1.1 ஏர் உழும் முறை

3.1.2 நாற்று நடுதல்

3.1.3 களை நீக்குதல்

3.1.4நெல் அறுத்தல்

3.1.5 நெல் போர் குவித்தல்

3.1.6 கரும்பு விளைச்சல்

3.1.7 வெல்லமும், சர்க்கரையும்

3.1.8 கரும்பு ஆலைகள்

**3:2:0 புன்செய் உழவு**

3:2:1 தினை

3:2:2 தினைப் புனம் காத்தல்

**4.0 மீன்பிடித்தல்**

4.1 கடல் தொழிலாளி

4.2 மீன் பிடிகலம்

4.3. முத்தெடுத்தல்

4.4. சங்கு மற்றும் முத்தினையெடுத்தல்

**5.0. நெசவுத்தொழில்**

5:1 நூல் நெய்வோர்

5:2 ஆடையும், தொழிலும்

5:3 ஆடையின் வகைகள்

5:4 துணிகளில் வேலைப்பாடு

**6.0. கட்டிடத்தொழில்**

6:1 ஓவியம் வரையும் தொழில்

6:2 சார் தொழில்கள்

6:3 தச்சன்

6:4 தச்சுத்தொழில்

6:5 தச்சுத்தொழிலில் ஓவிய வேலைப்பாடு

6:6 கொல்லன் தொழில்

**7.0. களவு தொழில்**

7.1 வேடர் வழிபறி செய்தல்

# பெருந்தொழில்

சங்க இலக்கியத்தில் பெருந்தொழில்கள் என்பது ஐந்திணைகளில் உள்ள முதன்மையான தொழில்களையே பெருந்தொழில்கள் என்பதை இவ்வாய்வுக் கட்டுரை வாயிலாக வெளிக்கொணரப்பட்டுள்ளது. இவ்வாய்வுக் கட்டுரையில் முதன்மைத் தொழிலான வேட்டையாடுதல், ஆநிரைகளைக் மேய்த்தல், உழவுத்தொழில், மீன்பிடித்தல், முத்துக்குளித்தல், களவு போன்ற தொழில்களையே பெருந்தொழில்கள் என்று வரையறுத்து கூறப்படுகிறது.

''வெ.கனகசபையார் ஒருவகை சாதி பாகுபாட்டை குறிப்பிடுகிறார். அவர் உழவர், ஆயர், பொற்கொல்லர், போன்ற தொழிலாளர், வலையர், புலையர், ஆடு, மாடு வெட்டுவோர் அரசாணை மேற்கொண்டு கொளை தண்டனை நிறைவேற்றுவோர்.

சங்க இலக்கிய பாடல்களில் பெருந்தொழில்கள் யாவும் மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ வழி வகைச் செய்துள்ளன. அத்துடன் கலைகளையும் வளர்க்க ஒரு ஊன்று கோலாக பெருந்தொழில் அமைந்துள்ளது. ஒரு நிலத்தின் பெருந்தொழில்கள் யாவும் தமிழனின் பெருமையும் அதனுடைய சிறப்பையும் சங்க புலவர்கள் பாடிய சங்க பாடல்கள் எடுத்துக்காட்டாக உள்ளது.

நெசவுத்தொழில்கள் வீடுகட்டுதல், சமைத்தல் ,மற்றும் பிறத்தொழில்கள் வாழ்க்கைக்கு அடிப்படைத்தேவைகள், வசதிகள், இன்ப சாதனங்கள் என்பவற்றை ஆக்கித்தந்தன. அவையெல்லாம் கைத்தொழில் வாணிகம் ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தனர்.

விவசாய பொருளாதாரமே சிறப்பாகவும், முதன்மையாகவும் கைத்தொழில் உழவு தொழிலுக்கு உட்பட்டதாகவும் இருந்தது. நெசவுத் தொழில் இப்போது போல உழவர்களின் பகுதி நேர அலுவலகமாயிருந்தது. அவை ஒரு சிலருக்கு முழு நேரமாகவும் இருந்தது''[1]

சங்க கால மக்கள் தங்கள் வாழ்க்கையில் பொருட்களையும் செல்வங்களையும் தேவைக்கு ஏற்ப வைத்துக் கொள்வதுடன் மீதமுள்ளதை வாணிக நோக்கத்துடனும் தங்களுக்கு தேவையான பொருட்களை பெறவும் பண்டமாற்று முறையில் செயல்பட்டுள்ளனர். அதனால் பெருந்தொழில்கள் வளர்ச்சிப்பெற்றிருந்தன. இவ்வகையான பெருந்தொழில்கள் தான் உள்நாடு மற்றும் வெளிநாடுகளுடன் வாணிகத் தொடர்பு ஏற்பட வழிவகை செய்துள்ளது என்பதை சங்க இலக்கிய பாடல்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடியும்.

சங்க கால சமுதாயத்தில் கல்வி வளர்ச்சி பெற்றிருந்ததால் தொழில் வளம் பெருகியது. அத்தொழில் வளத்தை அடிப்படையாகக் கொண்டு மக்கள் தங்களுடைய பொருளாதார நிலையை உயர்த்திக் கொண்டனர். அதன் மூலம் வாழ்க்கையைச் செம்மையான முறையில் வாழ வழி வகைச் செய்து கொண்டனர் பெரும்பான்மையான மக்கள் செய்து வந்த தொழில்களை பெருந்தொழில் என்று அழைத்தனர். இத்தகைய சங்கால பெருந்தொழில்களை விரித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## 1.0. வேட்டையாடும் தொழில்

குறிஞ்சி நிலத்தில் உள்ள முதன்மையான தொழிலே வேட்டையாடும் தொழில் ஆகும். இத்தொழிலினால் கிடைக்க கூடிய பொருட்களை தங்களுக்கு தேவையான அளவு வைத்து மீதமுள்ளவைகளை பண்டமாற்று முறைகளிலும் விற்றுள்ளனர்.

**"மான்அடி பொறித்த மயங்கு அதர் மருங்கின்**
**வான்மடி பொழுதில் நீர் நடைஇக் குழித்த**
**அகழ் சூழ் பயம்பின் அகத்து ஒளித்து ஒடுங்கிப்**
**புகழா வாகைப் பூவின் அன்ன**
**வளை மருப்பு ஏனவரவு பார்ததிருக்கும்**
**அரை நாள் வேட்டம் அழுங்கின்"[2]**

எனப் பெரும்பாணாற்றுப்படையில் குறிஞ்சி நிலத்தில் காலடித்தடம் அழுந்திக் கிடக்கும். மலையில்லாக் காலத்தில் அகழப்பட்ட குழிகளில் நீர் அருந்த வரும் பன்றியை வேட்டையாடிவிடலாம் என்று எதிபார்த்து இருக்கின்றனர் என்று இப்பாடல்வரிகள் விளக்குகின்றன.

**பகுவாய் ஞமலியொடு பைம் புதல் எருக்கித்**
**தொருவாய் வேலித் தொடர் விலை மாட்டி**
**முள் அரைத் தாமரைப் புல் இதழ் புரையும்**
**நெடுஞ் செவிக் குதுமுயல் போக்கு அற வளைஇ**
**கடுங்கண் கானவர் கடறு கூட்டுண்ணும்**
**அருஞ் சுரம் இறந்த அம்பர்.[3]**

எனப் பெரும்பாணாற்றுப்படை வேட்டை நாய்களுடனே பசுமையான புதர்களை வேலியால் சூழப் பெற்றன.அங்கு பின்னிய வலையைப் பொருத்தி முள்ளினைத் தன் தண்டிலே கொண்ட கானவர் யானையைப் பிடிக்க விரும்பி வளைத்துக் கொண்டு ஆரவாரிப்பர். முள்ளம் பன்றியை வேட்டையாடச் சென்று அது தம்மைக் குத்தியதனாலே ஏற்பட்ட வருத்ததினால் கானவர் அழுவர். அந்த புண்ணை ஆற்ற கொடிச்சியர் பாடுவர் என்று கூறப்படுகிறது.இதில் வேட்டையாடும் தொழில் கடுமையனது என்று எடுத்துரைக்கின்றன.

**"அரவு இரை தேரும் ஆர் இருள் நடு நாள்**
**இரவின் வருதல் அன்றியும் – உரவுக் கணை**
**வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி,**
**உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொரு,**
**மனைவாய் ஞமலி ஒருங்கு புடை ஆட,**
**வேட்டு வலம் படுத்த உவகையன்''[4]**

என நற்றிணை வலிய கையை உடைய கானவன் கொடுமைமிக்க அம்பை எய்து நெஞ்சிடத்தே பாய்ச்சிக் கொன்ற முள்ளம்பன்றியை கொண்டு வந்து மனையிடத்தே கொடுத்தான்.அங்குள்ள நாய்கள் எல்லாம் ஒரு சேரப் பக்கத்திலே குரைத்து விளையாடி வர வேட்டையிலே வெற்றியடைந்த மகிழ்ச்சிக்குரியவனாக இருப்பான் என்று விளக்கியுள்ளது.

## 1.1. முள்ளம் பன்றி

குறிஞ்சி நிலக் குடும்பத் தலைவன் கையில் வில்லுடனும் வலிமை வாய்ந்த அம்புடனும் வேட்டைக்குச் சென்று முள்ளம் பன்றியின் நெஞ்சில் அம்பை பாய்ச்சி வீழ்த்துவான்என்பதை,

**"கானவன் எய்த முளவு மான் கொழுங் குறை''[5]**

என நற்றிணை வாயிலாக ஆண்பன்றி திணையை அழிப்பதால் அதனை வேட்டையாடிய செய்தியை அறியலாம். இதே கருத்தினை

**"பிணர்ச் சுவற் பன்றி தோல் முலைப் பிணவோரு**
**கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்**
**கல் அதர் அரும் புழை அல்கி, கானவர்**
**வில்லன் தந்த வெண்டு கோட்டு ஏற்றை''[6]**

என நற்றிணை ஆண் பன்றியும், பெண் பன்றியும், சேர்த்து தினையை அழிப்பதால் கானவன் ஆண்பன்றியை வில்லினால் கொன்று கொடிச்சியிடம் கொடுப்பானாம்.

**சேணோன் அகழ்ந்த மடிவாய்ப் பயம்பின்**
**வீழ் முகக் கேழல் அட்ட பூசல்''[7]**

என மதுரைக்காஞ்சி பொய்க்குழி செய்து கானவர் ஆண் பன்றியைக் கொல்வர் என்பதைக் குறிக்கிறது.

## 1.2 மானை வேட்டையாடுதல்

கள் உண்ட மறவர்கள் மானை வேட்டையாடி உண்பார்கள் என்பதை,

**"விசைத்த வில்லர், வேட்டம் போகி,**
**முல்லைப் படப்பைப் புல்வாய் கெண்டும்**
**காமர் புறவி னதுவே.''[8]**

என அகநானூற்று முல்லை நிலஞ் சூழ்ந்த குன்றின் அடிவாரத்தில் உள்ள சிற்றூரில் தெறித்து எய்யும் அம்பினையும், இழுத்துக் கட்டிய நாணையுடைய வில்லையும், மரவர்கள் தினைக் கொண்டு சமைத்த கள்ளினை உண்டு வேட்டைக்குச் சென்று முல்லை நிலத் தோட்டத்தில் மானை அடித்து தின்பர்.

## 2.0 ஆநிரைகளை மேய்த்தல்

முல்லை நிலத்தில் வாழக்கூடிய மக்கள் ஆநிரைகளை வளர்த்தலை தொழிலாகச் செய்து வந்துள்ளனர்.

**"மழை விளையாடும் குன்று சேர் சிறுகுடிச்**
**கறவை கன்று வயன் படர, புறவில்[9]**

என குறுந்தொகை ஆநிரைகளை மேய்த்தலைக் குறிக்கிறது. மேகங்கள் தவழ்ந்து திரிதற்கு இடனாகிய மலைச் சார்ந்த சிற்றூரின்கண் தன்னுடைய கன்றுகளை நினைத்து ஆநிரைகள் வருந்துமாம்.இக்கருத்தினையே,

**"புலம்பயிர் அருந்த அண்ணல் ஏற்றொரு**
**நிலம்தூங்கு அணல வீங்குமுலைச் செருத்தல்**
**பால் வார்பு குழவி உள்ளி நிரை இறந்து,[10]**

என குறுந்தொகை பசுக்கள் தம் கன்றினை எண்ணி, மாலைக்காலம் வந்தவுடன் திரும்பி வந்துவிடும் என்று குறிக்கிறது.

**"மென்புலத்து வயல் உழவர்**
**வன்புலத்து பகடுவிட்டு [11]**

என்ற புறநானூற்று மென்புலமாகிய மருத நிலத்து வயல்களில் தொழில் புரியும் உழவர் வன்புலமாகிய முல்லை நிலத்தே தம் எருதுகளை மேய்வதற்கு விடுவார்கள் என்கிறது.சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் ஆடு வளர்த்தலை இறைச்சிக்காகவும் வருமானத்திற்குகாகவும் வளர்த்துள்ளனர் இதனை,

**"பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய**
**பாலொடு வந்து கூழொடு பெயரும்,**
**ஆடுடை இடைமகன் சென்னிச்"[12]**

என குறுந்தொகை பறிஓலையைக் கையில் கொண்ட இடையர்கள் தங்களுடைய செம்மறியாட்டு இனங்களுடன் ஊர்க்கண் வராது

கானகத்திலேயே தங்கினர். ஆடுகளைத் தமக்குச் செல்வமாக உடைய இடைக்குடியில் பிறந்த மகன், ஊர்ப்பகுதியில் உள்ள மனைகளுக்குப் பாலைக் கொண்டு வந்து தந்து திரும்புங்கால் உணவைப் பெற்றுச் செல்வான் என்று இப்பாடல் விளக்குவதில் இருந்து ஆட்டுப்பாலையும் பயன்படுத்தியுள்ள விதம் தெளிவகின்றது.

**"தகர் விரவு துருவை வெள்ளையாடு விரைஇ**
**கல்லென கடத்திடைக் கடலின் இரைக்கும்**
**பல்யாட்டு இனிநிரை எல்லினிர் புகினே"[13]**

என்று மலைப்படுகடாம் செம்மறியாடு, வெள்ளாடு ஆகியவை கூடியிருக்கின்ற காட்சி இப்பாடல் உணர்த்துகின்றது.

**"ஆர்கலி முனைஇய கொடுங்கோல் கோவலர்**
**ஏறுடை இனநிரை வேறுபலம் பரப்பி**
**புலம்பெயர் புலம்பொடு கலங்கி, கோடல்**
**நீடு இதழ்க் கண்ணி நீர் அலைக் கலாவ**
**மெய்க் கொள் பெரும்பனி நலிய பலருடன்**
**கைக் கொள் கொள்ளியர் கவுள் புடையூஉ நடுங்க"[14]**

என்ற நெடுநல்வாடை பருவம் பொய்க்காமல் உரிய காலத்தில் மழையைத் தரும் மேகங்கள் தாங்கள் கிடந்த மலைப்பகுதியை வலமாகச் சூழ்ந்து மேலேழுந்தன. உலகமெல்லாம் குளிரும்படி இருக்கும் பொழுது இடையர்கள் தங்கள் பசு, ஆடு, எருமை, முதலிய விலங்குகளை வருத்தும் கோலினை எப்பொழுதும் கைகளில் வைத்திருப்பர். தங்களுடைய மேய்ச்சல் தொழிலுக்கு மழை இடையூறாக இருப்பதால் மழை நீரால் தோன்றும் பெருவெள்ளைத்தை அவர்கள் வெறுத்தனர். அவ்வெள்ளத்திலிருந்து தங்கள் விலங்குகளைக்

காக்க விரும்பிய அவர்கள் மேட்டு நிலப்பகுதியாகிய முல்லை நிலத்தில் அவற்றை மேய விட்டனர். தாங்கள் பழகிய நிலப்பகுதியை விட்டு வேற்று நிலங்களுக்கு வந்த தனிமைத் துயரம் அவர்களை வருத்தியது என்ற செய்தியை குறிப்பிடுகிறது.

## 3.0 உழவுத் தொழில்

நிலத்தை உழுது பண்படுத்தி விளைச்சலுக்கு ஏற்ற நிலமாக அமைப்பது உழவுத் தொழில் எனப்பெயர் பெற்றது. மனித வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத இத்தொழிலைக் குறித்து சங்கப்புலவர்களில் இருந்து இன்றைய புலவர்கள் வரை எடுத்தியம்பி வந்துள்ளனர். உழவுத் தொழிலைச் செய்பவர்கள் உழவர்கள். இவர்கள் மருத நிலத்தைச் சார்ந்தவர்கள் என்பதனை,

**பழம்பல் நெல்லின் ஊனூர்**[15]

என்ற அகநானூறு நெல்மிக்க ஊரை உடையவர்கள் என்று பறைசாற்றுகிறது.

**கண்படை பெறா அது தண்புலர் விடியல்**
**கருங்கண் வராஅல்பெருந்தடி மிளிர்வையொடு**
**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு**
**கவர்படு கையை கழும மாந்தி**
**நீர் உறுசெறுவின் நாறுமுடி அழுத்த நின்**
**நடுநரோடு சேறி ஆயின் அவண**[16]

என்ற நற்றிணை எடுத்தியம்புகிறது. இவர்கள் தங்கள் நிலங்களை பண்பட்ட நிலமாக மாற்றினர். பெருமளவில் விளைச்சலைத் தரக்கூடிய நிலம் என்பதற்கு அங்குள்ள நெற்கதிர்கள் முற்றிய நிலையில் வளைந்து நிற்கும் காட்சியே சான்று.

**அங்கண் அகல் வயல் ஆர் பெயல் கலித்த**
**வண் தோட்டு நெல்லின் வருகதிர்**[17]

என்ற நெடுநல்வாடை அகன்ற வயல் வெளிகளில் உயரமாக வளர்ந்த வளமான இலைகளையுடைய நெற்பயிர்களின் கதிர்கள் முற்றி வளைந்த நிலையினை எடுத்துரைக்கின்றன. அத்துடன் உழவுத்தொழில் எல்லாத் தொழில்களுக்கும் முதன்மை ஆதாரமாக விளங்கியது என்ற செய்தியையும் விளக்குகிறது. அப்படிபட்ட உழவு முறையை இரண்டு வகையாக பிரிக்களாம்.அவை

**1. நன் செய் உழவு**

**2. புன்செய் உழவு**

## 3.1 நன்செய் உழவு

பரந்துப்பட்ட நிலத்தை உழுது நீரைப்பாய்ச்சி பயிர் விளைச்சலை உண்டாக்க கூடியதாக அமைத்திருப்பது நன்செய் உழவாகும்.

**உண்வு எனப்படுவது நிலத்தொடு நீரே,**
**நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**
**உடம்பும் உயிரும் படைத்திசினோரே,**
**வித்தி வான் நோக்கும் புன் புலம் கண் அகன்**
**வைப்பிற்று ஆயினும், நண்ணி ஆளும்**
**இறைவன் தாட்கு உதவாதே, அதனால்,**
**நலன் நெளி மருங்கில் நீர்நிலை பெருகத்**
**தட்டோர் அம்ம இவண் தட்டோரே**[18]

என்கிறது புறநானூறு. நீர்வளம் மிகுதியாதலே நாட்டிற்குத் தேவையான ஒன்று. ஒரு மனிதனுக்கு உயிர் வாழ உணவு எவ்வளவு தேவையே அதனை போல நிலத்திற்கு நீர் உயிர் போன்றது. அப்படிப்பட்ட நீரை தேக்கி வைத்து பண்பட்ட நிலமாக உழுது நீரைப் பாய்ச்சி நெல் சாகுபடிக்கு ஏற்ற நிலமாக இருப்பது நன்செய் நிலமாகும். நீர் வளம் இல்லையேல் அவை புன்செய் நிலம் என்று இப்பாடல் வரிகள் எடுத்துரைக்கிய்றன. நன்செய் நிலத்தில்,

**காய் செந்நெல் கதிர் அறுத்து**
**கோள் தெங்கின், குலை வாழை,**
**காய்க் கமுகின் கமழ் மஞ்சள்,**
**இனமாவின், இணர்ப் பெண்ணை,**
**முதற் சேம்பின், முளை இஞ்சி**
**அகல் நகர் வியன் முற்றத்து**[19]

எனப் பட்டினப்பாலை குலைகளையுடைய தென்னை குலைகளையுடைய வாழை, முற்றியக் காய்களை கொண்ட பாக்கு மரங்கள், மணம் வீசும் மஞ்சள், பல்வேறு மாமரங்கள், குலைகளையுடைய பனைமரங்கள், அடிப்பகுதி பருத்து விளங்கும் சோம்பு, முளைகளையுடைய இஞ்சி ஆகியவற்றின் விளையுள் நீங்காத வயல்களை கொண்ட நாடு என்று நாட்டின் வளத்தை எடுத்துரைக்கிறது.

### 3.1.1 ஏர் உழும் முறை

சங்க காலத்தில் தேர்ந்தெடுத்த எருதுகளைக் கொண்ட உழவர்கள் நெடிய நெற்பயிரினை நட்ட வயல்களிலுள்ள ஏர்களையும், கட்டிகளை உடைய தோட்டத்தில் மண் பிறழும்படி அரிதாளையுடைய நிலம் பிளவுபடும்படி உழுதனர். அவர்கள் ஏர் உழும் போது எழும் ஓசையானது அனைத்து இடத்திற்கும் பரவியது. சங்க மக்கள் நெல் விளைவிக்க முதலில் மாடுகளினால்

நிலத்தை மிதிக்க விடுவர். சேற்றினைக் காலால் மட்டப்படுத்துவர்; நாற்று நடுவர்; களை பறிப்பர்; அறுவடை செய்வர்; நெற் கட்டுகளைக் களத்தில் சேர்ப்பர்; சூடு மிதிப்பர்; காற்றிலே தூற்றுவர். இவ்வாறு நெல் விளைவிதத்ல் பற்றிய செய்திகள் நிரல்பட சங்க இலக்கியத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

நெல்லை அரிகாலில் விளைவிக்கப் பெற்ற பெரும்பயறு பெற்றுச் செல்வாள். இன்னொருத்தி உழவன் மகள் குருக்கத்தி, பித்திகை ஆகிய மலர்கள் நிறைந்த கூடையைக் கையில் எடுத்துக் கொண்டு தெரு மக்கள் தோறும் விற்கச் செல்வாள். இது உழவுக் குடும்பத்தில் வணிகப்பணி புகுந்த பாங்கை தெளிவுப்படுத்தும். நெய்தல்நிலப்பாண்மகள் கூடையில் மீனைக் கொணர்ந்து மருதநிலத்துக் குடும்பத் தலைவியிடம் விரால் மீனைக் கொண்டு வந்து கொடுத்துப் பழைய நெல்லைப் பெற்றுச் செல்வாள் பிறிதொருத்தி கொஞ்சமாக மீன் கொடுத்து நிறைந்த நெல்லைப் பெற்றுச் செல்வாள்.

சங்க காலத்தில் மருதநில வாழ்வு மையப்படுத்தப்பட்டு, பிற நில வாழ்வு அதை நோக்கியதாக மாற்றி அமைக்கப்பட்டது. சமூக வளர்ச்சி வாழ்நிலைகளை இணைத்துச் செல்லும் பரந்த நிலைக்குச் சென்றதையே காட்டுகிறது. மனிதக் குழுக்களின் வாழ்வுத் தேவைகள் மருத நிலத்தை நோக்கி நிறைவடையத் தொடங்கின. இது பொது அளவில் பொதுச்சமூகத் தோற்றத்திற்குக் காரணமாய் அமைந்தது. இதுவே மருதநிலக் குடும்பங்களுக்குச் சமூகத் தலைமையையும் அளித்தது எனலாம்.

வலையர், வலையில் பிடித்த வாளை, மருத நிலத்தில் தூண்டிலில் பிடித்த வரால் மீன்களை நெற்களங்கள் தோறும் காலையில் பாண் மகளிர்கள் கொண்டு சென்று விற்றுக் கொண்டிருப்பர். இவற்றின் துண்டங்களுடன் கள்ளையும் வழிச் செல்வோருக்குத் தருவர்.

பொருளியல் நிலையில் நெய்தல் நில வாழ்க்கையை வணிக வாழ்க்கை எனலாம். நெய்தல் நிலக்குடும்பங்களுக்கும் வணிகத்துக்கும் மிகுந்த தொடர்புண்டு. நெய்தல் நிலமக்கள் நுளையர், பரதவர், வலைஞர் என அழைக்கப் பெறுவர். 'நுதிவேல் நோக்கி நுளைமகள்' 'கொடுத்திமில் பரதவர்' 'கொடுமுடி வலைஞர்[20] என்ற தொடர்கள் அவர் தம் மீன்பிடிக்குத் தொழிலையும் சுட்டி நிற்கின்றன.

**......................... ஞாங்கர்க்**

**குடி நிறை வல்சிச் செஞ்சால் உழவர்**

**நடை நவில் பெரும்பகடு புதவில் பூட்டி**

**பிடி வாய் அன்ன மடிவாய் நாஞ்சில்**

**உடுப்பு முக முழுக் கொழு மூழ்க ஊன்றி**

**தொடுப்பு எறிந்து உழுத துளர் படு துடவை**

**அரிபுகு பொழுதின் இரியல் போகி**

**வண்ணக் கடம்பின் நறு மலர் அன்ன**

**வளர் இளம் பிள்ளை தழீஇ, குறுங்கால்**

**கறை அணல் குறும்பூழ், கட்சிக் சேக்கும்**

**வன்புலம் இறந்த பின்றை.[21]**

என்றபெரும்பாணாற்றுப்படை முல்லை நிலத்தை விளக்குகிறது. சற்று மேல் பரப்பில் உள்ள நிலப்பகுதியில் வாழும் உழவர்கள், உணவுப் பொருள்கள் நிறைந்த வீடுகளையுடையவர்கள், அவர்கள் தம் நிலத்தைச் செப்பமான சாலாக உழுதல் செய்வர். உழவுத் தொழில் நன்கு பயின்ற பெரிய எருதுகளைக் குடிலின் முற்றத்திலேயே நுகத்தில் பூட்டிக் கொண்டு சென்று, பெண் யானையின் துதிக்கைப் போல் வளைந்த கலப்பை உடையதும் உடும்பின் முகத்தை போன்ற கொழு அமைந்திருப்பதும் ஆகிய ஏரினை ஓட்டிச் செல்வர். அங்கு நிலத்தில் முறைப்படி உழுது விதைகளை விதைத்துக் செந்நெல் தாழ் வளர்ந்து நிர்க்கும்

பொழுதுகளை கட்டுப் பயிர் செய்வர். அறுவடைக் காலத்தே செய்யும் ஆரவாரத்தைக் கண்டு அப்பயிரிடையே வாழ்ந்து கொண்டிருந்த, குறுங்காலினையும் கரிய கழுத்தினையும் உடைய கரிச்சான் குருவி, வெள்ளிய நறுமணம் கொண்ட வெண்ட கடம்பப் பூவை ஒத்து தன் வளரும் குஞ்சுகளுடன் தாய்ப் பறவை காட்டிற்குச் சென்று தங்கும். இத்தகைய இயல்பினது வன்னிலம்.

**நெடுநெல்லடைச்சிய கழனி ஏர் புகுத்து,**
**குடமிக் கட்டிய படப்பையொடு மிளிர,**
**அரிகால் போழ்ந்த தெரி பகட்டு உழவர்**
**ஓசைத் தெள்விளி புலம் தொறும் பரப்ப**[22]

என்று அகநானூறு விளைநிலத்தைக் குறிப்பிடுகிறது. நறுமணம் கமழும் அகிலையும் சந்தனத்தையும் வெட்டி, மேட்டு நிலத்தே விதைத்த, கதிர்களை உடைய தோரை நெல்லும் நெடிய தாளினை உடைய வெண் சிறுகடுகும், ஐவனவெண்ணெல் என்னும் வெண்மைநிற நெல்லொடு பிணங்கி வளர்ந்த இஞ்சியும், மஞ்சளும், பசிய நிற மிளகுக் கொடியும் ஏனைய பலவேறுப்பட்ட பண்டங்களும் கல் தரையிடத்தே குவிக்கப்படடிருந்தன என்பதை

**நறுங் காழ் கொன்று கோட்டின் வித்திய**
**குறுங் கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி**
**ஐவன வெண்ணெலொடு அரில் கொள்பு நீடி**
**இஞ்சி மஞ்சள் பெங்கறி பிறவும்**
**பல்வேறு தாரமொடு கல்லகத்து ஈண்டி**[23]

என்ற மதுரைக்காஞ்சி தெளிவாக எடுத்துரைக்கிறது.

**“வாலிதின் விளைந்தன்ன ஐவனவெண்ணெல்**[24]

என்று மலைபடுகடாம் வெள்ளித்தாள் அரியப்பட்ட வயல்களில் ஐவனநெல்லும் வெண்ணெல்லும் நன்கு விளைந்தன என்று குறிக்கிறது.

**காயம் கொண்டன இஞ்சி [25]**

என்று இஞ்சி கிழங்குகள், ஒப்பனை செய்யமுடியாத பாவை போன்ற வடிவத்துடன் அழகு முதிர்ந்த உறைப்பு உடையதாய் வளர்ந்தன என்றும்

**துறுகல் சுற்றிய சோலை வாழை[26]**

என்று வாழையின் முறைப்பட மலர்ந்த பூக்கள் தவிர, உதிராத வாழையின் பூ, மலைப்பகுதியில் பாறைகளில் தன் வாழைக் குலைகளை ஈனும் என்றும், ஊடு பயிர்களும் கழனிகளில் விளைந்ததை மலைபடுகடாம் எடுத்துரைக்கிறது.

மருதம் நிலத்திற்கு சற்று மேல்பரப்பில் உள்ள நிலப்பகுதியில் வாழும் உழவர்கள் உணவுப் பொருள்கள் நிறைந்த வீடுகளையுடையவர்கள் . அவர்கள் தம் நிலத்தைச் செப்பமான சாலாக உழுதல் செய்வர். உழவுத் தொழில் நன்கு பயின்ற பெரிய எருதுகளைக் குடியின் முற்றத்திலேயே நுகத்தில் பூட்டிக் கொண்டு சென்று பெண் யானையின் துதிக்கைப் போல் வளைந்த கலப்பை உடையதும் உடும்பின் முகத்தை போன்ற கொழு அமைந்திருப்பதம் ஆகிய ஏரினை ஓட்டிச் செல்வர் அங்கு நிலத்தில் அச்சு மறையும்படி உழுது விதைகளை தூவி முற்றி வளைந்து நின்று அறுவடைக் காலத்தே செய்யும் ஆரவாரத்தைச் செய்வர். அப்பயிரிடையே வாழ்ந்த கொண்டிருந்த குறுகியகாலினையும் கரிய கழுத்தினையும் உடைய கரிச்சான் குருவி வெள்ளிய நறுமணம் கொண்ட வெண்கடம்பப்பூவை ஒத்து வளரும் என்பதை மலைபடுகடாம் எடுத்துரைக்கிறது.

### 3.1.2 நாற்று நடுதல்

உழவர்கள் வயலை ஆண்ஏறுகள் வைத்து உழுது அதன்பின் நாற்று நடும் வேலையை செய்தனர் என்பதை,

**கார் ஏறு பொருதகண் அகன் செறுவின்,**
**உழாஅ நுண் தொளி நிரவிய வினைஞர்**
**முடிநாறு அழுத்திய நெடுநீர்ச்செறுவில்**[27]

என்ற பெரும்பாணாற்றுப்படை உணர்த்துகிறது. கொல்லனுடைய தொழிலுக்கு ஒத்த காலையுடைய, நண்டின் வளை சிதையும்படி பசிய கோரையை குத்திக் கோட்டு மண்கொண்ட ஆனேறுகள் தம்முள் போரிட்டமையால் சேறாகிய வயலின் கண் அந்தச் சேற்றைச் சமம்பட மிதித்த உழவர் நாற்றை நட்டனராம்என்ற கருத்தை வெளி கொணர்கின்றது.

### 3.1.3 களைகளை நீக்குதல்

சங்க கால மக்கள் உழவின் சிறப்புகளை எடுத்துரைக்க களையெடுக்கும் தொழிலை செய்துள்ளனர்.இதனை

**கைவினை மாக்கள் தம் செய்வினை முடிமார்**[28]

என்று குறுந்தொகையில் கையால் களையெடுக்கும் தொழிலைச் செய்வோர் கைவினை மாக்கள் எனப் பெற்றனர் என்ற குறிப்பை தருகிறது.

**களைஞர் தந்த கணைக்கால் நெய்தற்**
**கள்கமழ் புதுப்பூ முனையின்**[29]

என்ற பெரும்பாணாற்றுப்படை உழவர்கள் வயலில் வேலை செய்து கொண்டிருக்க உழவர்களின் பிள்ளைகள், நெய்தல் மலரைச் சூடுவர் என்று கூறுவதில் இருந்து உழவர்களே களை பறிக்கும் செயலையும் செய்துள்ளனர் என்ற செய்தி புலனாகின்றது.

### 3.1.4 நெ[illegible]லறுத்தல்

உழவர்கள் நெல் முற்றியப் பின் அதனை அறுவடைச் செய்தனர். இச்செயல்கள் பற்றி,

**தூம்புடைத் திரள் தாள் துமித்த வினைஞர்**
**பைது அற விளைந்த பெருஞ் செந்நெல்லின்**[30]

என்ற பெரும்பாணாற்றுப்படை உழவுத்தொழில் செய்பவர்கள் பசுமை நீங்கும்படி முற்றி பெரிய செந்நெல்லின் உட்புறம் வெற்றிடமாக உள்ள தூம்புடைத் தாளினை அச்சிறுவர் அறுக்கும் தொழில் செய்வர் என்று எடுத்துரைக்கிறது.

**வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ,**
**கண்மடல் கொண்ட தீம் தேன் இரிய,**
**கள் அரிக்கும் குயம்**[31]

என்கிறது புறநானூறு. நெல்லை அறுபவர் நெற்கதிர்களோடு வண்டுகளையும், தேன் கூடுகளையும் அம்குறுவாளால் அரிவர்.

**பழன மஞ்ஞை உகுத்த பீலி**
**கழனி உழவர் சூட்டொடு தொகுக்கும்**[32]

என்ற புறநானூறு வயலில் மயில் உதிர்ந்த தோகைகளை உழவர்கள் அரிந்த நெற் கதிர்களோடு சேர்த்துக் கட்டுவர் என்று எடுத்துரைக்கிறது.

**வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்**
**தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை**[33]

என்ற அகநானூறு கழனியில் நெல் அரியும்போது, பணியிடைக் களைப்பு தீர்வதற்கு பறை இசைப்பர் என்ற குறிப்பைத்தருகிறது.

**அள்ளல் தங்கிய பகடு உறு விழுமம்**
**கள் ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே**
**ஒலிந்த பகன்றை விளைந்த கழனி**
**வன் கை வினைஞர் அரிபறை**[34]

சேற்று வயலில் ஏர்களை ஈர்த்துச் செல்ல முடியாது நிற்கும் முதிய எருதுகளின் வருத்தத்தை போக்கக் கள்ளுண்ட ஆரவாரம் செய்தனர். பகன்றைக் கொடி படர்ந்துள்ள நெல் முற்றிய கழனிகளில் அந்நெல்லை அறுப்பவர் முழங்கும் பறை ஓசை அந்நிலமெங்கும் ஒலிக்கும் என்று மதுரைக்காஞ்சி குறிக்கிறது.

**வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ,**
**செங் கண் எருமை இனம் பிரிஒருத்தல்**[35]

என்று வெண்மையான நெல்லை அறுக்கும் உழவர் கொட்டின தடாரிபறை ஓசைக்கு அஞ்சி சிவந்த கண்ணையுடைய எருமை தன் கூட்டத்தை விட்டுப் பிரிந்துச் சென்று விடும்என்று மலைபடுகடாம் உரைக்கிறது.

**வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்**

**பழனப் பல்புள் இரிய**[36]

என்ற நற்றிணையும்,

**" கழி சுற்றிய விளைகழனி,**

**அரிப்பறையான் புள் ஓப்புந்து**[37]

என்ற புறநானூறு கழிகளாற் சூழப்பட்ட, நெல் விளைந்து கிடக்கும் வயலின் கண், அரித்த ஓசையை உடைய பறையை முழக்கி, கதிர்களைக் கவரவரும் புள்ளினங்கள் ஓட்டப் பெறும், என்று நெல்தொழில் பற்றி குறிப்பிடுகின்றன.

### 3.1.5 நெல்போர்குவித்தல்

உழவர்கள் நிலத்தைப் பண்படுத்தி உழுது, நாற்று நடுவர். நல்ல விளைச்சலுடன் அறுவடைக்கு உரியகாலம் வந்தவுடன் அதனை அறுவடை செய்து நெற்போராகக்குவித்து வைத்திருப்பர். அறுவடை செய்த அடுக்கி வைத்திருந்த நெற்தாளை கையில் பிடித்து அடித்து நெல்லில் உள்ள தூசிகளை நீக்கி நெற் குவியலாக குவித்து வைத்திருப்பர். நெல்போரைக் களத்தில் குவித்து கடாக்களைவிட்டு நெல்லைப் பிரித்தெடுத்தனர். ''நாவாலோ நாவாலோ என்று ஆரவாரத்துடன் முழங்குவான் என்று (சண்முக சுந்தரம் 1970) குறிப்பிட்டுள்ளார்[38].

இதனை,

**பகடு ஊர்பு இழிந்த பின்றை, துகள் தப,**

**வையும் துரும்பும் நீக்கி பைது அடி,**

**குடகாற்று எறிந்த குப்பை, வடபால்**

**செம்பொன் மலையின், சிறப்பத் தோன்றும்**

**தண்பனை தழீஇய, தளரா இருக்கை**[39]

என்று பெரும்பாணாற்றுப்படை உணர்த்துகிறது. பசுமை அறமுற்றிய பெரிய செந்நெல்லினுடைய உட்கூடு உடைய, திரண்ட தாளை அறுத்த உழவர்கள், பாம்புகள் கிடக்கின்ற மருத மரத்தின் நிழலிடத்தே அகன்ற களங்கள் நிறையும்படி நெல்லைப் போராகக் குவித்து வைப்பர். குவித்து வைக்கப்பட்ட அந்நெல் திரள், கைகளைக் கோத்துத் துணங்கை ஆடும் பூதங்கள் வெண்மையான துகில் உடுத்து நின்றாற் போன்று சிலந்தியின் நூல் பின்னப்பட்டு நிற்கின்றது. அந்நெற் போர்களினுடைய பெரிய அடியை வாங்கி விரித்து, கடா அடிப்பர். பின்னர் நெல்லின் கண் உள்ள துகள் அறும்படி வைக்கோல் தூசி முதலியவற்றை போக்கி உலர வைப்பர். பின்னர் கோடைக் காற்றிலே தூற்றிக் குவித்த நெற் குவியல்கள் வடதிசையின் கண்ணாகிய மேருமலையைப் போன்று காட்சியளிக்குமாம்.

**"காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே**[40]

என புறநானூறு நன்றாக முற்றி விளைந்த நெல்லை அறுத்து உணவாக சமைத்து உண்டனர் என்ற செய்தியைத் தருகிறது.

## 3.1.6. கரும்பு விளைச்சல்

சங்க மக்கள் நன்செய் நிலங்களில் பெரும்பாலும் நீரைப் பாய்ச்சி நெல் அல்லது கரும்பு சாகுபடிதான் செய்துள்ளனர். கரும்பை அதிகமாக சாகுபடி செய்தமையால் கரும்பின் சாறைப் பிழிந்து அதிலிருந்து வெல்லம் தயாரித்து வாணிபம் செய்துள்ளனர். கரும்பைச்சாறு பிழிய எந்திரமும் கையாளப்பட்டுள்ளது. கரும்பு சாகுபடி செய்யும் பொழுது ஊடு பயிராக மஞ்சள் இஞ்சி போன்றவற்றைப் பயிரிட்டுள்ளனர். கரும்பு சாகுபடியில் சங்க மக்கள் அதிகமாக ஈடுபட்டிருந்தமையை பின்வரும் கருத்துக்கள் தெளிவாகப் புலப்படுத்தும்.

### 3.1.7 வெல்லமும் சர்க்கரையும்

கொங்கு நாட்டில் தகடூர் வட்டாரத்தை அரசாண்ட அதியமனின் அரச பரம்பரையில் வெகு காலத்துக்கு முன்பு இருந்த ஒருவன் கரும்பைக் கொண்டு வந்து தமிழ்நாட்டில் பயிர்செய்தான் என்பதை,

**அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்**
**அரும்பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்**
**நீரக இருக்கை ஆழி சூட்டிய**
**தொன்னிலை மரபின் முன்னர்**[41]

என்று புறநானூறு சுட்டுகிறது. தொன்மையான மரபினையுடைய முன்னோர் தேவர்களைப் போற்றி வழிபட்டு கரும்பை பூமிக்குக் கொண்டு வந்து தந்தனர் என்று இப்பாடல் விளக்குகிறது. தமிழ் நாடெங்கும் கரும்புப் பயிர் செய்யப்பட்ட இடம் கரும்பின் பாத்தி என்றும், கரும்பின் கழனி என்றும், கரும்பின் பழனவெதிர் எனவும், சங்கப்புலவர் கூறியுள்ளார்கள்.

**அகல்வயல் கிளை விரி கரும்பின் கணைக்கால்**
**– வான்பூ**[42]

என அகநானூறு அகன்ற வயல்களில் கிளைகளோடு விரிந்த திரண்ட காம்பினையுடைய கரும்பினது வெண்ணிறப் பூக்கள் மழையில் நனைந்த நாரையைப் போல ஈரம் உடையனவாய் வளைந்து தோன்றின என்று குறிப்பிடும் பொழுது கரும்பினது சிறப்பு வெளிப்படுகிறது. இது போன்ற கருத்தை,

**அகல் வயல் நீடுகழைக் கரும்பின் கணைக்கால்**
**– வான்பூ**[43]

என அகநானூற்றின் மற்றொரு பாடலும் குறிப்பிடுகிறது.

**“விரிபூங் கரும்பின் கழனி**[44]

என பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்து பாடல் அடியும்,

**தேம் பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பு**[45]

எனக் குறுந்தொகை கரும்பின் பெருமையை உணர்த்துகின்றன. கரும்பைச் சாறு பிழியும் எந்திரங்களும் கருப்பஞ்சாற்றை வெல்லங் காய்ச்சும் ஆலைகளும் ஊர்கள் தோறும் இருந்தன. பாண்டி நாட்டுத் தேனூரில் கரும்பைச் சாறுபிழியும் எந்திரமும் வெல்லங்காய்ச்சும் ஆலையும் இருந்தன.

**கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும்**
**தேர்வண் கோமான் தேனூர்**[46]

என ஐங்குறுநூறு குறிக்கிறது. வெல்லத்தை ‘விசயம்’ என்றும் ‘கரும்பின் தீஞ்சேறு’ என்றும் குறிப்பிட்டதை,

**எந்திரம் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை**
**விசயம் அடூஉம் புகைசூழ் ஆலை தொறும்**
**கரும்பின் தீஞ்சாறு விரும்பினர் பெறுமின்**[47]

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. கரும்பின் இனிய சாற்றை முற்படக் குடித்துப் பின்னர் அக்கரும்பின் கட்டியைத் தின்பீராக என உரைத்ததாக பாடல் குறிப்பு உள்ளது.

**மழை கண்டன்ன ஆலைதொறும் ஞெரேரெக்**
**கழைகண் உடைக்கும் கரும்பின் ஏத்தமும்**[48]

என மலைபடுகடாம் குறிப்பிடுகிறது. திருவிழாக் காலத்தில் வீடுகளில் வாழைமரத்தையும் கருப்பங்கழிகளையும் கட்டி அலங்காரம் செய்துள்ளார்கள். அத்துடன் வெல்லத்தை மக்கள் அதிகமாகப் பயன் படுத்தியமையால் வெல்லங்காய்ச்சும் தொழிலும் ,கரும்பு பயிரிடும் விவசாயமும் ,சிறப்பான முறையில் நடைப்பெற்றுள்ளது.வெல்லத்தையும் சர்க்கரையும் விற்ற வாணிகருக்கு 'பணித வாணிகர்' என்று பெயர் ஆகும்.

## 3.1.8 கரும்பு ஆலைகள்

சோழ நாட்டில் உள்ள விளைநிலங்கள் விளைவு நீங்கப் பெறாதவை. அகன்றிருக்கும் கழனிகளில் கரும்புகள் விளைந்துள்ளன. அவற்றின் சாற்றை பிழிந்து காய்ச்சும் ஆலைகள் இருந்தன.

**விளைவு அறா வியன் கழனி**
**கார்க் கரும்பின் கமழ் ஆலைத்**
**தீத் தெறுவின் கவின் வாடி**[49]

என்ற பட்டினப்பாலை கரும்பு ஆலைகள் நிறுவி கரும்புச் சாற்றை காய்ச்சும் தொழிலை செய்துள்ளனர் என்ற செய்தியைத் தருகிறது.

## 3.2.0 புன்செய் உழவு

முல்லை நிலத்தை "புறவு" என்று கூறுவர். சோழன் நல்லுருத்திரன் முல்லை நிலத்தை வியன் புலம்" என்று குறிப்பிடுகிறார். இவை தண்புலம் என்று அழைக்கப்பட்டது.

**1. மணங்கமழ்புறவு**

**2."தண்கமழ்புறவின்முல்லை மலரா"**

**3. முல்லைக் கண்ணி பல்லான் கோவலர்**

**4. புல்லுடை வியன்புலம் பல்லாபரப்பி[50]**

முல்லை நிலமக்களின் தொழிலாக வரகுகளை கட்டலும், அவற்றை அறுத்தலும், மோர் விற்றலும், காவல் காத்தலும், உழவுத் தொழிலில் இரண்டாவது வகையான புன்செய் உழவுத் தொழில் பற்றி குறிப்பிட்டுள்ளது.

**சிறியிலை வேலம் பெரிய தோன்றும்**
**புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்**
**சீருடைப் பல்பக டொலிப்பப் பூட்டி**
**நாஞ்சி லாடிய கொழுவழி மருங்கின்**
**அலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன் கண் வைப்பினாடு[51]**

என்ற பதிற்றுப்பத்து சிறிய இலைகளையுடைய வேல மரங்கள் இருந்ததைக் குறிப்பிடுகிறது. மிகுதியாக காட்சியளிக்கும் புன்செய் நிலத்தில் விதைகளை விதைக்கின்ற வரிய கையை உடைய உழவர், பல எருதுகளை நுகத்தின் கண்ணே பூட்டி நிலத்தை உழுதனர். கலப்பை உழுத கொழுவினது படைச்சாலின் பக்கத்தே ஒளியுடைய அழகிய தானிய மணிகள் வளைந்து காணப்பட்டன அத்தகைய இடமகன்ற ஊர்களை உடைய நாடு எனக் குறிப்படுகின்றது.

**எருது லுறாஇளைஞர் கொன்ற**
**சில்வளை வரகின் புல்லென் குப்பை**
**தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்[52]**

என்ற புறநானூறும் உணர்த்துகிறது.இதில்

**சாலி நெல்லின் சிறைகொள் வேலி**
**ஆயிரம் விளையுட்டாக ஒயா**
**காவிரி புறக்கம் கிழவோயே**[53]

தினைப்புனத்தில் தான் தினையோடு கலந்து பருத்தியையும் விதைப்பர். தினை முதிர்ந்து அறுவடை செய்த பிறகு பருத்தியை அறுவடைச் செய்வர் என்றுபொருநராற்றுப்படையில் குறிப்பிடுகிறார்.

**புறவுக் கரு அன்ன புன்புல வரகின்**[54]

என்று புறாவின் கருவைப் போன்ற வரகு; புன்செய் நிலத்திலேயே விளைந்துள்ளது.

**புது வரகு அரிகால் கருப்பை பார்க்கும்**[55]

என்கிறது புறநானுறு வரகை அறுத்தப் பின் அரிகால் வளரவிடுவர். அதனால் அதிகமான விளைச்சலை பெறும் தொழில் நுட்பம் உடையவர்களாக இருந்தனர்.

**புன்புலச் சீறூர், நெல்விலையாதே,**
**வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**[56]

வரகை மிதித்து எடுப்பதற்கு மாடுகளைப் பயன்படுத்துதலே இயல்பு. இங்கு சிறுவர்களால் மிதித்தே எடுப்பர் என்பதனால் அளவு குறைவு என்பது பெறப்படுகிறது. புன்புலச்சிற்றூரில் நெல் விளையாது வரகுத் திணை மட்டுமே விளையும்.

**வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**
**இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தென**[57]

என புறநானூறு தம்மிடம் உள்ளவரகும், தினையும் இரவலர்க்கு வழங்கப்பட்டு விட்டதால் வரகுத் தினையினை அதிகமாக தன் நிலங்களில் உழவர்கள் விளைவித்தனர்என்ற செய்தியை தருகின்றது. பகைவர் நாட்டு மன்னன் ஊர்களையும் அரண்களையும் அழித்து கழுதை ஏரால் உழுது அந்நிலத்தில் வெள்ளை வரகும், கொள்ளும் விதைத்தல் தமிழ் வேந்தர்களுக்கு இயல்பாக இருந்துள்ளது.

**கடுந்தேர் குழித்தஞெள்ள லாங்கண்**
**வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்**
**பாழ் செய்தனை[58]**

என்ற புறநானூறு கழுதையை வைத்து ஏர் உழுது பகைவர் நாட்டின் புகழ்நிறைந்த விளைவயலைப் பாழ்செய்தாய் என்று புலவர் கூறுவது போல அமைந்துள்ளது.

**"வன் பாலான் கருங்கால் வரகின்[59]**

வன்புலமாகிய முல்லை நிலத்தில் வரகு விளைந்து நிற்கும்.

**உருகெழு மன்ன ராரெயில் கடந்து**
**நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்**
**தணங்குடை மரபி ணிருங்களந் தோறும்**
**வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி**
**வெள்ளை வரகுங் ணெகாள்ளும் வித்தும்**
**வைக லுழவ வாழிய[60]**

வெள்ளிய வாயை உடைய கழுதையாகிய புல்லிய நிரையைப் பூட்டி உழுது, வெள்ளை வரகும், கொள்ளும், குடைவேலும் விதைக்கும் இடையறாத போராகிய உழுதலைச் செய்ததை புறநானூறு வாயிலாக அறியலாம்.

**"கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே,**
**சிறுகொடிக் கொள்ளே,பொறிகிளர் அவரையொடு"**[61]

என அகநானூறு கரிய அடிப்பகுதியுடைய வரகு பயிர், பெரிய கதிர்களை உடைய தினை, சிறிய கொடியாக வளரும் கொள், புள்ளிகளைக் கொண்ட பூக்களால் பொலிந்து தோன்றும் அவரை, ஆகியவற்றை வரிசைப்படுத்துகிறது.

**இரும்பு கவர்வுற்றன பெரும்புன வரகே**[62]

தன் கையில் காணப்படும் இணைந்த விரல்களைப் போல வளர்ந்திருந்த வரகுகளின் இரட்டித்த கதிர்கள், முற்றி வளைந்த அரிவாளால் அறுக்கப்பட்டன.

**"வாலிதின் விளைந்த புது வரகு அரிய,**
**தினை கொய்ய, கவ்வை துகறுப்ப, அவரைக்**
**கொழுங் கொடி விளர்க் காய் கோட் பதம் ஆக**[63]

கதிரின் அடியும் தலையும் ஒழியாமல் வரகானது மிகக் காய்த்துச் சிறியதாக விளைந்தது. அவ்வாறு விளைந்த புதிய வரகை அறுக்கவும், தினையை அரியவும், எள்ளிக்காய், கொடி அவரையின் வெள்ளைக்காய் அறுக்கவும், அந்நாடு ஆரவாரம் உடைதாய் இருந்தது என்பதை புறநானூறு பதிவு செய்கிறது.

### 3.2.1. தினை

பெரிய மலையின் பக்கத்தில் ஐயன்மார் உழுது விதைத்த கரிய அடித்தண்டினை உடைய செவ்விய தினைக் கதிர்கள் யாவும் கொய்யப்பட்டன.

**இருங்கல் அடுக்கத்து என்னையர் உழுத**

**கருங்காற் செந் தினை கடியு முண்டன**[64]

என நற்றிணை எடுத்துரைக்கிறது.

## 3.2.2. மகளிர் தினைப்புனம் காத்தல்

மலைகளும் அதை சார்ந்துள்ள இடங்களும் குறிஞ்சி எனப்பட்டன. இவ்விடங்களில் "குறிஞ்சிச் மரம்" நன்கு வளர்ந்ததால் இப்பெயர் ஏற்பட்டது. குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்களைக் "குறவர்" என்றழைப்பர். குறவர்கள் சிறுகுடில்களை அமைத்துக் கொண்டு அவற்றில் வாழ்ந்தனர் என்பதை

**துறுகல் நண்ணிய கறியிலர் படப்பைக்**

**குறியிறைக் குரம்பை நம் மனைவரிற் புகுதரும்**[65]

என்ற அடிகள் விளங்குகின்றன. மலையைச் சார்ந்த இடங்களில் தினை மலைநெல் ஆகிய தானியங்களைக் குறவர்கள் பயிர் செய்தனர். பயிர்களை மான், யானை முதலிய விலங்குகள் மேய்ந்து அழித்தன. தினைக்கதிர்கள் முற்றும் போது கிளிகளும், குருவிகளும் கூட்டமாக வந்து கதிர்களைத் தின்னும். அவற்றை விரட்டியாக வேண்டும் காட்டுப்பன்றிகளும், யானைகளும் இரவில் கதிர்களைத் தின்னும் அவற்றைத் தடுக்கக் குறவர்கள் இரவும், பகலும் தங்கள் நிலங்களிலேயே காவல் இருப்பார்கள். மரங்களிலோ செயற்கையாகவோ பரண்களை அமைத்துக் கொள்வார்கள். தினைப்புனம் காப்பவன் பரண்மீது ஒளி தரக்கூடிய நெடுங்கோல் கொளுத்தி காவல் இருந்ததை அறியமுடிகிறது. இதை,

**கடுங்கைக் கானவன் கபதுமிசை கொளிஇய**

**நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி**[66]

என்ற அடிகள் விளக்குகின்றன. தினைப்புனத்தைப் பன்றிகள் அழிக்க வரும் போது அவற்றைக் கொம்பினால் ஊதி விரட்டியதைக் கீழ்க்காணும் பாடலடிகள் விளக்குகின்றன

**"சிறுகட் பன்றிப் பெருநிரை கூடிய**
**முதைப் புனங் காவலர் நினைத்திருந் தூதும்**
**கருங்கோட்டு ஓசையொடு[67]**

தலைவியும் தோழியும் தினைப்புனம் காத்ததாகக் கூறப்பட்டுள்ளதன் மூலம் அக்கால மகளிர் தினைப்புனங்களைக் காவல் செய்ததை அறிய முடிகிறது.

**நெடுமென் பணைத்தோள் இவளும் யானும்**
**காவல் கண்ணினும் தினையே[68]**

என குறுந்தொகை எடுத்துரைக்கின்றன. கிளி முதலிய பறவைகள் மூலம் தினைக் கதிர்களுக்கு அழிவு நேராமல் பாதுகாக்கத் தழலை என்னும் கருவியைச் சுழற்றியும், தட்டை என்னும் கருவியைப் புடைத்தும் தீப்பிழம்பு போன்ற அசோக மரத்தின் தழையை அசைத்தும் பயிர்களைக் காத்தனர் என்பதை அகநானூறு,

**தாழை வாங்கியும் தட்டை ஒப்பியும்**
**------------------------------**
**குடி மகள் காக்கும் ஏனல்[69]**

என்று குறிப்பிடுகிறது.

**பேதை அல்லை மேதை அம் குறுமகள்**
**பெதும்பை பருவத்து ஒதுங்கினை புறத்து[70]**

என்ற அகநானூறு தலைவியிடம் அவளுடைய தாய் புறப்படாத பருவத்தே தினைப்புனம் காக்கச் சென்றாள். ஆனால் இது பெதும்பை பருவம் அதனால் இனி வெளியில் செல்லக் கூடாது என்று கடிந்து கூறுகிறாள்.

**வேய் அன்ன மென் தோளால்**

**மயில் அன்ன மென் சாயலார்**

**கிளி கடியின்னே**[71]

என்ற புறநானூறு தினைப்புனத்தில் மகளிர் கிளிகளை விரட்டியடித்ததை கூறுகின்றது.

**புனக்கிளி கடியும் பூங்கட் பேதை**

**தான் அறிந்தன்றோ இலளே**[72]

என்று குறுந்தொகை தினைப்புனத்தில் கதிரை உண்ணவரும் கிளிகளை விரட்டுகின்ற தலைவி என்று இப்பாடல் விளக்குகிறது.

**அன்னை,"சிறுகிளி கடிதல் தேற்றாள், இவள் என**

**பிறர்த் தந்து நிறுக்குவள் ஆயின்,**

**உறற்கு அரிது ஆகும், அவள் மலர்ந்த மார்பே.**[73]

என்ற அகநானூறு தலைவிக்கு ஒரு எச்சரிக்கை உள்ளது. கிளிகளை ஓட்டுவதுடன், ஒலிகளை இடையிடையே பலவாறு ஒலியெழுப்பி ஆங்காங்கே சென்று வருதல் வேண்டும். அவ்வாறு சென்று வராவிட்டால் தன் அன்னை தினைப்புனத்திற்கு வேறு ஒருவரை அனுப்பி விடுவாள். அதனால் கவனத்துடன் தினைப்புனத்தை பாதுகாத்தல் வேண்டும் என்பதை இப்பாடல் விளக்குகிறது.

**"செவ்வாய் பாசினம் கடிஇயளர், 'கொடிச்சி'**
**அவ்வாய்த் தட்டையொடு அவணை ஆக![74]**

என்ற நற்றிணை கிளிக் கூட்டங்களை விரட்ட மகளிர் "தட்டினம்" என்ற கிளிகடிக் கருவியை பயன்படுத்தியுள்ளனர். என்ற செய்தியும் மகளிர் தினைப்புனத்தை காக்க சிறுகுடில் ஒன்றை அமைத்து இரவு பகலும் பாராமல் பாதுகாத்தனர் என்ற செய்தியையும் தருகிறது.

**"------------ கருந்தாள்**
**வேங்கை அம் கவட்டிடைச் சாந்தின் செய்த**
**களிற்றுத் துப்பு அஞ்சாப் புளிஅதள் இதணத்து,**
**சிறு தினை வியன் புனம் காப்பின்[75]**

என்ற நற்றிணை கரிய அடியுடைய வேங்கை மரங்கள் நிறைந்த சிறிய குன்றிடத்திலே சந்தன மரத்தால் செய்த களிற்றியானையின் வலிமைக்கு அஞ்சாத புலித்தோல் வேய்ந்த பரணிடத்தில் தலைவி தங்கியிருந்ததை தினைப்புனத்தை பாதுகாத்துள்ளார் என்பதை இப்பாடல் விளக்குகிறது.

## 4.0. மீன்பிடித் தொழில்

மீன் முகக்கும் கொடிய நேரிய கோல்வினையுடைய அழகிய வலையினைக் கையிலே கொண்டவாறு நீண்ட படகில் சென்று மீன்பிடித்த செய்தியை,

**"பெருங் கடற் பரப்பில் சேயிறா நடுங்க**
**கொடுந் தொழில் முகந்த செய்கோல் அவ்வலை**
**நெடுந் திமில் தொழிலோடு வைகிய தந்தைக்கு,[76]**

என அகநானூறு புலப்படுத்துகிறது.

**"அஞ்சு வரத் தட்கம் அணங்குடைத்துப்பின்**
**கோழ் ஊ உன் குறைக் கொழு வல்சி,**
**புலவு வில் , பொலி கூவை,**
**ஒன்று மொழி ஒலி இருப்பின்**
**தென் பரதவர் போர் ஏறே![77]**

கை வினைஞர் அரிபறை கம்புள் கோழியின் இனிய உறக்கம் கெடும்படி வள்ளைக் கொடிகளை அகற்றி, பெரிய மீன்களை முகந்து கொண்டு வந்து விலை கூறி விற்பவர் வலைஞர். அவர்தம் கொடுமுடிகளை உடைய, வலைகளில் பயன்படுத்தும் கொறுக்காந் தட்டை வளரும் மருத நிலத்தின்கண் அவர்கள் மீன்களைக் கொன்று குவிக்கும் போது பிறந்த ஓசையும், கரும்பு ஆலைகளின் ஓசையும் சேற்று வயலில் ஏர்களை ஈர்த்துச் செல்ல முடியாது நிற்கும் முதிய எருதுகளின் வருத்தத்தைப் போக்கக் கள்ளுண்ட அவ்வுழவர்கள் செய்யும் ஆரவாரமும், பகன்றைக் கொடி படர்ந்துள்ள நெல் முற்றிய கழனிகளில், அந்நெல்லை அறுப்பவர் முழங்கும் பறை ஓசையும் நிறைந்துள்ளதை எடுத்துரைக்கிறது.

## 4.1. கடல் தொழிலாளி

கடல் தொழில் செய்பவரைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் மேலோட்டமாக வருகின்றன. கடல் தொழில் செய்பவனை " உறுதிமிக்க படகை ஆள்பவன்" எனப் புறநானூறு கூறும். கணக்காயன் தத்தன் என்ற புலவன் இவர்களைக் "கொடுந்திமில் பரதவன்" என்கிறார். பரதவர்களில் சிலர் கொல்லும் தன்மை உடைய சுறாமீன்களை ஒதுக்கிவிட்டு வலம் புரிச்சங்குகளை எடுக்க கடலில் மூழ்வதில் விருப்பம் உடையவர் என்றும், இவர்கள் இந்தத் தொழிலில் திறமை உடையவர்கள் என்றும் சேத்தன் கண்ணனார்.

**இலங்கு இரும் பரப்பின் எறிசுறா நீக்கி**
**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்**[78]

என்று குறிப்பிடுகிறார்.

## 4.2 மீன்பிடிகலம்

தொழில் நுட்பம் குறித்த செய்திகள் இலக்கியங்களில் ஓரளவு வருகின்றன. இவை பெரும்பாலும் அடைமொழியாகவோ, வருணனையாகவோ, குறிப்பிடப்படுகின்றன.

பொதுவாக நீர்வழிச் செல்லும் பயன்பாட்டுக்குரிய சாதனங்களை நாவாய், வங்கம், பஃறி, திமில், தோணி என்னும் சொல்லால் புலவர்கள் குறிக்கின்றனர். வங்கம் தொலைதூரப் பயணத்திற்குப் பயன்படுத்தப்படும் சொல்லாகும்.

நக்கீரர் பரதவன் ஒருவனைக் குறிப்பிடும் போது "அவன் சுறாமீனைப் பிடிக்க வலையை வீசினான், சுறா வலையை அறுத்து விடுகிறது. ஆனால் அவன் கூர்மையான உளியை எறிந்து அந்த மீனைப் பிடித்துவிடுகிறான். சுறாவால் கிழிக்கப்பட்ட வலையை அவன் கிராமத்துத் தெருவில் காயப்போடுகிறான்' என்கிறார்.

**.............................. திண்திமில்**
**எல்லுத் தொழில் மடுத்த வல்வினைப் பரதவர்**
**கூர்உளிக் கடுவிசை மாட்டலின் பாய்புடன்**
**கோட் சுறா அக் கிழித்த கொடுமுடி நெடுவலை**[79]

உளி கொண்டு மீன் பிடித்த செய்தியைக் கணக்காயன் தத்தன், உலோச்சனார் ஆகிய இருவரும் குறிப்பாகக் கூறுகின்றனர். "பரதவர் வேகமான

மீன்படகை உடையவர்; கொல்லும் தன்மை கொண்ட பொலிவு பெற்ற கூரிய வாயை உடைய உளி என்னும் கருவியைக் கொண்டவர். இந்த உளியின் முகத்தில் நீண்ட மூங்கில் கம்பைப் பொருத்தி இருப்பர். அதைச் சுறாவின்மேல் எறிந்து கொல்லும் ஆற்றல் பரதவருக்குண்டு. இந்த உளிமூங்கில் எறிந்தவரின் கைக்கு வந்துவிடும்".

**கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறியுளி**
**முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்**
**தாங்கு அரு நீர்ச்சுரத்து எறிந்து வாங்கு விசைக்**
**கொடுந்திமிற் பரதவர் கோட்டு மீன் எறிய[80]**

என்பது குறுந்தொகை உலோச்சனார் உளியால் மீன் பிடிக்கும் காட்சியை ஓவியமாகத் தருகிறார். "கொலைத் தொழிலை உடைய பரதவர் சிறிய குடிசையில் வாழ்வர். இவர்கள் கடலில் எறியும் உளியால் தாக்கப்பட்ட களிப்புடன் கூடிய சுறா வானத்தை அழகு செய்யும் வானவில்லைப் போல் உயரமாகத் துள்ளும். அந்த மீனின் காயத்திலிருந்து ஒழுகும் குருதியின் தன்மையால் கடல் சிவப்பு நிறத்திற்கு மாறும். திவலையை உடைய அலைகள் செறிந்த கடலை அந்த மீன் கலக்கி விட்டு தன் வலு இழந்து படகின் பக்கம் வரும்" என்கிறார்.

**குறியிறைக் குரம்பை கொலை வெம் பரதவர்**
**எறி உளி பொருதஏமுறு பெருமீன்**
**புண்ணுமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட**
**வீசும்பு அணி வில்லின் போகி பசும் பிசிர்த்**
**திரைபயில் அழுவம் உழக்கி உரனழிந்து**
**நிரைதிமில் மருங்கில் படர்தரும் துறைவன்[81]**

கடல்சார் மக்களின் தொழிலில் சுறா என்னும் மீனைப் பிடித்த தீரச் செயலாகவும் குறிக்கப்படுகிறது. சுறாவைப் பற்றி எதிர்ப்பட்டவர்களைத் தாக்குவது தம்முள் மாறுபாட்டை விரும்பிச் செருக்கித் திரிவது புலால் நாற்றமுடையது என்றும்,

**சலம் புகன்று சுறவுக் கலித்த**
**புலவு நீர் வியன் பௌவத்து**[82]

செய்திகளை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.கடற்கரையில் சுறா மீன் ஒன்று ஒதுங்கிய நிகழ்ச்சியை அம் மூவனார். "மீனவர்கள் கடற்கரையின் மணல் மேட்டில் பழுதாகிப் போன படகுகளைச் செப்பனிட்டுக் கொண்டிருந்தனர். அப்போது உயர்ந்த மணல் குன்றில் அலையால் ஒதுக்கப்பட்ட சுறாமீன் ஒன்று வந்து ஒதுங்கியது. அதைப் பார்த்த மீனவர்கள் சுறாவை வெட்டிப் பங்கு வைத்துக் கொண்டனர்" என்கிறார்.

**குரூஉத்திரை புணரி உடை தரும் எக்கர்ப்**
**பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்**
**மோட்டு மணல் அடைகரை கோட்டு மீன் கெண்டி**
**மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்**[83]

பெட்டியைப் பரதவரே முடைந்தனர். இரவில் மீன் பிடிக்கச் செல்லும் போது படகில் விளக்கை ஏற்றி வைத்திருந்தனர்.

கடலில் மிதக்கும் படகுகளை அவற்றில் இருந்த விளக்கை அடையாளமாக வைத்து கடற்கரைப் பெண்கள் எண்ணிய நிகழ்ச்சியை உலோச்சனார்,

**இருக்கழி துழவும் பனித்தலை பரதவர்**
**திண்திமில் விளக்கம் எண்ணும்**
**கண்டல் வேலிக் கழிநல் லூரே**[84]

என்று கூறுகிறார். இவரே இரவில் படகில் இருக்கும் விளக்குகள் யானைக்கு முக படாம் போர்த்தது போல் இருந்தது என்று வருணிக்கிறார். கடலில் சென்ற கலங்களில் கிளிஞ்சல் விளக்குகள் இருந்தன. இந்த விளக்குகள் அணைந்து விடாமல் இருக்க கிளிஞ்சல்களைத் தீபத்தைச் சுற்றிலும் வைத்து மறைத்தனர்.

**நெடுங்கடல் கலைந்த கொடுந்திமில் பரதவர்**
**கொழுமீன் கொள்கை அழிமணல் குவைஇ**
**மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய**
**சிறுதீ விளக்கில் துஞ்சும்**[85]

இந்தக் கிளிஞ்சல் விளக்குகளை எரிப்பதற்கு மீன் கொழுப்பை உருக்கிய எண்ணையைப் பயன்படுத்தினர் என்பதை,

**மீன் நிறம் தொகுத்த ஊன்நெய் ஒண் சுடர்**
**நீல் நிறம்பரப்பல் தயங்கு திரை உதைப்ப**[86]

என நற்றிணை கூறும். பொதுவாக மீன் பிடிப்பதற்குச் சிறுவர்களை அழைத்துச் செல்வதில்லை. ஒரு சிறுவன் தந்தையுடன் மீன் பிடிக்க வருவேன் என அடம் பிடித்த செய்தியை மதுரை மருதன் இளநாகனார்

**கடுஞ்சுறா எறிந்த கொடுந்தாள் தந்தை**
**புள்ளிமிழ் பெருங்கடல் கொள்ளான் சென்றென**
**மனையழுது ஒழிந்த புன்தலைச் சிறா அர்**[87]

என்று குறிப்பிடுகிறார். கடல்சார் மக்கள் மீன் வலைகளையும், கடற்ரையிலேயே உலர்த்தியிருந்தனர். அவற்றை அங்கேயே செப்பனிட்டனர். இதை

**எல்லாத் தொழில் மடுத்த வல்வினைப் பரதவர்**
**கூர் உளிக் கடுவிசை மாட்டலின் பாயுடன்**
**கோட் சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை**
**தண்கடல் அசைவளி எறிதொறும் வினைவிட்டு**[88]

என அகநானூறு கூறும். இவர்கள் கடலில் செல்லும்போது திசையை கண்டுபிடிக்க செவ்வாய் என்னும் நட்சத்திரத்தை அடையாளமாக வைத்திருந்தனர். அமாவாசை, பௌர்ணமி, நாட்களில் மீன் பிடிக்கச் செல்லும் வழக்கம் இல்லை. இந்த நாட்களில் அவர்கள் தங்கள் மனைவியுடன் பொழுதைப் போக்கினர் என்ற செய்தியை தருகிறது .

## 4.3. முத்துக்குளித்தல்

முத்து கடலில் இருந்து எடுக்கப்பட்டு உள்நாடு மற்றும் வெளி நாடுகளுக்கு விற்கப்பட்டுள்ளது. முத்துக்களில் பாண்டிய நாட்டு முத்து தென் கடல் பவ்வத்து முத்து என்று புகழப்படுகின்றது. முத்து நவரத்தினங்களில் ஒன்று. இதில் அரசர்கள் ஏகவடம் என்னும் முத்து மாலைகளை அணிந்தார்கள். ஏகவடம் அரசர்களுக்குரிய அடையாள அணிகலன்களில் ஒன்று. செல்வந்தர்களும் அரச மகளிரும் முத்து மணிகளை அணிந்தார்கள். ''முத்துக் குவியல்களை கொற்கைக் கடலில் விழுந்து புகார் முகத்திலே உண்டான முத்தை கௌடிலியரின் அர்த்த சாஸ்திரம் தாம்பர்ணிகம் என்று கூறுகின்றது. கொற்கை கடல் ஓரத்தில் தாமிர பரணி ஆறு கடலில் கலந்த இடத்தில் கொற்கைப் பட்டினம் இருந்தது. அங்கு முத்துச் சிப்பிகளை பவளங்களும் அதிகமாகக் கிடைத்தப் படியால் இளவரசர்கள் தங்கி வாழ்ந்தார்கள் முத்து

சிப்பிகளை எடுக்க ஆட்களை அனுப்பும் பொழுதும் அச்செய்தியை மக்களுக்கு தெரியப்படுத்த சங்கை முழங்கினர்''.

**தென் பவ்வத்து முத்து**[89]

என்ற பட்டினப்பாலை தலையாலங்கானத்துச் செருவெறு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் நாட்டில் முத்து குளித்த செய்தியை பதிவு செய்கின்றன.

## 4.4 சங்கு மற்றும் முத்தினை எடுக்கும் தொழில்

நெய்தல் நிலத்தில் வாழக்கூடிய பரதவர் கடலுக்குச் சென்று சங்கு மற்றும் முத்தையெடுத்து வரும் தொழிலை செய்து வந்தனர். என்பதை

**விளைந்து முதிர்ந்த விழு முத்தின்**
**இலங்கு வளை இருஞ்சேரி**
**கள் கொண்டிக் குடிப் பாக்கத்து**
**நல் கொற்கையோர்**[90]

என்ற மதுரைக்காஞ்சி சான்றோர்களால் புகழப்படுகின்ற அகன்ற சீரிய செல்வமாகிய உழவு வாணிகம் என்னும் இரண்டு வகையானும் புகழ் நிறைந்த குடிமக்களும்,பெரிய வணிகரும், ஏனைய நான்கு நிலமக்களோடு பொருந்தி பழமை கூறி நின்றனர்.

## 5.0. நெசவுத் தொழில்

மக்கள் வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளுள் உடையும் ஒன்று. சங்க காலத்துச் சமுதாய மக்கள் நுண்ணறிவின் திறத்தால் பருத்தி பஞ்சினை நூலாக உருவாக்கி ஆடையாக நெய்து உடுத்திக் கொண்டனர்.

பல்லாயிரமாண்டுகளுக்கு முன்னரே தமிழ் மக்கள் நெசவுத் தொழிலைக் கண்டுணர்ந்து அத்தொழிலில் நுண்ணிய தேர்ச்சி பெற்று விளங்கினார்கள் என்பதை பழைய தமிழ் நூல்களால் உணர முடிகின்றது.

வீட்டில் உள்ள மகளிர் நுண்ணிய நூலாக நூற்கும் தொழிலில் கைத்திறன் மிக்கவர்களாக விளங்கினார்கள். கணவனை இழந்த நிலையில் ஆதரவு அற்ற மகளிர் பிறருடைய உதவியினை எதிர் பாராது பருத்தி பஞ்சினை நூலாக மாற்றி தொழில் செய்து வாழ்ந்துள்ளனர். இந்நெசவுத் தொழிலில் ஈடுபட்டோரை சங்க இல்க்கியங்களில் "பருத்திப் பெண்டீர்" என்று அழைத்தனர்

**கல்சேர்பு இருந்த கது வாய்க் குரம்பைத்**
**தாழி முதற் கலித்த கோழிலைப் பருத்தி**[91]

என்று அகநானூறு பருத்தி நெசவிற்கு முதன்மையாக இருந்தது. அப்பருத்தியைப் பற்றி,

**பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்**
**புன்பலந்தழிஇய அங்குடிச் சீறூர்**[92]

என்ற புறநானூறும்,

**காஞ்சியின் அகத்துக்கும் பருத்தியாகும்**
**தீம்புனல் ஊரான்**[93]

என்று அகநானூறும்,

"பருத்தி வேலிச் சீறூர் மன்னன்[94]

புறநானூறு பருத்திக்காய் முற்றி முதிர்ந்து வெடித்து பஞ்சு வெளியிடப்பட்டது. அவற்றை கொய்து கொண்டு சென்று வீட்டில் வைத்தார்கள் என்பதை,

**பருத்தி வீடு நிறை பெய்த**
**மூடைப் பண்டம் இடை நிறைந்தன்ன[95]**

என்ற புறநானூறு தெளிவாக்குகின்றது.

## 5.1 நூல்நெய்வோர்

நூற்றல் தொழிலை மகளிர் செய்ய, நெய்தல் தொழில் ஆடவர்க்கு உரியதாகக் காணப்படுகிறது. மதுரைக்காஞ்சியில் நெசவாளர் 'கம்மியர்' என்று அழைக்கப்படுகின்றனர். கம்மியர் என்பது தொழிற்செய்வோரின் பொதுப் பெயராக அமைந்து இருந்தது என்பதனை, மனைகளையும், நகரங்களையும் சிற்பநூல் முறைப்படி வகுத்துக் கொடுத்தோரைக் "கைவல் கம்மியர்" என நெடுநல்வாடையும், செப்புப்பானை கடைவோரைக் கம்மியர் என நற்றிணையும் குறிப்பிடுவதினின்றும் உணரலாம்.

கம்மியர் என்ற பொதுப்பெயருடன் 'காருகர்' என்ற சிறப்புப் பெயர் இவர்க்கு இருந்தது என்பதனைக் கட்டு நுண்வினைக் காருகர் என்ற சுட்டு உணர்த்தும் காருகர்–பிட்டு வணிகரையும் குறித்தது எனினும் காருக வினைத்தொழில் எனத் திவாகர நிகண்டும் இவர்களைக் குறிப்பிடும் நிலையில், இப்பெயர் சிறப்பாக இவர்களுக்குரியதாக அமைந்திருக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றுகிறது. பெரிய புராணம் இவர்களை அறுவையர் குலமெனக் குறிப்பிடும்..

சோழர் காலத்தில் நெசவாளர், ஆயோகவன், கைக் கோளர், சோழிய சாலியர், பட்டசாலியர், சேனியர் என்ற பலரிருந்தனர் அரசர்குலப் பெண்ணுக்கும், வணிகர் குடி ஆணுக்கும் பிறந்தவன் ஆயோகவன் எனப்பட்டனர். இவர்கள் ஆடைகளை நெய்து அரசர்க்கும், அந்தணர்க்கும், கடவுளுக்கும், கொடுத்து வந்தனர். இவருள் சிலர் திரிபுவனம் போன்ற இடங்களில் இறையிலியாக நிலங்களைப் பெற்று கோவிலுக்கும் மறையவர்க்கும் வேண்டிய ஆடைகளை நெய்து வந்தனர். கல்வெட்டுக்களால் அறியப்படும் சோழர் காலத்திய சமுதாய அமைப்பு கொண்டிருந்தனர். மேலும். நன்னூல் உரையாசிரியரான மயிலைநாதரும் தன்னுரையில் சோலிகன், சாலிகன், பட்டணவன், சேணியன் என்ற சொற்களை குறிப்பிடுவார். இன்றும் அடவியார், பட்டுச்சாலியர், பட்டாலியர், பட்டு நூல்காரர், சாலியர், தேவாங்கர், கைக்கோளர், செங்குந்தர், சணப்பர் போன்ற பல பிரிவினர் நெசவாளரில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

பல்லவர் மற்றும் சோழர்காலத்தில் இவர்கள் வரி செலுத்தி இருந்திருக்கின்றனர். தறிகளில் நூல்நூற்போர், நெசவு நெய்வோர் மீது வரிகள் விதிக்கப்பட்டுள்ளன. கைக்கோள் நெசவாளர், சாலிய நெசவாளர், சரிகைத்தறி நெசவாளர் மீதும், பஞ்சு, பட்டுநூல், பட்டாடை நூற்போர் மீதும் வரி போடப்பட்டது.

தறிப்புடவை அல்லது தறிக்கூறை, பேர்கடமை, பஞ்சுபீலி, பட்டாடை, நூலாயம், தறிஇறை, பறைத்தறி, சாலிகத்தறி, தூரகத்தறி, வாசல் வரி போன்றன இவ்வரிகளின் பெயராகும். பட்டாடை மூலாயம் என்பது விசயநகர மன்னர்கள் தறிகளின் மேல் விதித்த வரியாகும்.

“கி.பி.13–ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் கைக்கோளர்கள் சமூகத்தில் உயர்ந்த மதிப்புப் பெற்றனர். முதலிகள் என்னும் குலப்பட்டப் பெயரையுடைய

இவர்களின் சிறப்பு கருதி சில வரிகளில் இருந்து இவர்கட்கு விலக்கு அளிக்கப்பட்டது. எனவே இவர்கள் முன்னாளில் தாழ்நிலையில் மட்டுமன்றி மதிப்பின்றியும் இருந்துவந்த நிலை தெளிவுறுகின்றது".[96]

## 5.2. ஆடையும் தொழிலும்

இன்று மகளிர் நூற்புத்தொழிலுடன் ஆடவர் போன்று நெசவுத் தொழிலையும் செய்துவருகின்றனர். இந்தியாவின் சில இடங்களில் இத்தொழிலைக் கண்டிப்பாக அறிந்திருக்க வேண்டும் என்ற எண்ணமும் இருக்கின்றது. நெசவுக்கலை பற்றிய எண்ணங்களை அதன் அடிப்படை நிலையிலாவது புரிந்து கொள்ள வேண்டுவது பெண்கள் கடமை என்ற கருத்து உலக நிலையில் காணப்படுவதாகும்.

"நெசவாளர்களின் இருக்கையினைக் காருகர் இருக்கை என்று வழங்குவதினின்றும் அன்றே. அவர்கள் தனித்த பகுதிகளில் வாழ்ந்திருக்கக் கூடும் என்பது தெளிவு. சோழர் காலத்தில் இவர் இருந்த பகுதிகள் 'பாடி' என்று அழைக்கப்பட்டது. இன்றும் தனித் தெருக்களையும், பகுதிகளையும் இவர்குரியதாகக் காணலாம் (சாலியத் தெரு, பட்டாலியர் தெரு)."[97]

நெசவாளர்களின் நிலை இவ்வாறு அமைய, அறுவை வாணிகர் என ஆடைவணிகம் செய்வோர் அழைக்கப்பட்டதாகக் காண்கின்றோம். "மறுகில் இவர் காணப்படும் நிலையனை, வண்ணறுவையர் வளந்திகழ் மறுகு எனக்காட்டும் மணிமேகலை குறியவும் நெடியவும் மடியினை அங்காடிகளில் கம்மியர் விரித்துநிற்கும் நிலையினை மதுரைக்காஞ்சியில் காண, ஆடை நெய்வதும் ஆடை வணிகர் தொழிலாகவும் இருந்திருக்கக் கூடும் என்ற சிந்தனை தோன்றுகின்றது. இன்றும் நெசவுத் தொழிலுடன், வாணிபத்தையும் வைத்து நடத்தும் மேனிலை மாந்தரும் உண்டு. எனவே நெசவாளர்களைப்

பற்றிய சோழர்கால எண்ணங்கள், வணிகரையும் உள்ளிட்டுக் குறிப்பதாக இருக்கலாம்.

பருத்தி நூல், பட்டு நூல், அமைத்தாடை ஆக்கலும் பிறவும் காருகவினைத் தொழில் எனத் திவாகர நிகண்டு, காருகவினைத் தொழில் சுமத்தல் என்று கூறுவது" வணிகரைச் சுட்டியிருக்கலாம் என்ற எண்ணமும் மேற்கண்ட சிந்தனைகளுக்கு அரண் ஆகின்றது. இன்று நம்நாட்டைப் பொறுத்தவரையில் நெய்வோருக்கு அமையும் பெயரே வணிகருக்கும் அமைய, பிறநாடுகளில் வணிகர் தனிப்பெயர் பெற்று இருந்தனர். தையற்கலைஞர் தைத்த உடைகளின் தேவை அதிகமாக இல்லாத காரணத்தால் தையற் கலைஞர்களைப் பற்றிய குறிப்பினையும் விளக்கமாகப் பெறமுடியவில்லை. இவரைத் துன்னர் என்று பண்டைய இலக்கியங்கள் பகர, குயினர், பொல்லர் என்று வந்தோர் வழங்கியிருக்கின்றனர்.

ஆடையும் ஆடைத்தொழிலும் பற்றிய தமிழரின் பலவிதக் கைத்தொழில் தேர்ச்சியினையும், கலையுணர் வினையும் விளக்கும் வண்ணம் இலக்கியச் சான்றுகளின் இயல்பு அமைந்ததைக் கண்டோம். தமிழர் பெருமையினை வெளிப்படுத்தப் பல்லாற்றானும் துணைநிற்கும் தொழிலாளரின் சமுதாய நிலையினைப் புரிந்து கொள்ளவும் இவை வழிவகுக்கின்றன[98].

## 5.3 ஆடையின் வகைகள்

பருத்தியில் இருந்து வெண்மை நிறப்பஞ்சு எடுக்கப்பட்டது. அப் பஞ்சினை அக்காலத்தில் கையினாலே நூல் நூற்றனர். துறவர்கள் மகளிர் ஆண்மகன் ஆதரவு இல்லாத பெண்டிர் பஞ்சை நூலாக நூற்றார்கள் அவர்கள் இரவிலும் சிறுவிளக்கின் வெளிச்சத்தில் நூல் நூற்றார்கள்.

**பருத்தி பெண்டின் சிறு தீ விளக்கம்[99]**

என்ற புறநானூறு சிறு தீ வெளிச்சத்தில் நூல் நூற்றார்கள் என்பதை தெளிவாக விளக்குகிறது. நூலினால் முரட்டு துணிகளும் மெல்லிய துணிகளும் நெய்யப்பட்டன. குளத்தில் படரும் பாசி போன்ற நூலினால் முரட்டு துணிகள் நெய்யப்பட்டன. பால்போல் ஆவி போன்ற மெல்லிய துணிகளும் காகிதம் போன்ற மெல்லிய துணிகளும் பல வகையாக நெய்யப்பட்டன.

**இழை மருங்கறியா நுழை நூற்கலிங்கம்**[100]

என்ற மலைபடுகடாம் மெல்லிய ஆடையை விளக்குகிறது.

**போது விரி பகன்றை புதுமலர் அன்ன,**
**அகன்று மடிகலிங்கம்**[101]

என்ற புறநானூறும்,

**இறும்பூது சான்ற நறும் பூஞ்சேக்கையும்**
**குன்று பல குழிஇப் பொலிவன தோன்ற**
**அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கி**
**செற்றமும் உவகையும் செய்யாது காத்து**[102]

என்ற மதுரைக்காஞ்சி நோற்பதற்கு கல்லைப் பொளிந்தாற் போன்ற சிறிய வாயினை உடைய குண்டிகையைப் பல வடிவங்களை உடைய நூற் உறி தூக்கிச் செல்பவர் என்று இப்பாடல் நூல்நெய்வதற்கு பயன்படுத்தும் முறையை தெளிவாக விளக்கியுள்ளன.

**காம்பு சொலித்தன்ன அறுவை**[103]

என்ற சிறுபாணாற்றுப்படை பிறர் அறிய வெளிப்படுத்துவது. அவன் உடுத்திய கந்தல் ஆடை ஆகும் என்று கூறுகிறது.

**பட்டு நீக்கி துகில் உடுத்தும்**[104]

எனப் பட்டினப்பாலை சங்க மக்கள் தாம் உடுத்திய பட்டாடைகளை நீக்கிப் புணர்ச்சிக் காலத்திற்கென மெல்லிய வெண்ணிறத் துகிலை உடுத்துவர் என்ற குறிப்பைத் தருகிறது.

**பாம்புக் கடுப்பன்ன தோப்பி**[105]

என்ற அகநானூறு பாம்பின் மெல்லிய தோலைப் போன்ற ஆடை இருந்ததை இப்பாடல் கூறுகிறது. இதனையே,

**அரவு வெகுண்டன்ன தேறல்**[106]

என்ற புறநானூறு உணர்த்துகிறது. ஆடைகள் நெய்பவர்கள் பெரும்பாலும் "பேரூர்" என்னும் ஊர்களில் வாழ்ந்து வந்தனர். சங்க காலத்தில் பட்டு உடைகளின் கரைகளில் முடிந்த திரள் அழகு மிகுந்ததாக அமைக்கப்பட்டிருந்து, இதனை,

**கொட்டை கரைய பட்டுரை**[107]

என்ற பொருநராற்றுப்படை குறிக்கின்றது. ஆடையில் இழை ஓடிய வழி இன்னது என்று பார்வைக்குத் தெரியாத படி நுண்மை உடையனவாக அந்நாளில் ஆடைகள் நெய்யப்பட்டதை,

**நோக்கு நுழைகல்லா நுண்மை பூக்கனிந்(து)**
**அரவுரி யன்ன அறுவை**[108]

என்ற பொருநராற்றுப்படை குறிப்பிட்டனர்.

**புகை விரித்தன்ன பொங்கு துகிலும்**[109]

எனப் புறநானூற்றிலும்,

**நீலக் கச்சைப் பூவார் ஆடை**
**ஆளில் பெண்டிர் தாளின் செய்த**
**நுணங்கு நுண் பனுவன்**[110]

என நற்றிணை நெசவுத் தொழில் பற்றி குறிக்கப்படுகிறன. இந்நெசவுத்தொழில் காலங்காலமாக நடைபெற்று வருதலை பிற்காலத்தில் ஊரிலுள்ள தெருக்கள் உணர்த்துகின்றன.

## 5.4. துணிகளில் வேலைப்பாடு

சிறுதொழில் செய்யும் மக்களில் ஒரு சிலர் மட்டுமே நூற் ஆடைகளில் கலைத்திறன் வெளிப்படுமாறு ஓவியங்களை அமைத்து கொடுத்தனர் இதனை,

**நுண் சேறு வழித்த நோன் நிலைத்திரள்கால்**
**ஊறா வறுமுலை கொளீஇய கால் திருத்தி**
**புதுவது இயன்ற மெழுகு செய் பட மிசை**
**திண்நிலை மருப்மின் ஆடுதலை ஆக**
**விண் ஊர்பு திரி தரும் வீங்கு செலல் மண்டிலத்து**
**முரண் மிகு சிறப்பின் செல்வனொடு நிலைஇய**
**உரோகினி நினைவளள்**[111]

எனத் திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. நுண்ணிய சாதிலிங்கம் பூசின வலிய நிலையினையுடைய திரண்ட மேற்கட்டியின் கால்களை குடம் அமைந்த கட்டில்கால் அருகே நிறுத்தி அவற்றின் மேல் கட்டிய மெழுகு வழித்த புதிய

மேற் கட்டியாகிய துணியின் மேல் ஞாயிற்றுடன் மிகவும் மாறுபட்ட திங்களின் ஓவியத்துடன் நிலைத்துள்ள உரோகினியின் ஓவியத்தை உற்று நோக்கினாள் தலைவி என்று கூறும் பொழுது ஓவியத்தின் வெளிப்பாட்டுத் திறனை தெளிவாக உணர முடிகிறது.

## 6.0. கட்டிடத் தொழில்

மனித வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகள் உணவு, உடை, உறைவிடம் என்னும் மூன்றாகும். இவற்றுள் மூன்றாவதாக உள்ளது உறைவிடம், இருப்பிடம், மழை, பனி, வெயில் முதலியவற்றால் உண்டாகும் துன்பங்களைத் தவிர்த்து தடுத்து இன்புற்று வாழ்வதற்குரிய வசதியினை தருவது உறைவிடம் ஆகும்.

சங்க காலத் தமிழ் மக்கள் வைக்கோல் முதலிய புல்லால் வேயப்பட்ட சிறுகுடில் முதலாக மேல் நோக்கி காணும் அளவிற்கு உயர்ந்து தோன்றும் எழுநிலை மாடங்கள் வரையிலான பல திறப்பட கட்டிடங்களையும் தங்கள் உறைவிடங்களாக அமைத்துக் கொண்டு இன்புற்று வாழ்ந்தனர். எனவே அவர்கள் கட்டிடத் தொழிலில் திறம் பெற்றவர்களாக விளங்கினார்கள்.

கட்டிட நூல்களைக் கற்றுணர்ந்த சிற்பிகள், நிலத்தினை – மனையைக் அளந்து கட்டிடத்திற்கு மனை வகுக்கும் தொழில் திறம் உடையவர்களாக விளங்கினார்கள். மன்னர்க்கு மாளிகை அமைந்த செய்தியையும் மனையில் மலையை நடுவிலே திறந்தாற் போன்ற உயர்ந்த கோபுர வாயில்களும் பருவ நிலைக்கேற்ப இன்பம் நுகர்வதற்குரிய நிலை முற்றமும் வேனிற்பள்ளி கூதிர் பள்ளி முதலியனவும் கம்மியர்களால் சிறப்பாக அமைக்கப்பட்டன.

**நூல் அறிபுலவர் நுண்ணிதின் கயிறு இட்டு**
**தே எம் கொண்டு தெய்வம் நோக்கி**
**பெரும் பெயர் மன்னர்க்கு ஒப்பமனை வகுத்து**
**ஒருங்குடன் வளை இ ஓங்கு நிலை வரைப்பின்**[112]

என்ற நெடுநல்வாடை வாயிலாக நூலறி புலவர் நுட்பமாய் நூலிட்டு ஆராய்ந்து நிலத்தை தேர்வு செய்தனர். அதன் பின் அங்ஙனம் நின்றநாளில் நான்கு திசைகளையும் குறித்துக் கொண்டனர். பின்னர் நான்கு திசைகளில் உள்ள தெய்வங்களை வேண்டி மனைகளையும், வாயிற்களையும் மண்டபங்களையும் பிறவற்றையும் கூறுபடுத்தி அமைத்தனர். அதன் பிறகே கட்டிடத் தொழில் செய்வோர் ஓவிய வேலைப்பாடுகளைச் செய்து அழகுடன் கட்டிடங்கள் அமைத்துக் கொடுத்தனர்.

கட்டிடத் தொழிலுக்குத் கொல்லரும், தச்சரும், இன்றியமையாத தொழிலாளர் ஆவார்கள் இவர்களுடைய துணையின்றிக் கட்டிட வேலையைச் செய்து முடிக்க வியலாது. கட்டிடத் தொழிலாகிய கொல்லரும், தச்சரும் சங்க காலத்தில் தங்கள் தொழிலைத் திறம்படச் செய்து வாழ்ந்தனர்.

ஓவியத்தின் வாயிலாக ஒரு நாட்டின் சிறப்பம்சங்களும் ஆட்சி முறையும் மக்களின் வாழ்க்கை முறையும் சூழ்நிலைகளும் தெளிவாகக் காட்டப் பெருகின்றன. ஓவியம் நுணுக்கத்தோடு ஆராய்ந்து வரையப்பட்டுள்ளது.

**வரை கண்டன்ன தோன்றல வரைசேர்பு**
**வில் கிடந்தன்ன கொடிய பல்வயின்**
**வெள்ளி அன்ன விளங்கும் அதை உரீஇ**
**மணி கண்டன்ன மாத்திரள் திண்காழ்**
**செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடுஞ்சுவர்**
**உருவப்பல் பூ ஒரு கொடி வளைஇ**
**கருவொடு பெயரிய காண்பு இன் நல்இல்**[113]

இவ்வாறு திருமுருகாற்றுப்படையில் காண்பவர்களுக்கு மலைகளோ இவை எனத்தோன்றும் உயர்ச்சியுடையன. மலைகளின் மீது தோன்றும் வானவில் போன்று கொடிகளை காட்சியளிக்கின்றன. வெள்ளியை ஒத்து விளங்கும் சுண்ணச்சாந்து தீற்றப்பெற்றன. நீலமணியை ஒக்கும் கருமையினையும், திரட்சியையும் திண்ணிய தூண்களைக் கொண்டன. செம்பினால் செய்தாற் போன்ற தொழில் நிறம் அமைந்த நெடிய சுவரிலே அழகிய பூக்கள் பலவற்றையுடைய ஒப்பற்ற பூங்கொடி ஓவியம் பொறிக்கப் பெற்றன. காட்சிக்கு இனிய நல்ல கருப்பக்கிரகம் அமைந்திருந்தது என்ற குறிப்புகளை தருகின்றது.

**கயங்கண்ட வயங்குடை நகரத்தும்**
**செபியன் றன்ன செஞ்சுவர் புனைந்து**[114]

என்ற மதுரைக்காஞ்சி பாண்டியன் நன்மாறன் சித்திர மாடத்தில் உயிர் நீத்த காரணத்தால் பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் எனப் புலவர்களால் அழைக்கப்பட்ட செய்தி இடம் பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் ஒன்றான பரிபாடல் மூலம் திருப்பரங்குன்றத்தில் சித்திர மாடம் இருந்தது எனவும் முருகனை வணங்கிய பின்னர் மக்கள் இம்மாடத்திற்குச் சென்று அங்கு எழுந்தப்பட்டிருந்த காமன், ரதி, அகலிகை, முதலிய பலவகைப்பட்ட ஓவியங்களைக் கண்டு மகிழ்ந்தனர் எனவும் தெரிய வருகிறது.

**நின் குன்றத்து**
**எழு தெழில் அம்பலங் காமவேள் அம்பின்**
**தொழில் வீற்றிருந்த நகர்**[115]

எனப் பரிப்பாடல் ஓவியம் எழுதப்பட்ட சித்திரைச் சாலை காண்பார்க்கு விருப்பதை மேன்மேலும் எழுப்பும், என்றும் இத்தகைய நகரை மாளிகை குறிக்கும். ஓவியக் கூடம் காமவேளின் படைக்களகொட்டிலை ஒக்கும் என்றது.

சிற்பத்தில் சிறந்து விளங்கிய செந்தமிழ்நாடு ஓவியத்திலும் உயர்ந்து விளங்கியது. சுவர், மரம், துணிச்சிலை, முதலியவற்றில் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் ஓவியங்களைத் தமிழ் மக்கள் எழுதி மகிழ்ந்தனர். அரண்மனை, கோவில் மண்டபம் இவற்றின் சுவர்களில் நல்ல ஓவியங்களை எழுதி அழகுபடுத்தினர். அரண்மனையின் ஒரு பகுதி சித்திரமாடமாக விளங்கியது. பாண்டிய மன்னது சித்திர மாடத்தை,

**வெள்ளியன்ன விளங்குஞ் சுதையுரீஇ**
**மணிகண் டன்ன மாத்திரட் டிண்காழ்ச்**
**செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்**
**உருவப் பல்பூ வொருகொடி வளை இக்**
**கருவொரு பெரிய காண்பின் நல்லில்**[116]

என நெடுநெல்வாடை குறிக்கிறது. அந்தப்புரத்தின் பல இடங்கள், வெள்ளியைப் போன்ற சாந்தினால் பூசப்பட்டவை. அவை நீல மணியைக் காண்பது போன்ற கரிய திரண்ட வலிமை வாய்ந்த தூண்களைக் கொண்டவை போன்ற தொழில் நிறம் விளங்கும்படி அமைக்கப்பட்ட நிண்ட சுவர்களையுடையயவை. அவற்றில் பல நிறப்பூக்களோடு கூடிய வல்லிக்கொடி சுற்றிலும் ஓவியமாகத் தீட்டப்பட்டிருக்கும் என்பதை இப்பாடல் தெளிவாக சித்தர ஓவியத்தை விளக்குகிறது.

அக்காலத்தில் கோவில்கள் செங்கல், மரம் இவற்றால் கட்டப்பட்டன. சுவர்மேல் கண்ணை கவரும் வகையில் சுண்ணம் பூசப் பெற்றிருந்தது. இதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் மாடத்து
எழுதணி கடவுள் போகவிற் புல்லென்று
ஒழுகு பலி மறந்த மெழுகாப் புன்றிணை[117]

என்கிறது அகநானூறு. சுவரில் சித்திரமாக எழுதப்பட்ட அழகிய கடவுள் அவ்விடம் விட்டு நீங்கிச் சென்றமையால் அவ்விடம் பொலிவிழந்து காணப்பட்டதாம். இடைவிடாது நடத்தப்பெறும் பலியும் மறக்கப்பட்டதாம். சாணத்தால் மெழுகப்படாத பொலிவிழந்த திண்ணையில் ஈன்று அணிமையுடையதாய் இடத்தைப் பறித்து கொண்டு அவிடத்தில் பொருந்திக் கிடந்தது என்பதை போல ஓவியம் வரையப்பட்டிருந்தன.

மதுரை மாநகரம் தாமரை மலரைப் போன்ற அமைப்புடையதாய் இருந்தாய். அம்மலரின் இதழ்கள் அடுக்கடுக்காகச் சூழ்ந்திருப்பது போல மதுரையில் தெருக்கள் பல வரிசைகளாக அமைந்திருந்தன. தாமரை மலரின் நடுவில் மகரந்தப் பொடி நிறைந்திருப்பது போல மக்கள் மதுரையில் வாழ்ந்தனர். இது பரிபாடலில் மதுரையைப் பற்றிக் காணப்படும் வருணனை. சங்ககாலத் தமிழர் நகர அமைப்பில் பெற்றிருந்த கலை அமைப்பை இது நன்கு உணர்த்தும்.

பாண்டியனது அரண்மனை வாயில் தன்மீது உயர்த்தப்பட்ட கொடியோடு யானை நுழையதக்கதாக இருந்தது. உள்ளே அகன்ற முற்றம் இருந்தது. முற்றத்துக்கு அப்பால் மாட மாளிகைகள் உயர்ந்து விளங்கின. வாயிலின் இருமருங்கிலும் இலக்குமி நாமகள் உருவங்கள் சுவரில் அமைந்திருந்தன. முனிவரின் ஆசிரமங்கள் மலையை நடுவிற் பிளந்தாற்போன்ற அமைப்புடன் விளங்கின.

மதுரை நகரில் நிலத்திற்கு அடியில் கழிவுநீர் செல்வதற்காகப் பெரிய ஙமைக்கப்பட்டிருந்தது. அவ்வழி ஒரு யானை செல்லத்தக்க வசதி

பெற்றிருந்தது. இஃது ஒன்று கொண்டே அக்காலத்தாரது கட்டக்கலை அறிவை நாம் நன்கு அறியலாம்.

காவிரிப்பூம்பட்டினத்து அரண்மனைத் தோட்டத்தில் அற்புத மணி மண்டபம் இருந்தது. அதன் தூண்கள் பவளத்தால் அமைந்தவை; போதிகைக் கட்டைகள் பல வகை மணிகள் பதிக்கப்பட்டவை. அதன் தரை சந்தனத்தால் மெழுகப்பட்டது. இந்த மண்டபம் மகதம், மகாராட்டிரம், அவந்தி, யவனம், தமிழ்நாடு இவற்றைச் சேர்ந்த பலதிறத் தொழிலாளரைக் கொண்டு அமைக்கப்பபட்டது என்பதை நோக்க, பல நாட்டுத் தொழிலாளரும் சங்ககாலத்தில் தமிழ்நாட்டில் இருந்தனர் என்பதை அறியலாம். பிற்காலச் சோழர் காலத்தில் பெரிய அரண்மனைகள் கட்டப்பட்டன. கங்கைகொண்ட சோழபுரம், தாராசுரம் கோவில், திரிபுவன வீரேசுவரம் என்பவை சோழர் காலக் கட்டிடத் திறனுக்குச் சிறந்த சான்றுகளாகும்.

வானளாவிய கோபுரங்கள், ஆயிரங்கால் மண்டபங்கள், அகன்று உயர்ந்து மண்டபங்கள், திருமலை நாயக்கர் மகால், மதுரைப் புதுமண்டபம், இராமேசுவரம் கோவில் என்பவை நாயக்கர் காலக் கட்டடக்கலை முன்னேற்றத்தை நன்கு தெரிவிப்பவை. தஞ்சை அரண்மனையில் உள்ள ஆயுத சாலை, ஏழடுக்கு மாடி, சங்கீத மகால், சரசுவதி மாகல் முதலியன மகாராட்டிரர் காலக் கட்டக்கலைக்கு எடுத்துக் காட்டுக்களாகும். இங்ஙனம் கட்டக்கலை தொடர்ச்சியாக வளர்ச்சி பெற்று வந்துள்ளது. திருவாடானையில் அண்மையில் கட்டப்பட்ட கோவில் கோபுரம் இக்காலக் கட்டக்கலையை நன்கு உணர்த்துவதாகும்[118]. இவ்வாறு கட்டடக்கலை காலத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு வளர்ந்து கொண்டே வருகின்றன என்ற செய்தியை புலப்படுத்துகிறது.

## 6.1. ஓவியக் கலை

சங்காலத்தில் திருப்பரங்குன்றம் கோவில் சுவரில், இரதி, மன்மதன், அகலிகை, இந்திரன், கௌதமன் முதலியவரைக் குறிக்கும் ஓவியங்கள் தீட்டப்படுகின்றன. காவிரிப்பூம்பட்டினத்து வளமனைச் சுவர்களில் தேவர், மக்கள் பிற உயிர்களைக் குறிக்கும் ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன.

## 6.2 சார் தொழில்கள்

உழவுத் தொழிலுக்குத் துணையான ஏர், கொழு ஆகியவற்றைச் செய்து தரும் தச்சர், கொல்லர் என்ற தொழிற் பிரிவினர் தோன்றினர். இவர்கள் வேளாண்மைத் தொழிலுக்கும் மக்களுக்கும் தேவையான கருவிகளைச் கருவிகளையும் செய்து தந்தனர்.

## 6.3. தச்சன்

தச்சன் சிறுவர்களுக்காக குதிரையுடன் கூடிய இழுத்துச் செல்லும் தேரைச் செய்து தருவான். கொல்லன் கூரிய வாயையுடைய எறியுளியைப் பரதவர்க்குச் செய்து தருவான். சுறா மீனை வீழ்த்துதற்குப் பரதவர் அவ்வெறியுளியைப் பயன்படுத்துவர். இவ்வாறு இவர்களது தொழில் சிறுவர்களுக்கும், பரதவர்களுக்கும் பயன்பட்ட நிலையைக் காணும் போது கைவினைத் தொழில்கள் தனிநிலை பெற்று வளர்ந்ததை அறிய இயல்கிறது. இத்தகைய தொழில்களுக்கு ஊதியமாக உழவர்களிடமிருந்து உணவுப் பொருள்களும், பரதவர்களிடமிருந்து மீனும் பண்டமாற்று நிலையில் பெற்றனர்.

## 6.4. தச்சுத் தொழில்

கட்டிடத் தொழிலின் ஒரு பிரிவான தச்சுத் தொழில் மக்களின் இன்றியமையாத தொழில்களுள் ஒன்றாக விளங்கியது. அப்படிப்பட்ட ஒரு சிறு தொழிலாக விளங்கியமை,

**பரு இரும்பு பிணித்து செல்வாக்கு உரீஇ**
**துணை மாண் கதவம் பொருத்தி இணை மாண்டு**
**நாளொடு பெயரிய கோள் அமை விழு மரத்து**
**போது அவிழ் குவளைப் புதுப்பிடிகால் அமைத்து**
**தாழொடு குயின்ற போர் அமை புணர்ப்பின்**
**கை வல் கம்மியன் முடுக்கலின் புரை தீர்ந்து**
**ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை**[119]

என்று நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. கைத்தொழில் வல்ல தச்சன் இரட்டைக் கதவுகளைச் சிறிதும் இடைவெளி தோன்றா வண்ணம் இணைத்து உருவாக்கிய செய்தியை இப்பாடல் வாயிலாக அறிய முடிகிறது. இக்கருத்தினை,

**நான்கு எய்திய பனை மருள் நோன்தாள்**
**இகல் மீக்கூறும் ஏந்து எழில் வரிநுதல்**
**பொருது ஒழி, நாகம் ஒழி எயிறு அருகு – எறிந்து**
**சீரும் செம்மையும் ஒப்ப வல்லோன்**
**கூர் உளிக் குயின்ற ஈர் இலை இடைஇடுபு**
**பேர் அளவு எய்திய பெரும்பெயர்ப் பாண்டில்**[120]

என்ற அடிகளும் வெளிப்படுத்துகின்றன..

## 6.5. தச்சர் தொழிலில் ஓவிய வேலைப்பாடுகள்

தச்சு வேலைப்பாடுகள் செய்யும் பொழுது அவற்றில் ஓவியங்கள் வரையும் இயல்பு உண்டு. அதனால் சங்க காலத்தில் வாழ்ந்த மன்னர்களின் பெருமையையும், வீரத்தையும், மக்களின் வாழ்க்கை முறைகளையும், அவர்கள் செய்யும் தொழிலையும் தச்சுத்தொழில் வாயிலாக உணரலாம்.

**மடைமாண் நுண் இழை பொலிய தொடை – மாண்டு**
**முத்துடைச் சாலேகம் நாற்றி, குத்துறுத்து**
**புலிப் பொறிக் கொண்ட பூங் கேழ்த் தட்டத்து**
**தகடு கண் புதையக் கொளீஇ துகள் தீர்ந்து**
**ஊட்டுறு பல்மயிர் விரைஇ வயமான்**
**வேட்டம் பொறித்து வியன்கண் கானத்து**
**முல்லைப் பல் போது உறழ பூ நிரைத்து**
**மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்பட** [121]

என கட்டில் செய்யப்பட்ட நிலையை நெடுநல்வாடை விவரிக்கிறது. முத்து மாலைக் கட்டிலொடு ஒழுங்குற மெல்லிய நூல் கொண்டு அழகுறும் படித் தொடுத்துத் தொங்க விடப்பட்டது. இது பலகனி போல் காட்சி பெறச் செய்யப்பட்டுள்ளது. புலியானது வரிகளைத் தன்னிடத்தே குத்துதல் தொழிலால் அமைக்கப்பட்ட தட்டம் போன்ற தகடுகளைக் கட்டிலின் உள்ளிடத்தே வெளியில் படுமாறு அமைக்கப்பட்டுள்ளது. குற்றம் அற்றதாய் நிறம் ஊட்டப்பட்ட பன்னிற மயிர்களை உள்ளேவைத்து மேலே வேட்டையாடுதல் போன்ற உருவம் பொறிக்கப்பட்டுள்ளது.

## 6.6. கொல்லன் தொழில்

வேல், வாள் போன்ற கருவிகள் செய்ய இரும்பு பயன்பட்டது. இரும்பின் பயனை அறிந்து பயன்படுத்தியோர் கொல்லர் எனப் பெயர் பெற்றனர். இவர்கள் வலிமை வாய்ந்த கைகளைக் கொண்டு இத்தொழிலை செய்தனர்.

**கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத் தெறிந்த**[122]

என்று பெரும்பாணாற்றுப்படை வலிமை உடைய கைகளைக் கொண்ட கொல்லன் பற்றிய குறிப்பைத் தருகிறது.

**"---------------- மென்தோல்**
**மிதி உலைக் கொல்லன் முறிகொடிற்றன்ன**[123]

பெரும்பாணாற்றுப்படை இரும்பைக் காய்ச்சி எடுப்பதற்கு குறடை என்ற கருவியை பயன்படுத்திள்ளனர்.

**பகைவர்க் குத்தி, கோடு, நுதி, சிதைந்து,**
**கொல் துறைக் குற்றிலமாதோ – என்றும்**[124]

என்ற புறம் போர்ப்படைக் கலங்களில் ஆக்கவும் திருத்தவும் உழைக்களம் இருந்தன என்ற செய்தியை விளக்குகிறது.

**கடிய உர எறிந்து சிதைந்த வேல்**[125]

என்ற பதிற்றுப்பத்து இரும்பை சிதைத்து அதனை போருக்குரிய வேல் என்ற கருவியாக மாற்றியமைத்ததைக் குறித்தது.

**பொன்னெறி பிதிரிற் சுடரற வாங்கின**
**இரும்பு செய் கொல்லெனத் தோன்றும்**[126]

என்ற அகநானூறு இரும்பை அடித்து வாள், வேல் போன்ற பல்வேறு கருவிளைச் செய்யக் கூடியவன் கொல்லன் என்று குறிக்கிறது.

இந்நிலையில் சங்க மக்கள் நேரடியாகத் தனக்கே உரிய பொருள்களை ஆக்கிக் கொண்டனர். வில், வேல், வாள், கணை, போன்ற வேட்டைக் கருவிகளைப் படைத்துப் கொண்டனர். இக்கருவிகளின் மூலம் தங்களைக் காத்துக் கொள்ளவும். தங்கள் தேவையை பூர்த்தி செய்து கொள்ளவும் அவர்களால் முடிந்தது.

## 7.0. களவு தொழில்

சுரங்கள் வழியாக கொண்டு வரக் கூடிய பொருளைப் பெறுவதற்கு கள்வர்கள் வழிமறித்துப் கொண்டுச் சென்றுள்ளனர். கடல் வழியாகச் செல்லக் கூடியவர்களையும், பொருள்களையும் அபகரித்து வந்தனர் என்பதை,

**"அணங்கு மெய்ந் நின்ற அமைவரு காட்சி**
**ஆறு அலை கள்வர் படைவிட அருளின்**[127]

என்ற பொருநர்ஆற்றுப்படை ஆற்றின் கண் சொல்வோரை வழிப்பறி செய்யும் இரக்கமில்லாதவரையும் அவர்கள் கொண்டு வந்த பொருட்களையும் பறித்துக் கொண்டு கொன்று விடுவர்.

## 7.1. வேட்டுவர் வழிப்பறி செய்தல்

குறிஞ்சி நிலத்தில் வாழக் கூடியவர்களில் சிலர் வழிப்பறித் தொழிலையும் செய்துள்ளனர் என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது. இதில்,

**"தொடு தோல் அடியர் துடி படக் குழீஇ**
**கொடுவில் எயினர் கொள்ளை உண்ட**
**உணவு இல் வறுங் கூட்டு உள்ளகத்து இருந்து**[128]

என்றப் பட்டினப்பாலையில் தற்போது செருப்பு அணிந்தவரும், கொடிய வில்லையுடையவர்களும் ஆகிய வேடுவர் கொள்ளை கொண்டு விட்டுச் செல்வதால் உணவுக்கு உரிய நெல் சேர்த்து வைக்கும் கூடுகள் நெல் யாதும் இல்லாது வறிய நிலையில் உள்ளன என்பதை இப்பாடல் வாயிலாக அறிய முடிகின்றது. இக்கருத்தினை,

**மழைபெயல் மறந்த கழைதிரங்கு இயவில்**
**செல்சாத்து எறியும் பண்பில் வாழ்க்கை**
**வல்வில் இளையர்"**[129]

என்ற அகநானூற்றுப்பாடலில் கடியலூர் உருத்திரங் கண்ணனாரும் வழிப்பறிக் கொள்ளையிட்ட வில் வேடரைக் கூறுகிறார். வள்ளல் காவல் அமைந்த பெரிய நாடு வழியே போவாரை அலறும்படிக் கொன்று அவர்களின் பொருள்களை கொள்ளையிடும் களவுத் தொழிலையே உழவுத் தொழில் போல் செய்து வாழும் கொடியவர் பெருகி வருகின்றனர் என்பதை தெளிவாக்குகிறது.

**"அத்தம் செல்வோர் அலறத் தாக்கி**
**கைப்பொருள் வௌவும் கள ஏர் வாழ்க்கை**
**கொடியோர் "**[130]

என்ற பெரும்பாணாற்றுப்படையிலும்,

**புற்றரை யாத்த புலர் சினை மரத்த**

**மைந்நிற உருவின் மணிக்கட்காக்கை**

**பைந்நிணங் கவரும் படுபிணக் கவலைக்**

**சென்றோர் செல்புறத் திங்கார் கொன்றோர்**

**கோல் கழிபு இரங்கும் அதர**

**வேல் பயில் அழுவம்''**[131]

என்ற அகநானூறு. புற்றுக்களைக் கொண்ட காய்ந்துபோன கிளைகளையுடைய மரத்தின் கண் உள்ள கரிய நிறத்தையுடைய உருவத்தையும் நீலமணி போன்ற கண்களையும் உடைய காக்கைகள், கொழுப்பமைந்த ஊனைக் கவர்ந்து உண்ணுவதற்கு இடனான பிணங்கள் பரவிக்கிடக்கும் கவர்ந்த வழிகளைக் கொண்டது. செய்யும் கொலைத் தொழிலுக்குச் சிறிதும் இரங்காது, அம்புகள் செலவானதற்காக வருந்தும் வழிப்போவாரைப் பின்னின்று கொல்லுகின்ற ஆறலை கள்வர் இயங்கும் அரிய வழிகளையுடையது என்று வழிப்பறிக் கொள்ளையைப் பற்றி விளக்குகின்றது. வணிகச் சாத்தரை கொள்ளை கள்வர்கள் பசு இருக்கும் இடம் தேடிச் சென்று பசுவை கவர்ந்துச் செல்கின்றனர். அப்படி கவர்ந்துச் செலும் பொழுது பசுவின் உரிமையாளர்கள் எழுப்பும் ஓசையினை,

**"அந்தக் கள்வர் ஆ தொழு அறுத்தென**

**பிற்படு பூசலின் வழிவழி ஓடி''**[132]

என்ற அகநானூற்றுப்பாடல் தெளிவாக விளக்கி கூறியுள்ளது.மலபார்க் கரையில் கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் கழித்துவிட்டு திசம்பர் மாத்தில் புறப்பட்டு, 40 நாட்களில் முசிறிக்கு வந்து சேர்ந்தனர்.

## தொகுப்புரை:

சங்க காலத்தில் உள்ள குறிஞ்சி நிலமக்கள் வேட்டையாடுதலை முதன்மை தொழிலாக கொண்டு செய்து வந்தனர். ஆநிரைகளை வளர்த்தலையும் சிறப்பான ஒரு தொழிலாக செய்து வந்தனர். உழவுத் பெருந்தொழில்களுள் முதலிடத்தை வகிக்கின்றது.

* உழவுத்தொழில் செய்யும் மருதநில வாழ்வுமையப்படுத்தப்பட்டு, பிற நிலவாழ்வு அதை நோக்கியதாக மாற்றியமைக்கப்பட்டது.
* உழவர்கள் விருந்தோம்பலைத் தலையாய கடனாகக் கொண்டிருந்தார்.
* கரும்பு சாகுபடியில் சங்க மக்கள் அதிக ஈடுபாடு கொண்டிருந்தனர்.
* கழுதையை வைத்து ஏர் உழுது பாரத நாட்டை பாழ் செய்துள்ளனர். மீன் பிடி தொழிலை பெருந் தொழிலாக நெய்தல் நில மக்கள் செய்தனர். அத்துடன் முத்து மற்றும் சங்கு எடுக்கும் தொழிலையும் செய்துள்ளனர்.
* நெசவுத் தொழிலில் ஈடுபட்ட பெண்டிரை பருத்திப் பெண்டிர் என அழைத்தனர்.

சார் தொழில்கள் – வேளாண் தொழிலுக்கு தேவையான கருவிகளைச் செய்யும் தொழிலையும் செய்தனர்.

# சான்றெண் விளக்கம்

| நூல் | பாடல் எண் | பக்கஎண் |
|---|---|---|
| 1. சங்க கால வாழ்வியல் | | ப. 59 |
| 2. பெரும்பாணாற்றுப்படை | பா. 106 | ப.75 |
| 3. மேலது | பா. 117 | ப.75 |
| 4. நற்றிணை | பா. 285 | ப.525 |
| 5. மேலது | பா. 85 | ப.152 |
| 6. மேலது | பா. 336 | ப.621 |
| 7. மதுரைக்காஞ்சி | பா. 295 | ப.12 |
| 8. அகநானூறு | பா. 284 | ப.847 |
| 9. குறுந்தொகை | பா. 108 | ப.260 |
| 10.மேலது | பா. 344 | ப.824 |
| 11. புறநானூற்று | பா. 395 | ப.865 |
| 12. குறுந்தொகை | பா.198 | ப.511 |
| 13. மலைபடுகடாம் | பா.331 | ப.379. |
| 14. நெடுநல்வாடை | பா.22 | ப.177 |
| 15. அகநானூறு | பா.126 | ப.658 |
| 16. நற்றிணை | பா. 60 | ப.107 |
| 17. நெடுநல்வாடை | பா.45 | ப.178 |
| 18. புறநானூறு | பா50 | ப.18 |

| | | |
|---|---|---|
| 19. பட்டினப்பாலை | பா.12 | ப.303 |
| 20. பெரும்பாணாற்றுப்படை | பா197 | ப.212 |
| 21. மேலது | பா 206 | ப.212 |
| 22. அகநானூறு | பா. 41 | ப.121 |
| 23. மதுரைக்காஞ்சி | பா. 286 | ப.11 |
| 24. மலைபடுகடாம் | பா. 115 | ப.368 |
| 25.மேலது | பா.126 | ப.369 |
| 26.மேலது | பா131 | ப.369 |
| 27. பெரும்பாணாற்றுப்படை | பா.213 | ப.212 |
| 28. மேலது | பா.208 | ப.212 |
| 29.குறுந்தொகை | பா.309 | ப.602 |
| 30.பெரும்பாணாற்றுப்பாடை | பா.230 | ப.213 |
| 31. புறநானூறு | பா.348 | ப.756 |
| 32.மேலது | பா13 | ப.33 |
| 33. அகநானூறு | பா.40 | ப.118 |
| 34. மதுரைக்காஞ்சி | பா.261 | ப.188 |
| 35. மலைபடுகடாம் | பா,471 | ப382. |
| 36. நற்றிணை | பா. 350 | ப.648 |
| 37. புறநானூறு | பா. 396 | ப.868 |
| 38.சங்க கால வாழ்வியல் | | ப. 296 |

| | | |
|---|---|---|
| 39. பெரும்பாணாற்றுப்படை | பா238 | ப.213 |
| 40. புறநானூறு | பா 184 | ப.447 |
| 41. மேலது | பா.99 | ப.238 |
| 42. அகநானூறு | பா. 235 | ப.703 |
| 43. மேலது | பா.217 | ப.649 |
| 44. பதிற்றுபத்து இரண்டாம் பத்து முன்றாம் செய்யுள் | | |
| 45. குறுந்தொகை | பா.85 | ப.408 |
| 46. ஐங்குறுநூறு | பா. 70 | |
| 47. பெரும்பாணாற்றுப்படை | பா. 260 | ப.214 |
| 48. மலைபடுகடாம் | பா. 56 | ப.367 |
| 49. பட்டினப்பாலை | பா. 8 | ப.303 |
| 50.முல்லைபாட்டு | பா. 98 | ப.329 |
| 51. பதிற்றுபத்து 3ம்பத்து | | |
| 52. புறநானூற்றுப் பாடல்கள் | பா. 80 | ப.18 |
| 53.சங்க கால வாழ்வியல் | | ப. 302 |
| 54.புறநானூறு | பா.327 | ப.715 |
| 55.மேலது | பா.322 | ப.703 |
| 56.மேலது | பா.328 | ப.715 |
| 57. மேலது | பா.333 | ப.720 |

| | | |
|---|---|---|
| 58 .மேலது | பா.15 | ப.38 |
| 59.மேலது | பா.379 | ப.389 |
| 60.மேலது | பா. 384 | ப.835 |
| 61. அகநானூறு | பா. 336 | ப.984 |
| 62. மலைபடுகாடம் | பா. 113 | ப.368 |
| 63. அகநானூறு | பா. 335 | ப.986 |
| 64. நற்றிணை | பா. 134 | ப.246 |
| 65. குறிஞ்சி | பா. 225 | ப.600 |
| 66.புறநானூறு | பா.188 | |
| 67.அகநானூறு | பா. 184 | ப.552 |
| 68. குறுந்தொகை | பா. 198 | ப.456 |
| 69. அகநானூறு | பா. 188 | ப.565 |
| 70. மேலது | பா. 7 | ப.9 |
| 71. புறநானூறு | பா. 395 | ப.863 |
| 72. குறுந்தொகை | பா. 142 | ப.329 |
| 73. அகநானூறு | பா. 28 | ப.81 |
| 74. நற்றிணை | பா. 134 | ப.246 |
| 75. மேலது | பா. 354 | ப.655 |
| 76. அகநானூறு | பா. 60 | ப.177 |
| 77.மேலது | பா. 380 | ப.824 |

78. புறநானூறு பா. 82 ப. 256

79. அகநானூறு பா. 340 ப.1000

80. குறுந்தொகை பா. 304 ப.526

81.அகநானூறு பா.210 ப.628

82. மதுரைக்காஞ்சி பா. 111 ப.28

83.அகநானூறு பா.10 ப.29

84. நற்றிணை பா. 372 ப.686

85. மேலது பா.175 ப.321

86. மேலது பா. 215 ப.394

87.மேலது பா.392 ப.725

88. அகநானூறு பா.340 ப.1000

89.பட்டினப்பாலை பா. 89 ப.312

90.மேலது பா.134 ப.306

91. அகநானூறு பா. 129 ப.393

92. புறநானூறு பா. 304 ப.667

93.அகநானூறு பா.156 ப.473

94. புறநானூறு பா. 299 ப.657

95.மேலது பா.393 ப.858

96. ஆடையும் தொழிலும் ப. 230

97.மேலது ப. 231

| | | |
|---|---|---|
| 98. மேலது | | ப. 234 |
| 99. புறநானூறு | பா. 326 | ப.711 |
| 100. மலைபடுகடாம் | பா. 156 | ப.370 |
| 101. புறநானூறு | பா. 393 | ப.858 |
| 102. மதுரைக்காஞ்சி | பா. 487 | ப.19 |
| 103. சிறுபாணாற்றுப்படை | பா. 236 | ப.286 |
| 104. பட்டினப்பாலை | பா. 107 | ப.306 |
| 105. அகநானூறு | பா. 378 | ப.1096 |
| 106. புறநானூறு | பா. 379 | ப.379 |
| 107. பொருநர்ஆற்றுப்படை | பா. 155 | ப.83 |
| 108. மேலது | பா. 86 | ப.83 |
| 109. புறநானூறு | பா. 120 | ப.350 |
| 110. நற்றிணை | பா. 353 | ப.653 |
| 111. திருமுருகாற்றுப்படை | பா. 157 | ப.12 |
| 112. நெடுநல்வாடை | பா. 76 | ப.58 |
| 113. திருமுருகாற்றுப்படை | பா. 108 | ப.9 |
| 114. மதுரைக் காஞ்சி | பா. 484 | ப.19 |
| 115. பரிப்பாடல் | பா. 18 | ப.463 |
| 116. நெடுநல்வாடை | பா. 110 | ப.181 |
| 117. அகநானூறு | பா. 167 | ப.502 |

| | | |
|---|---|---|
| 118. நெடுநல்வாடை | பா.75 | ப.55 |
| 119.மேலது | பா. 80 | ப.58 |
| 120.மேலது | பா.115 | ப.60 |
| 121.மேலது | பா.124 | ப.61 |
| 122. பெரும்பாணாற்றுப்படை | பா. 437 | ப.221 |
| 123. மேலது | பா. 206 | ப.81 |
| 124. புறநானூற்று | பா. 36 | ப.102 |
| 125. பதிற்றுப்பத்து | பா. 69 | ப.241 |
| 126. அகநானூறு | பா. 198 | ப.593 |
| 127.பொருநர் ஆற்றுப்படை | பா. 20 | ப.80 |
| 128. பட்டினப்பாலை | பா. 625 | ப.312 |
| 129.அகநானூறு | பா. 245 | ப.733 |
| 130. பெரும்பாணாற்றுப்படை | பா. 39 | ப.205 |
| 131.அகநானூறு | பா. 327 | ப.963 |
| 132. மேலது | பா. 15 | ப.19 |

# இயல் 2

# சிறுதொழில்கள்

1.0. பல்வேறு தொழிலாளர்கள்

1.1. ஊர் காப்பாளர்

1.2. தேன் எடுத்தல்

1.3. பூ விற்றல்

1.4. மோர் விற்றல்

1.5. கோழி வளர்த்தல்

1.6. கூடை செய்தல்

1.7 கட்டில் பின்னுதல்

2.0. நகைசெய்தல்

2.1 வளையல் செய்தல்

2.1.1 சங்கு அறுக்கும் தொழில்

3.0 பெண்கள் கள் சுமத்தல்

4.0 விறகு விற்றல்

4.1 கிணறு தோன்றல்

4.1.1 மண்பாண்டம் செய்தல்

4.1.1.2 தாழிகள் தயாரித்தல்

## 5.0. சாயத்தொழில்

5.1 இயற்கை சாயம்

5.1.1 தாவரச் சாயம்

5.1.2 கனிம சாயங்கள்

5.1.3 விலங்கின சாயங்கள்

5.1.4 சாயமிடுதல் பற்றிய அறிவியல் செய்திகள்

5.1.5 சாயமிடுதல் பற்றிய உத்திகள்

5.1.6 வடிவங் கொடுதல்

## 6.0. சலவைத் தொழில்

6.1 ஆடை தூய்மை செய்தல்

6.1.2 மெத்தை விரிப்பு

6.1.3 அழுக்கு துணிகளை தூய்மை செய்தல்

6.1.4 தைத்தல் தொழில்

## 7.0 போர்த் தொழில்

## 8.0. கூத்துக்கலை

8.1 ஆடல் தொழில்

# இயல் – 2

# சிறுதொழில்கள்

சங்க கால மக்கள் தம் பொருளாதார நிலையை உயர்த்திக் கொள்ள பெருந்தொழில்களை மட்டுமல்லாது சிறு தொழில்களையும் மேற் கொண்டிருந்தனர். பெருந்தொழில்களுக்கு துணையாக இவை விளங்கின. இச்சிறு தொழில்களால் விளைந்த பொருளின் அளவு மிகக் குறைவு எனினும் மிகப்பெரும் முதலீடுகளோ, பொருட்செலவோ, நீண்ட கால அளவோ இல்லாமல் அதிக உடல் உழைப்போடு கிடைத்த பொருள்களைக் கொண்டு சிறு தொழில்களை மேற்கொண்டனர்.

''பெரும்பாலோரின் தொழில் விவசாயமாகவே இருந்ததால் பிற தொழில்கள் புறக்கணிக்கப்பட்டன. அவை மிகக் குறைவாயிருந்தன.சங்க காலத்தில் கைத்தொழிலும் திறன்களும் சிறந்து விளங்கின. உள்நாட்டுக் கைத்தொழில் முதிர்ந்த நிலையில் இருப்பினும் சில தொழில்கள் பிற நாட்டார் அதிகமாக முன்னேற்றம் அடைந்திருப்பதை பார்கும் பொழுது அவர்கள் தமிழகத்தே வந்து குடியேற ஊக்குவித்தனர்.மகத வினைஞர் என்று உ.வே.சாமிநாதஐயர் இரத்தின வேலைக்காரர் என்றும், வடவ வணக்கர் என்றும் குறிப்பிடுகிறார்.

புகார் உறையூர், வஞ்சி, தொண்டி, முசிறி, மதுரை, காஞ்சி முதலிய பெரிய நகரங்களிலேயே கைத்தொழில் பொருட்களில் பெரும் பகுதி செலவாயின. வெளிநாட்டு சந்தைகளில் ஏற்பட்ட தேவை கைத்தொழில்களை ஊக்குவித்தது. கப்பல் கட்டுதல், அதனோடு இயைந்த துறைமுகங்கள் அமைத்தல், பண்டசாலை ஆக்குதல், முதலிய செயற்பாடுகளும் வெளிநாட்டு வாணிபத்தை நிலைப்படுத்த உறுதுணையாக இருந்தது''[1]. என்பது இக்கட்டுரை வாயிலாக எடுத்துரைக்கப்படுகிறது.

**1.0 பல்வேறு தொழிலாளர்கள்**

சங்க மக்கள் தங்கள் தேவைகளுக்கு சிறுசிறு தொழில்களைச் செய்து வந்தனர் என்பதை,

**பொன்னுரை கொண்டமரும் வம்புநிறை முடிநரும்**
**பூவும் புகையும் ஆயும் மாக்களும்,**
**எவ்வகைச் செய்தியும் உவமம் காட்டி**
**நுண்ணிதின் உணர்ந்த நுழைத்த நோக்கின்**
**கண்ணுள் வினைஞரும் பிறரும் கூடி,**
**தெண்திரை அவிர் அறல் கடுப்ப ஒண்பல்**
**குறியவும் நெடியவும் மடிதரூஉ விரித்து,**
**சிறியரும் பெரியரும் கம்மியர் குழீஇ**
**நால்வேறு தெருவினும் கால்உற நிற்றர''[2]**

என மதுரைக்காஞ்சி சங்குகளை அறுத்து வளையல் முதலியனவாகக் கடைதல், அழகிய நவமணிகளை துளையிடுதல், தீயிலிட்டு பொன்னை உருக்கியும் அடித்தும் நீட்டியும் ஒளிவிடும் பலபல அணிகளாக்ச் செய்தல், பொன்னை உரை கல்லில் உரைத்து தரத்தை அறுதியிடுதல், நூற் ஆடைகளை விற்றல், செம்பினை நிறுத்து அதனை வாங்கிக் கொள்ளுதல், கிழிஞ்சல்களைத் தம் தொழில்திறன் முற்றும் காட்டி பலவகை முடிகள் முடிவாரும், பூக்களையும், சந்தனம், அகில் முதலிய புகைக்கும் பொருள்களையும் நன்றாக ஆராய்ந்து விற்பாரும், ஓவியத் தொழிலாளரும், முதலிய சிறுதொழில்களை மேற்கொண்டுள்ளனர்.

**போது பிணி விட்ட கமழ் நறும் பொய்கைத்**

**தாது உண் தும்பி போது முரன்றாங்கு**

**ஓதல் அந்தணர் வேதம் பாட**

**சீர் இனிது கொண்டு நரம்பு இனிது இயக்கி**

**யாழோர் மருதம் பண்ண காழோர்**

**............................................**

**பல்வேறு பண்ணியக் கடைமெழுக்கு உறுப்ப**

**கள்ளோர் களி நொடை நுவல"[3]**

என்கிறது மதுரைக்காஞ்சி. ஓதல் தொழிலையுடைய அந்தணர் வேதங்களை ஓதா நிற்பர், யாழோர் தாள அறுதியை இனிதாக உள்ளத்தில் கொண்டு நரம்பினை இனிதாகத் தெரித்து மருதப் பண்ணினை இசைத்தனர். பண்டம் விற்போர் பலவாய் வேறுபட்ட பண்டங்களையும் கடைகளில் விற்பனை செய்தனர். கள் விற்போர் களிப்பினை உடைய கள்ளிற்கு விலை கூறி விற்றனர்.

**"கிளை கலித்துப் பகை பேணாது**

**வலைஞர் முன்றில் மீன் பிறழவும்**

**விலைஞர் குரம்பை மா ஈண்டவும்**

**கொலை கடிந்தும் களவு நீக்கியும்**

**அமரர்ப் பேணியும் ஆவுதி அருந்தியும்**

**நல் ஆனொடு பகடு ஓம்பியும்**

**நான் மறையோர் புகழ் பரப்பியும்**

**பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும்**

**புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்க்கை**

**கொடு மேழி நசை உழவர்''[4]**

என்று இப்பாடல் விளக்குகிறது.

## 1.1 ஊர் காப்பாளர் தொழில்

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் மன்னனின் ஆணைக்கு இனங்க ஒவ்வோரு வீரனும் ஒரு தொழிலைச் செய்து நாட்டைக் காப்பாற்றுவான். அப்படிபட்ட தொழில் ஒன்று தான் ஊர்காப்பாளர் தொழில் ஆகும். என்பதை

**"துஞ்சாக் கண்ணர் அஞ்சாக் கொள்கையர்,**
**அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர், செறிந்த**
**நூல் வழிப் பிழையா நுணங்கு நுண்தேர்ச்சி**
**ஊர்காப்பாளர் ஊக்கருங் கணையினர் ,**
**தேர் வழக்கு தெருவில் நீர் திரண்டு ஒழுக**
**மழை அமைந்து உற்ற அரை நாள் அமயமும்,**
**அசைவிலர் எழந்து நயம் வந்து வழங்கலின்,**
**கடவுள் வழங்கும் கையறு கங்கலும்**
**அச்சம் அறியாது ஏமம் ஆகிய**
**மற்றை யாமம் பகல் ஹக் கழிப்பி'**[5]

என்ற மதுரைக்காஞ்சி ஆண் யானையை போல வலிமை உடையவரும், புலியைப் போல கண்களை கொண்டு தன்னுடைய உயிரையும் பொருட்படுத்தாமல் களவு தொழிலில் ஈடுபடுவோரை தடுக்கு இரவு பகல் பாராமல் சோம்பலின்றி இருந்தனர் என்ற செய்தியை வழியுறுத்துகிறது.

## 1.2. தேன்எடுத்தல்

குறிஞ்சி நில மக்கள் தங்களுடைய ஒரு தொழிலாக தேன் எடுத்தலையும் செய்தனர். அதன் மூலம் பண்ட மாற்று முறையில் தங்களுக்குத் தேவையான பொருள்களைப் பெற்றக் கொண்டனர். இதனை,

**“கொடுந் தொழில் வல்வில் கொலைஇய கானவர்**
**நீடு அமை வளைந்த தேக்கண் தேறல்**
**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து**
**தொண்டகச் சிறுபறைக் குரவை அயர’’[6]**

என திருமுருகாற்றுப்படைக் குறிப்பிடுகிறது. கொடிய தொழிலாகிய கொல்லுதலைச் செய்யும் குறவர்கள் மூங்கில் குழாயினில் தேனைப் பெய்து முற்றும் படி செய்த கள்ளை மலைப்பக்கத்தில் உள்ள ஊர்களில் வாழும் சுற்றத்தாருடன் உண்டு மகிழ்ந்து தொண்டகப் பறையை முழக்கி அதற்கு ஏற்ப குரவை கூத்தாடுவர் என்ற குறிப்பு இடம் பெற்றுள்ளது.

வேரைப் பிளந்து விண்ணைத் தொடுகின்ற நெடிய மலையிடத்தே ஞாயிற்றின் மண்டிலத்தைப் போல, தேனீக்களால் இழைக்கப் பட்ட குளிர்ச்சி பொருந்திய தேன் கூடு சிதையும்படி செய்து, அதில் இருந்து தேனை எடுத்து மற்ற நிலத்தோடு உள்ள மக்களிடம் பண்டமாற்று முறையில் விற்பனைச் செய்தனர் என்பதை

**“தண் கமழ் அலர் இறால் சிதைய நன்பல**
**ஆசினி முதுசுளை கலாவ மீமிசை’’[7]**

என்ற திருமுருகாற்றுப்படை அடிகள் உணர்த்துகின்றன.

**வேய்ப் பெயல் விளையுள் தேக்கட் தேறல்**
**குறைவு இன்று பருகி நறவு மகிழ்ந்து வைகறை’’[8]**

என்ற மலைபடுகடாம் வாயிலாக குறிஞ்சி நில மக்கள் தேன் எடுத்தலை ஒரு தொழிலாகக் கொண்டு வாணிப முறைகளை பயன்படுத்தி இருந்திருக்கின்றனர் என்பது தெளிவாகின்றது.

## 1.3. பூ விற்றல்

சங்க இலக்கியத்தில் பெண்கள் மலரைத் தொடுத்து விற்று அதற்கு பதிலாக நெல்லைப் பெற்று வாழ்ந்திருக்கின்றனர். பூ விற்றலும் ஒரு சிறு தொழிலாக வீட்டில் உள்ள பெண்கள் செய்து வந்தனர். அவர்கள் பூவிற்காக பெற்ற நெல்லை தன்னுடைய சுற்றத்தாரோடு திருவிழாக் காலங்களில் சமைத்து பலரும் உண்டு மகிழ்ந்தனர். இதனை சங்க இலக்கியப்பாடல் உணர்த்துகிறது.

**துய்த்தலை இதழபைங் குருக்கத்தியொடு**
**பித்திகை விரவு மலர் கொள்ளீரோ என**
**வண்டு சூழ் வட்டியள் திரிதரும்**
**தண்டலை யுழவர் தனி மடமகளே''[9]**

என நற்றிணைப் பாடல் எடுத்துரைக்கிறது.

**"துகிலிகை அன்ன துய்த் தலைப் பாதிரி**
**வால் இதழ் அலரி வண்டு பட ஏந்தி ,**
**புது மலர் தெருவுதொரு நுவலும்**
**நொதுமலாட்டிக்கு நோம்''[10]**

என்ற நற்றிணைப்பாடல் மெல்லிய திரிமலரை விற்பவளைக் கண்டும் எம் மனம் வருந்துகின்றது என்று தலைவன் கூறுவது போல

நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்

அரவு உரி அன்ன அறுவை நல்கி[11]

என்று பொருநர்ஆற்றுப்படையில் பூத்தொழிலின் சிறப்பம்சங்கள் வெளிக் கொணரப்பட்டுள்ளன.

## 1.4. மோர் விற்றல்

மக்கள் மோர் விற்றதில் உண்டான பணத்தை வைத்து தங்களுக்குத் தேவையான பொருட்களை வாங்கி வாழ்க்கை நடத்தி வந்தனர் என்பது புலனாகின்றது. வீட்டில் வாழும் பெண்கள் தங்கள் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள இதுபோன்ற ஒரு சிறு தொழில் செய்து தங்களுடைய குடும்பத்தை முன்னேற்றச் செய்துள்ளனர் என்பது உணர்ந்து கொள்ள முடிகின்றது.

**நள் இருள் விடியல் புள்எழுப் போகி,**
**புலிக்குரல் ஒலிப்ப வாங்கி ,**
**ஆம்பி வால் முகை அன்ன கூம்பு முகிழ்**
**உறைஅமை தீம் தயிர் கலக்கி நுரைதெரிந்து,**
**புகர் வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ"[13]**

என்கிறது பெரும்பாணாற்றுப்படை .

### 1.4.1 நெய்

சங்க காலத்தில் வாழ்ந்த ஆயர்கள் மோரைக் கொண்டுச் சென்று விலைக்கு விற்று அதற்கு ஈடாக எருமையும் நல்ல பசுக்களையும் அவற்றின் கன்றுகளையும் வாங்கிச் சென்றுள்ளனர் என்பதை,

**"அளை விலை உணவின் கிளை உடன் அருத்தி**
**நெய் விலைக்கு அட்டிப் பசும் பொன் கொள்ளாள்**
**எருமை நல் ஆள் கருநாகு பெறூஉம்**
**மடி வாய்க் கோவலர் குடிவயின் சேப்பின்**
**இருங்கிளை ஞெண்டின் சிறு பார்ப்பு அன்ன**
**பசுந் திணை முரல் பாலொடும் பெருகுவீர்**[12]

என்ற பெரும்பாணாற்றுப் பாடல் குறிக்கிறது எளிமையாக வாழும் மக்கள் மோர் விற்றல் என்ற சிறு தொழிலைச் செய்து அதற்கு மாறாக மற்ற பொருள்களை பெற்று வாழ்ந்துள்ளனர் என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

## 1.5. கோழி வளர்த்தல்

சங்க கால மக்கள் மற்ற உயிரினங்கள் போல கோழி வளர்த்தலையும் ஒரு சிறு தொழிலாக செய்து வந்தனர்.

**"மனையுறை கோழிக் குறுங்காற் பேடை**
**வேலி வெருகினம் மாலை உற்றென''**[14]

இப்பாடலில் காட்டுப் பூனையின் வருகையைக் கண்ட வீட்டில் வளர்க்கப்படும் கிளி, கோழி ஆகியன குஞ்சுகளை பாதுகாப்பான இடத்திற்குச் செல்லுமாறு கூவினாலும்.

**"கோழி சேக்கும் கூடுடைப் புதவின்''[15]**

என்ற பெரும்பாணாற்றுப்படைப் பாடல் குதிரை ஒப்பச் சிறிதாகக் கட்டப்பட்ட கோழி கிடக்கும் கூட்டைக் குறிப்பிடுகிறது.

**"மனைக் கோழி பைம்பயிரின்னே**
**கானக் கோழி கவர் குரலொடு**
**நீர்க் கோழிக் கூய்ப் பெயர்க்குந்து'[16]**

என்ற புறநானூற்றுப்பாடல் மனையிடத்தே உள்ள மனைக் கோழி, நீர்க் கோழி, காட்டுக் கோழி ஆகிய மூன்று கோழிகளும் ஒருங்கே சேர்ந்து மேய்கின்றன என்ற செய்தியைத் தருகிறது.

**"நீருறை கோழி நீலச் சேவல்**
**கூருகிர்ப் பேடை வயா அமூர'[17]**

என்ற ஐங்குறுநூறு நீரில் உறைகின்ற நீலச் சேவற் கோழியை அதன் என்கிறது.

**'சுடர் நுதல் மட நோக்கின்**
**நேர் இழை மகளிர் உணங்கு உணாக் கவரும்**
**கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை''[18]**

என்ற பாட்டினப்பாலைப் மக்கள் முற்றத்தில் காயும் நெல்லை உண்ணவரும் கோழியை பொன் குழையை விட்டெறிந்து விரட்டியடித்தனர் என்கிறது.

**“தொல் பசி அறியாத் துளங்கா இருக்கை**
**மல்லல் பேர் ஊர் முடியன் மடியா**
**வினைஞர் தந்த வெண்ணெய் வல்சி**
**மனை வாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவீர்’’[19]**

ஏனைய நாட்டினர்க்கும் இயல்பாகிய வறுமையை இன்ன தென்று அறியாத, நல்ல குடியிருப்பினை உடைய வளம் மிக்க பெரிய ஊரின் கண்ணே தங்குவீராயின், அழியாத உழவர்கள் தம் உழைப்பால் கொண்டு வந்த வெள்ளிய நெற்சோற்றை மனையின்கண் வாழும் கோழிப் பெடை யினால் சமைத்த பொரிய லோடு பெறுகுவீர்.

## 1.6 கூடை செய்தல்

சங்ககால மக்களில் ஒரு சிலர் சிறுதொழிலாக கூடை செய்தல் பணியை செய்துள்ளனர். பசுமையான நார் நிறைந்த பனைமட்டையைக் குடைவான சிறுகூடை போன்று வளைத்துக் கொண்டு அதில் புதரில் உள்ள முல்லைப் பூக்களைப் பறித்தனர்.

**“அவல் வகுத்த பசுங்குடையால்**
**புதன் முல்லைப் பூப் பறிக்குந்து’’[20]**

என புறநானூறு கூடை பின்னும் தொழிலை தெளிவாக்குகிறது. மாலைக்காரர் அந்த தாவர நார்களை வேறு வழிகளாலும் தமிழர் பயன்படுத்தினர். தாழை விழுதுகளைப் புனைந்து அவற்றின் நாரின் பலத்தால் மகளிர் ஊஞ்சலாடினர். தாழையின் விழுதுகள் மற்றும் நார்களால் வீட்டிற்கு வண்ணமடிக்கும் துகிலிகைகளாகப் பயன்படுத்தினர். பூமாலைகள் தொடுக்கப் பல்வகை நார்கள் பயன்படுத்தப்பட்டன.

**“ஆர்நார்ச் செறியத் தொடுத்த கண்ணிக்’’**[21]

என்கிறது புறநானூறு. எளிதில் கிடைக்கும் வாழைநார் பொதுவில் கொள்ளப்பட்டது என்றாலும் “ஆர்’’ என்னும் அத்தியின் பட்டையை உரித்த மலர் தொடுக்கப் கிழித்த நாரும் பயன்படுத்தப்பட்டது.

**“ஆர் நார் உரிவையின் செம்பூங்கரந்தை**
**புனைந்த கண்ணி’’**[22]

என அகநானூறு கூறுகிறது. மேலும் “மரல்’’ நார் கொண்டும் மாலைகள் கட்டப்பட்டன என்று கூறுகிறது.

**“காமரு கண்ணி திரங்கு மரல் நாரில் பொலியச் சூடி’’**[23]

என்கிறது மலைலபடுகடாம். நாரைக் கொடியை அப்படியே கொடியாகவும் நாராக்கியும் பயன்படுத்தினர். இந்த நார் வேங்கைப் பூக்களைத் தொடுக்கப் பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டது.

**“நரை நார்வேங்கை கண்ணி’’**[24]

நார்களைக் கொண்டு மாலை மற்றும் கண்ணி தயாரிப்போர் மாலைக் காரர் எனப்பட்டர்.

## 1.7 கட்டில் பின்னுதல்

சங்க காலத்தில் கட்டில் பின்னுதல், பாய் பின்னுதல், நாற்காலி செய்தல் போன்ற பல்வேறு கைத்தொழில்களைக் கலைத் தொழில்களாகவே மக்கள் செய்து வந்தனர் என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது. இதில் கட்டில் பின்னுதலாகிய கைத்தொழில் நிகழ்ந்துள்ளதை,

**கட்டில் நிணக்கும் இழிசினன் கையது**

**போழ் தூண் ஊசின் விரைந்து** [25]

என்னும் வரிகள் நற்றிணையில் விளக்குகின்றது. அந்நாளில் பனை ஓலைக் கொண்டு பாய் பின்னி பயன்படுத்தி வந்தமையை,

**"பறிப்புறத்து இட்ட பால் நொடை இடையன்''** [26]

என நற்றிணை மகளிர் கலைத் திறன் மிக்க வகையில் பாய் பின்னி வந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

**"கட்டில் நிணக்கும் இழிசினன் கையது''** [27]

என புறநானூறு வாரால் பிணித்து கட்டில் பின்னுவோன் என்ற செய்தியை எடுத்துரைக்கிறது.

## 2.0 நகை செய்தல்

சங்ககாலத் தமிழ்ச் சமுதாயத்தில் மக்கள் சுட்டிகை, குழை, முத்துவடம், வளை, மேகலை, சிலம்பு முதலிய பல்வேறு அணிகலன்களை அணிந்து வளமான வாழ்க்கை வாழ்ந்தார்கள் என்பது சங்கப் பாடல்கள் வாயிலாக அறிய முடிகின்றது.

பசும் பொன்னில் வயிரங்கள் பதித்துச் செய்யப்பட்ட பூண் நிறத்தால் மாறுபட்டு ஒளி வீசி விளங்குகின்றது.இதனைப் போன்ற ஒத்த கருத்தையுடையதாக.

**மின் உறழ் இமைப்பின்சென்னிப் பொற்ப**

**நகை தாழ்பு துயல்**

**வருஉம் வகை அமைபொலங்குழை**

**சேண் விளங்கு இயற்கை வான்மதி கலைஇ**

**அகலா மீனின் அவிர்வன இமைப்ப**[29]

என்ற திருமுருகாற்றுப்படை நகையின் வேலைப்பாடு உடையைதைத் தெளிவாக எடுத்துரைக்கிறது. நகைகளை பெரியவர் முதல் சிறியவர் வரைப் பயன்படுத்தினர். இவ்வகை அணிகலன்களில் வளையலும் ஒன்று. நகை செய்வதை ஒரு சிறு தொழிலாகப் செய்துள்ளனர் என்பதை பின்வரும் செய்திகள் வாயிலாக் அறிய முடிகின்றது.

## 2.1 வளையல் செய்தல்

சங்க காலத்தில் வளையல் தொழில் ஒரு சிறு தொழிலாக காணப்பட்டது.

**"ஊறலஞ் சேரிச் சீறூர் வல்லோன்**

**வாளரம் பொருத கோள் நேர் எல்வளை''**[30]

என நற்றிணை கையிடத்துக் கொள்வதற்கு நேரிதாகச் செய்யப்பட்ட ஒளிப் பொருந்திய வளையலை ஒரு சிறு தொழிலை செய்து தங்களுடைய வாழ்க்கையை முன்னேற்றிக் கொண்டனர் என்பது தெளிவாகப் புலப்படுகிறது.

**"பொலந்தொடி தின்ற மயில் வார் முன்கை**

**வலம்புரி வளையொடு கடிகை நூல்யாத்து**

**வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்து''**[31]

என்ற நெடுநல்வாடைப்பாடல் பொன்னால் செய்த தொடி கிடந்து அழுத்திய தழும்பு நுண்ணிய மயிர் அமைந்து ஆகிய அவள் முன்கையில் வலம்புரி சங்கினை அறுத்து செய்யப்பட்ட வளையலை அணிந்திருந்தாள் என்று கூறப்படுகிறது.

வளையல்களில் கொடிகள் பூக்கள் வரிக் கோடுகள் முதலியவை அமைத்து அழகாகச் செய்யப்பட்டன. வளையல் அறுக்கும் தொழில் ஆங்காங்கே நடந்தது. சங்கச் செய்யுள்களில் இத்தொழில் கூறப்படுகின்றது.

**'அரம்போழ் அவ்வளை'**[32]

என ஐங்குறுநூறு சங்கு அறுத்து செய்யப்பட்ட வளைகள் என்று கூறுகிறது.

**கடற்கோடு அறுத்த அரம்போழ் அவ்வளை**[33]

என ஐங்குறுநூறு வளைப்பத்தில் குறிப்பிடபடுகிறது.

**"கோடீர் இலங்குவளை"**[34]

என குறுந்தொகை சங்கு வளையாக அறுத்துத் தொழில் செய்தவர்களுக்கு வேளாப் பார்ப்பான் என்று பெயர். சங்கு வளையாக அறுக்கும் தொழிலும், சங்கு வளைகளை விற்கும் தொழிலும், அக்காலத்தில் சிறப்பாக நடந்தன. என்பதை தமிழர் வாணிகம் என்ற நூலில் மயிலை. சீனி வேங்கடசாமி எடுத்துரைக்கின்றார்[35].

## 2.2 சங்கு அறுக்கும் தொழில்

சங்ககால மக்களில் சங்கை அறுத்து செய்யும் தொழிலையும் செய்து வந்தனர் என்பதை

**"வேளாப் பார்ப்பன் வாரளந்துமித்த**
**வளை களைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன**
**தளை பிணி அவிழா''[36]**

என அகநானூறு வாயிலாக மறைகளைப் பயிலாமையால் தனக்குரிய யாகம் பண்ணாத ஊர்ப்பார்ப்பான். கூர்மையான அரத்தால் அறுத்தெடுத்த வளைகள் போக எஞ்சிய சங்கினது நுனிப் பகுதி போன்றது என்று கூறுவதில் இருந்து சங்கு அறுக்கும் தொழிலை செய்துள்ளவை தெரிய வருகிறது.

## 3.0 பெண்கள் கள் சமைத்தல்

சங்க கால மக்களில் ஒரு சிலர் தங்கள் வீட்டிலேயே கள்ளை காய்ச்சி அதனை தங்களுக்கு உண்ண பயன்படுத்தினர். இதனை,

**வெந்நீர், அரியல் விரல் அலை நறும்பிழி[37]**

என்கிறது பெரும்பாணாற்றுப்படை வலிய வாயினையுடைய சட்டியிலே இட்டு செந்நீரில் வேக வைத்து நெய்யரியாலே வடிகட்டி அதனைத்தம் விரல்களாலே அழித்துப் பிழிவர்.

அங்ஙனம் பிழியப்பட்ட நல்ல கள்ளினைப் பச்சை மீனைச் சுட்ட சூட்டோடு பசியால் நீவிர் தளர்ச்சியுள்ள போது பெறுவீர் என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

------------------- முட்டுஇல்

**பைங்கொடிநுடங்கும் பலர் புகு வாயில்**

**செம் பூத்தூய உயசெதுக்குடை முன்றில்**

**கள் அடு மகளிர் வள்ளம் நுடக்கிய**[38]

என்ற பெரும்பாணாற்றுப்படை முட்டுப்பாடில்லாத பகிய கொடியாடுகின்றதும். கள்ளுண்பார் பலரும் புகுவதும், சிவந்த மலர்கள் சிதறப்பட்டதும் ஆகிய இடத்தில் மண் வெட்டியால் செதுக்கித் தூய்மை செய்யப்பட்ட முற்றம் உள்ளது. அங்குக் கள்ளைக் சமைக்கின்ற மகளிர் வட்டில்களைக் கழுவியதனால் வடிந்தநீர் மண்ணுடன் கலந்து சேருகிறது என்று கூறுவதில் இருந்த பெண்கள் காய்ச்சியும் சிறுதொழில் தெளிவாகிறது.

## 4.0 விறகு வெட்டுதல்

சங்க இலக்கியத்தில் ஏழை எளிய மக்கள் நிலப்பகுதியில் உள்ள மரங்களை வெட்டிச் சென்று விற்று வாழ்க்கைக்கு தேவையானப் பொருட்களை பெற்று வாழ்ந்தனர்.

**“விறகுகொய் மாக்கள் பொன் பெற்றன்ன”**[39]

என்னும் புறநானூறு எடுத்துரைக்கிறது. இத்தொழிலை ஆற்றியோர் விறகு வெட்டிகள், விறகு கொய்மாக்கள், என இரண்டு வகைகளில் குறிக்கப் பெற்றுள்ளனர்.

## 4.1 கிணறு தோண்டல்

பண்டைக் காலத்து மக்கள் நீர் நிலைகளைப் பெருமளவில் பராமரித்து வந்துள்ளனர். ஆற்று நீர்நிலைகள் மட்டுமன்றி பாசனத்திற்கும் பிற செயல்பாடுகளுக்கும் நீர் வளம் மிகுந்த இடங்களில் கிணறுகளை வெட்டி நீரைச் சேமித்துள்ளனர். இத்தகைய கிணறுகளை வெட்டுவதை தங்கள் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த மக்களும் உண்டு.

> **"தோட்பதன் அமைத்த கருங்கை ஆடவர்**
> **கனைபொறி பிறப்ப நூறி வினைப்படர்ந்து**
> **கல்லுறுத் தியற்றிய வல்லுவர்ப் படவில்**
> **பாருடை மருங்கின் ஊறல்[40]**

என அகநானூறு வலிமையுடைய ஆடவர்கள் தீப்பொறி உண்டாக்குமாறு பாறைகளை வெட்டிய பிறகு நிலத்தில் நீர் உண்டாக்கச் செய்து கூலி பெற்றனர். கிணறு வெட்டச் சென்ற தொழிலாளர்கள் சோற்றுக் கலயத்தைத் தங்கள் தோளில் சுமந்து சென்றனர். "கருங்கை ஆடவர்'' என்ற அடைமொழி அவர்களுடைய மிக்கவலிமையை விளங்குகின்றது. பாறைகளை வெட்டும் போது தீப்பொறி உண்டாக்கும் அளவிற்கு வலிமை தேவை என்பதால் அத்தொழில் நுட்பம் அறிந்தோர் மட்டுமே கிணறு வெட்டும் தொழிலில் ஈடுபட்டனர். இதனால் தங்கள் வாழ்க்கையில் வறுமை என்ற நிலை இல்லாமல் வளர்ச்சியுடையதாய் தங்கள் வாழ்க்கையை அமைத்து கொண்டனர் என்பதைத் தெளிவாக உணர முடிகிறது.

## 4.2 மண்பாண்டம் செய்தல்

'நல்ல அறிவுடைய குயக்குலத்து இளையோர் சக்கரத்தைக் கொண்டு மண்பாண்டத்தை செய்தார் என்ற செய்தியை தருகிறது. மேலும் இது போன்ற மண்ணை வைத்து தாழிகள் செய்தல் எனப் பல்வேறு பொருட்களை செய்ய உதவுகின்றது.

**'நன்மதி வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த**
**பசுமண் குரூ உத்திரள்''**[41]

என புறநானூறு விளங்குகின்றது.

### 4.2.1 தாழிகள் தயாரித்தல்

தாழி என்பது ஒரு மிகப் பெரிய பானையைக் குறிக்கும். இவை பெரும்பாலும் இறந்த மனிதர்களின் உடலை இட்டு மண்ணில் புதைப்பதற்காக பயன்பட்டன. இத்தாழிகளை செய்வோர் வேளாளர் என்ற மரபினர் ஆவர். இத்தாழிகளைக் குறித்து,

**"மா இருந்தாழி''**[42]

என்றும்,

**"ஓங்கு நிலைத் தாழி''**[43]

என அகநானூறு கூறுவது போல,

**"கண்ணகன் தாழி''** [44]

எனப் புறநானூறும் குறிப்பிடுகின்றது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்தான். பெரும் புகழ் கொண்ட இவனுக்கு பெரிய தாழி வேண்டி உலகையே சக்கரமாகக் கொண்டு இமயமலையையே மண்ணாக

வைத்துப் பெரிய தாழியை வனைதல் வேண்டும் அது உன்னால் முடியுமா? என்று வேட்கோவை வினவுகிறார் ஐயூர் முடிவனார் என்ற புலவர்.

**“சுரம்பல வந்த எமக்கும் அருளி**
**வியன்மலர் அகன் பொழில் ஈமத்தாழி**
**அகலிதாக வனைமோ**[45]

எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

**“தாழி வனைவோர்**
**கலம் செய்வோர்”**[46]

என புறநானூறு வாயிலாக தெளிவாக அறிய முடிகின்றது. இவ்வகையான தாழிகள் புனைவதைத் தொன்மை காலமான தொழில் என்றே கூறலாம். ஒருவர் “மூதூர்கலம் என்று ஆத்திச்சநல்லூர், மலைக்கோவிலூர், பெருமாள் பாளையம் பாடாலூர், திருப்பூர் போன்ற இடங்களில் தொல்பொருள் ஆராய்ச்சியாளருக்கு கிடைத்துள்ளது என்று சங்க இலக்கிய ஆய்வுகள் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

தாழிகளை பாண்டியர் தாழி என்று அழைக்கப்படுகிறது என்ற செய்தியை இப்பாடல் எடுத்துக்கூறுகிறது.

## 4.2.2 சாயத்தொழில்

“கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த சாயத் தொட்டிகள் புதுச் சேரியிலுள்ள அரிக்க மேட்டிலும் அக்கால சோழர் தலைநகரமான உறையூரிலும் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. செங்கற்களினால் கட்டப்பட்ட இரு சாயத் தொட்டிகள், அரிக்கமேட்டில் சாயத் தொட்டியின் இடிபாடுகள்

அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. இவை இச்சாயக் கலையின் தொல் பழமைக்கு சான்று. இச்சாயத் தொட்டிகள் சங்க காலத்தை சார்ந்ததாகவே கணிக்கப்பட்டுள்ளது.[47] எனவே சங்க காலத் தமிழர்கள் பல வண்ண ஆடைகளை உருவாக்கியிருந்தார்கள் என்று உணர முடிகின்றது.

### 4.2.2.1. இயற்கைச் சாயங்கள்

பண்டையத் தமிழர்கள் தாவர கனிம மற்றும் விலங்கினப் பொருட்களில் வண்ணம் தரும் சாயப் பொருள்களை இனங் கண்டறிந்து அவற்றை பயன்படுத்தும் தொழில் நுட்பங்கள் நன்கு அறிந்தவர்களாக இருந்திருக்கின்றனர்.

### 4.2.2.2 தாவரச் சாயங்கள்

"நீலக் கச்சை பூவராடை'' என்னும் புறநானூற்றின் பாடல் வரி நீலநிறச் சாயம் தோய்க்கப்பட்ட ஆடைகளைப் பயன்படுத்தும் முறைகளைப் பற்றி எடுத்துக் காட்டியுள்ளது. நீலி; நீல், அவுரி என்று அழைக்கப்படும். இண்டிகோ புஸ்டோரியா நீலநிறச் சாயம் ஆடைகளுக்குச் சாயமேற்றப் பயன்படுத்தப்பட்டுள்ளதைப் பல தரவுகளிலிருந்து அறிய முடிகிறது.[48] இந்நீல நிறச் சாயம் முதன் முதலாக இந்தியாவிலிருந்து உலகின் பிற நாடுகளுக்குப் பரவியது என்பதற்கான வரலாற்று ஆதாரங்கள் பல உள்ளன.

### 4.2.2.3 கனிமச் சாயங்கள்

"கல் தோய்த்து குத்த படிவப் பார்ப்பானையும் என்று முல்லை பாடல் வரியானது கனிமச் சாயங்களான செங்காவி, மஞ்சட் காவி போன்ற காவி, நீல கற்களிலிருந்து பெறப்பட்ட சாயங்களைப் பயன்படுத்தி ஆடைகளுக்கு வண்ண மூட்டியுள்ளமையைக் குறிக்கிறது[49]

### 4.2.2.4. விலங்கினச் சாயங்கள்

**"அலத்தகம் ஊட்டிய அஞ்செஞ் சீறடி''** [50]

என்னும் வரியை அலங்காரம் பொருள்களுக்குச் சாயம் பயன்படுத்தப்பட்டதை எடுத்துக் காட்டுகிறது. அலத்தகும் என்பது சாயத்தைப் பருத்திப் பஞ்சில் தோய்த்து, கை, கால் விரல்களுக்கு அழகிய சிவப்பு நிறத்தில் சாயமிடப் பயன்படுத்தப்பட்டதைக் குறிக்கும் இதனைச் செம்பஞ்சுக் குழம்பு என்று அழைப்பர்.

### 4.2.2.5 சாயமிடுதல் பற்றிய அறிவியல் செய்திகள்

ஆடைகளுக்குச் சாயமிடுதலில் தனித்த வண்ணத்தை மட்டுமின்றி வண்ணக் கலவையினைக் கொண்டு இரண்டாம் நிலை வண்ணங்கள் பலவற்றை உருவாக்கியுள்ளனர்.

**"துவர் செய்யாடைச் செந்தொடை மறவர்''** [51]

என நற்றிணை செம்மை நிற ஆடையினைக் குறிக்கிறது.

**"காயாம்பூக்கன்னிக் கருத்துவர் ஆடையை''** [52]

எனகலித்தொகையிலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. கருமையும் செம்மையும் கலந்த நிலத்தையுடைய ஆடையினைக் உருவாக்கத்தில் வண்ணக் கலப்புகளைப் பயன்படுத்திச் சாயமிட்டமையைம் வெளிப்படுத்துக்கின்றன எனலாம்.

### 4.2.2.6 சாயமிடும் உத்திகள்

அக்காலத்தில் சாயமிடும் உத்திகளில் ஒன்றாக நடைமுறைச் சாயமிடல் காணப்படுகிறது. இதில் சாயமிட வேண்டாத பகுதிகளில் தேன்மெழுகு போன்ற பொருள்களைப் பயன்படுத்திச் சாயம் புகாது தடை செய்தனர். இன்றளவும் இவ்வுத்தி நடைமுறை இருக்கின்றன. இது போன்ற மெழுகினைக் கொண்டு துணி ஓவியம் வரையறுப்பட்ட ஒரு செய்தி குறிப்பினைக் கீழ்க் காணும் பாடல் வரி விளங்குகிறது.

**"புதுவ தியன்றி மெழுகு செய் படபி சைத்**
**திண்ணிலை மருப்பின் ஆடுதலையாக**
**விண்ணார்பு திரிதரும் வீங்கு செலல் மண்டிலத்**
**முரண் மிகு சிறப்பிற் செல்வனோடு நிலை இய உரோகிணி [53]**

துணிகளின் மேல் மெழுகுவர்த்தியைக் கொண்டு ஞாயிற்றுடன் கூடிய எதிர் புறமாக உள்ள திங்களைப் போல் ஓவியம் அமைந்துள்ளது என்பதை உணர்த்துகிறது. இப்படி பலவாறாக சாயம் செய்யப்பட்ட துணிகள் ஓவியங்களாக அமைக்கப்பட்டுள்ளன.

### 4.2.2.7 வடிவங் கொடுத்தல்

உடுக்கும் நிலையில் அதாவது துணிக்கு ஒரு வடிவம் கொடுக்கும் நிலையிலும் தைத்தல் தொழில் அமைகின்றது. பொது நிலையில் தமிழரின் உடைகள், துணியினை அவ்வாறே உடுத்த நிலையிலேயே காணப்படுகின்றன. எனினும், படம், மெய்ப்பை, குப்பாயம், கஞ்சுகம் போன்றவற்றைத் தைத்துத்தான் அணிந்திருக்க முடியும் என ஊகிக்கலாம். செல்லாய்வு இதனை வலியுறுத்தும்.

## 5.0. சலவைத் தொழில்

சலவைத் தொழில் என்பது மேலை நாகரீகம் தோன்றிய பின்னரோ தமிழகத்தில் தோன்றியிருக்க கூடும் என்று சிலர் கருதுவார்கள். ஆயினும் தமிழ்ச் சமுதாயத்தின் தொன்மை மிக்க தொழில்களுள் சலவைத் தொழிலும் ஒன்று, இச்சலவைத் தொழில் எல்லாரலும் மேற்கொள்ளப்பட்ட ஒன்று என்றாயினும் சிறுதொழில் வகைகளுள் இதனை வகைப்படுத்தலாம். இச்சலவைத் தொழில் சங்க காலத்தில் இருந்த நிலையை,

> **ஆடு இயல் விழவின் அருங்கல் மூதூர்**
> **உடையோர் பண்மையின் பெருங்கை தூவா**
> **வறன்இல் புலைத்தி எல்லித் தோய்த்த**
> **புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்க மொடு**[54]

என்ற நற்றிணை விளக்குகிறது. சங்களை சிறப்பம் இதுபோன்ற சலவைத் தொழிலைச் செய்து தங்கள் நிலையை உயர்த்திக் கொண்டனர்.

## 5.1ஆடையைத் தூய்மைச் செய்தல்

ஆடையை நெய்வது மட்டுமின்றி அதனை முறையாகச் சுத்தப்படுத்தி அணிவதை சங்க கால மக்கள் வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்ற செய்தி வியப்பிற்குரியது. இதற்கான குறிப்புகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

> **“ஊரவர் ஆடை கொண்டொலிக்கும் புலைத்தி**[55]

எனக் கலித்தொகையிலும்,

> **“வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த**
> **புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கம்”**[56]

என நற்றிணையிலும்,

**நலந்தகைப் புலைத்தி பசை தோய்த்தெடுத்தது**

**தலைப்புடைப் போக்கித் தன்கயத்திட்ட**

**நீரிற் பிரியாப்பரு உத்திரி கடுக்கும்**

**களர்ப்படு கூவற் றோண்டி நாளும்**

**புலைத்தி கழீஇய தூவெண் ணறுவை**

**-- -- -- -- -- -- -- -- -- --**

**பசை விரற் புலைத்தி நெடிது பிசைந்தூட்டிய**

**பூந்துகில் இமைக்கும் பொலன் காழ் அல்குல்''**[57]

எனப் புறநானூற்றிலும்,

**காழியர் கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப்**[58]

என அகநானூறு ,

**காடியுண்ட பூந்துகில் கழும மூட்டும்''**[59]

அடிகள் மூலம் ஆடையைத் தூய்மை செய்யும் தொழிலை செய்து மக்கள் வாழ்க்கை வாழ்ந்துள்ளனர் என்பதை இப்பாடல்கள் வாயிலாக அறிய முடிகின்றது. இதனால் ஆடையின் நாகரீக வளர்ச்சியும் தெளிவாக புலப்படுகிறது.

## 5.2. மெத்தைவிரிப்பு

ஒவ்வொரு மெத்தைக்கும் மேல் விரிப்பை கஞ்சி அளவாக இட்டுத் தூய்மை செய்து மெத்தை மேல்விரிக்கும் சிறுதொழிலை பெண்கள் செய்து வந்தனர் என்பதை,

துணை புணர் அன்னத் தூநிறத்தூவி
இணை அணை மேம்படப் பாய், ‘அணை இட்டு’
காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்
தோடு அமைதூ மடி விரிந்த சேக்கை’’[60]

என்று திருமுருகாற்றுப்படை காதல் துணைகளாய்த் தம்முட் புணர்ந்த அன்னப்பறவைகளின் வெள்ளிய இறகை இணைத்து இயற்றிய அணையை மேன்மையுண்டாகுமாறு விரித்து அதன் மேல் தலையணை, சாயணை முதலிய அணைகளையும் இட்டு வைத்தனர். நன்கு கழுவி கஞ்சி அளவாக இட்டுத் தூய்மை செய்யப்பட்ட தூய ஆடையை மணம் மிக்க மலரிதழ்கள் வைத்து மணம் ஊட்டப் பெற்று பின்னர் படுக்கையின் மேல் விரித்தனர்.

## 5.3. அழுக்கு துணிகளை தூய்மை செய்தல்

குடும்பத்தில் உள்ள அழுக்கு துணிகளை எடுத்துச் சென்று வெளுத்துவர மகளிர் இருந்தனர். அவர்களை புலத்தியர் என அழைக்கப்பெற்றனர். இவர்கள் துணி வெளுக்கும் சிறுதொழிலைச் செய்து தங்களுடைய வாழ்க்கையை நடத்தி வருகின்றனர். அவர்கள் எப்பொழுதும் ஓய்வின்றி உழைத்தனர்.

ஆடு இயல் விழவின் அழுங்கல் மூதூர்
உடையோர் பன்மையின் பெருங்கை தூவா
வறன் இல் புரைத்தி எல்லித் தோய்த்த
புகாப் புகர் கொண்ட புன் பூங்கலிங்கமொடு[61]

என்ற நற்றிணை வாயிலாக ஆடைகளை துவைக்கும் செய்கையிலிருந்து கை ஒய்வு கொள்ளாத வறுமையற்ற புலத்தி இரவிலே தோய்த்த சோற்றின் கஞ்சியிட்டுப் உலர்த்தினாளாம். மேலும்,

**“நலத்தகைப் புலத்தி பசை தோய்த்து எடுத்துத்**
**தலைப்புடைய போக்கித் தண் கயத்து இட்ட**
**நீரின் பிரியாப் பரூஉத் திரி கடுக்கும்**[62]

என்ற குறுந்தொகை வழி தோழி அழுக்கினை அகற்றி தூயதாக்கும் நன்மையுடைய கைகளை கொண்ட ஆடை வெளுப்பவள், ஆடையை கஞ்சியில் தோய்த்து எடுத்து, முதலில் நீளப் புடைத்துப்பின் முறுக்கு அவ்வாடையைக் குளிர்ந்த நீரில் இடுவாள் என்று தூய்மைப்படுத்தும் தொழிலைப் பற்றி சிறப்பாக எடுத்துறைக்கப்பட்டுள்ளது.

**“பசை கொல் மெல் விரல், பெருதோள் புலைத்தி’’**[63]

என்ற அகநானூறு ஆடைகளிலே ஊட்டப் பெற்ற கஞ்சி பசையினைக் கரைத்து விடும் மெல்லிய விரல்களையும் பெரிய தோள்களையும் உடைய ஆடை வெளுப்பாள் என்று குறிக்கிறது

## 5.4 தைத்தல் தொழில்

துணி உடுக்கும் நிலையில் தைத்தல் தொழில் அமைகின்றது. இவ்வகைத் தொழில் ஒரு சிறுதொழிலாக கொண்டு மக்கள் வாழ்க்கை நடத்தி வந்தனர் என்ற கருத்தினை தமிழர் ஆடைகள் என்ற நூல் வாயிலாகக் காண முடிகின்றது.

வீட்டில் உள்ள பெண்களுக்கு இது ஒரு கைத் தொழிலாக இருந்தாலும் தங்களின் வீட்டிற்கு தேவையான பொருட்களை வாங்கிக் கொள்ளவும் பணத்தை சேமித்து கொள்ளவும் இந்தக் கைத் தொழிலில் சிறப்பான தொழிலாக எடுத்துரைக்கலாம். இப்படிப்பட்ட சிறப்பான தொழிலை பல்வேறு நிலங்களில் வாழும் மக்கள் பயன்படுத்தி வாழ்ந்தனர்.

தையல் தொழில் பற்றிய அறிவிருந்தும் தைத்த ஆடைகளை இன்றியமையாததாகக் கருதாமையே அவற்றிற்கு முக்கியத்துவம் அளிக்காமைக்கும், சட்டை போன்றவற்றைத் தைத்தலின் விளக்கங்கள் அமையாமைக்குரிய காரணம் எனலாம்.

**'துன்னகாரரும் தோலின் துன்னரும்**
**கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கி''[64]**

என்று சிலம்பும்,

**தோலின் துன்னரும் துன்ன வினைஞரும்'[65]**

என மணிமேகலையும் காட்டும், இவண் துன்னகாரர் துன்ன வினைஞர் என்பன தையற்காரரையும், தோலின் துன்னர், தோலினால் படைக்கலங்களுக்கு உறை முதலியன தைப்போரையும் விளக்கி நிற்கின்றது. தையல் தொழிலில் முக்கியத்துவம் வகிக்கும் ஊசி பற்றிய குறிப்புகள் இடம் பெறலையும் தையல் தொழில் அறிவுக்குரிய சான்றாக நினைக்கலாம்.

**'கொற் சேரித் துன்னூசி விற்பாரில்'[66]**

என்று பழமொழி இயம்பும் குறிப்பினை காணலாம். இக்கருத்தினையே,

"இருப்புக் கம்மியற்கு இழை நுழை
ஊசி ஒன்று இயற்றி
விரப்பின் ' கோடியால் விலைக்கு' எனும்
பதடியின் விட்டான்
கருப்புக் கார்மழை வண்ண! அக்
கருந்திசை களிற்றின்
மருப்புக் கவ்விய தோளவன்
மீளருமாயம்''[67]

கம்பன் பாடலிலும்,

**ஆளிற் பெண்டிர் நாளிற் செய்த**

**- நுணங்கு நுண்பனுவல்**[68]

என நற்றிணையிலும்

**"தொன்று தாமுடுத்த அம்பகைத் தெரியல்**[69]

திருக்கோவையார் கூறுவதைபோல, இருந்தும் தைத்தல் தொழிலின் சிறப்பம்சங்களைப் பற்றி குறிப்பிட்டுள்ளது இதில் ஊசியைப் பற்றி பார்க்கும் பொழுது இரும்பின் முக்கியத்துவத்தை அறிய முடிகின்றது.

பரித்துக் கொண்டு அவர்களுடன் வந்த படையையும் எரிக்கும் சக்தி வாய்ந்தவர்கள் மறவர்கள் என்று இப்பாடல் வெளிக்கொணர்கிறது.

## 6.0 போர்த் தொழில்

பகைவர் மேல் போர் தொடுத்துச் செல்லும் அரசர்கள் பகைவர் நாட்டில் உள்ள தெருக்கள், வீடுகள், விளைநிலங்கள் மற்றும் செல்வங்களாக அழிப்பது மரபு.மற்றொரு புறநானூற்றுப் பாடல் ஒன்றில், பகைவர் நாட்டில் இருந்த பறவைகள் ஆரவாரிக்கும். புகழ்நிறைந்த விளைவயலை வெண்மையான தலையாட்டத்தையுடைய செருக்குடைய குதிரைகளின் கவிந்த குளம்புகள் தாவுமாறு தேரைச் செலுத்தி அழித்ததாக கூறப்பட்டுள்ளது. இவ்வாறு பகைவரது விளைநிலங்களைக் குதிரைகள் கொண்டு அழிப்பதற்குக் காரணம் குதிரையின் விரைந்த ஓட்டமும் அதன் குளம்புகளின் வலிமையுமே காரணம் ஆகும். இச்செய்தியை,

> **" புள்ளினம் இமிழும் புகழ்சால் விளை வயல்,**
> **வெள் உளைக் கலி மான் கவி குளம்பு உகளத்**
> **தேர் வழங்கினை, நின் தெவ்வர் தேஎத்து"[70]**

என்ற புறப்பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. சேரமன்னன் ஒருவன் பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். அவனுடைய குதிரைகள் பகைவர் நாட்டிலுள்ள வயல்களில் சுழன்று போரிட்டன. அவ்வாறு குதிரைகள் சுழன்று போரிட்டதனால் வயல்கள் உழுதது போல் காட்சியளித்ததாக கூறப்பட்டுள்ளது. வயலை உழுவதற்கு எருது பூட்டிய ஏரைப் பயன்படுத்துவது மரபு. இங்கு எதுவிமின்றி நிலம் குதிரையின் சுழற்சியினால் உழுதது என்று கூறுவது அதன் பேராற்றலை விளக்குவதற்கேயாகும். இச்செய்தியை,

> **"மா ஆடிய புலன் நாஞ்சில் ஆடா"[71]**

என்ற பதிற்றுப்பத்து பாடல் குறிப்பிடுகின்றது. மன்னன் ஒருவனின் படை ஆற்றலைக் குறிப்பிடும்போது குதிரையின் திறம் கூறப்பட்டுள்ளது.

குதிரைகள் இறந்து போன பகைவர்மேல் அவர்கள் மார்பு சிதைத்து வடிவம் இழக்குமாறு ஓடின. அவ்வாறு களத்தில் ஓடி அவைகள் போரிட்டமையால் அவற்றின் கால்கள் வருந்தி குருதிக்கறை படிந்து காணப்பட்டன. இதனை,

**" மாவே பரந்து ஒருங்கு மலைந்த மறவர்**
**பொலம் பைந்தார் கெடப் பறிதலின்,**
**களன் உழந்து அசைஇய மறுக் குளம்பினவே"[72]**

என்ற புறநானூற்றுப்பாடலடிகள் விளக்கின. குதிரைகள் பிணங்கள் அழுந்துபடுமாறு போர்க்களத்தை உழக்கிச் செல்வதால் வருந்தியனவும் குருதிக்கறை படிந்த குளம்பினை உடையனவாகவும் பேராற்றல் கொண்ட குதிரையை பாணன் ஓட்டிச் சென்றான் என்று கூறுகிறது.

**" பிணன் அழுங்கக் களன் உழக்கிச்**
**செலவு அசைஇய மறுக் குளம்பின் நின்**
**இன நல் மாச் செலக் கண்டவர்**
**கவை முள்ளின் புழை அடைப்பவும்"[73]**

என்ற புறநானூற்றுப்பாடல் வாயிலாக அறியலாம். ஒரு வீரனுடைய வீட்டைக் குறிப்பிடும் போது, அவன் வீட்டு முற்றத்தில் யானையோடு குதிரைகளும் வரிசைபட நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன. அவ்வாறு நிறுத்தி வைத்திருத்தலைப் போர்க்களத்தில் செருக்குடன் விரைந்தியங்கும் குதிரைகள் வெறுத்து ஆரவாரித்தன என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. எனவே பேராற்றலை வெளிப்படுத்தும் வலிமை வாய்ந்த குதிரைகள் சோம்பி ஓரிடத்தில் நிற்கமாட்டாதவை, அவற்றை நிறுத்தி வைக்கவும் இயலாது என்பதை இச்செய்தியின் வாயிலாக அறிய முடிகிறது. இக்கருத்தைக்

**"கந்து முனிந்து உயிர்க்கும் யானையொடு, பனை முனிந்து**
**கால் இயற் புரவி ஆலும் ஆங்கண்,**
**மணல் மலி முற்றம்**[74]

என்ற புறநானூற்றுப் பாடல் உணர்த்துகிறது. போர்க்களத்தில் வலிமையோடு பகைவரை எதிர்த்துப் போரிடும் குதிரைகள், மிக்க விரைவைக் கொண்டவை. அவற்றின் வேகத்தைச் சிறப்பித்துக் கூறும் பொழுது மனத்தின் வேகத்தை விட விரைந்தது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**" நிலம் பிறக்கிடுவது போலக் குளம்பு குடைபூ**
**உள்ளம் அழிக்கும் கொட்பின் மான்மேல்"**[75]

என்ற புறநானூற்று அடிகள் குறிப்பிடுகின்றன. வளைத்து விடப்பட்ட மூங்கில் விரைந்து மேலெழுவது போல் போர்க் குறித்து குதிரைகள் மிக விரைந்து ஓடித்தாவித் துள்ளிச் சென்றன. இச்செய்தியை,

**"வெடிவேய் கொள்வது போல ஓடி**
**தாவுபு உகளும், மாவே;**[76]

என்ற அடிகள் வாயிலாக அறியலாம். குதிரைக் கூட்டங்கள் பகைவர் மேலே செருக்குடன் செல்வதனால் மிக்க நிறத்தையுடைய துகள், எங்கும் பரவுகின்றன. அவ்வாறு பரவுவதால் கதிரவனின் வெயில் மறைக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. குதிரைக் கூட்டங்கள் சென்றதனால் எழும் புகை சூரிய வெளிச்சத்தை மறைக்கும் என்பது இயலாத செயல். ஆயினும் இவ்வாறு குறிப்பிட்டிருப்பது குதிரையின் செருக்கைச் சிறப்பித்து கூறும் பொருட்டு ஆகும். இக்கருத்தை

**" மா எடுத்த மலிகுரூஉத் துகள்**
**அகல் வானத்து வெயில்கரப்பவும்''[77]**

என்ற பதிற்றுப்பத்து அடிகள் குறிப்பிடுகின்றன. குதிரைகள் கூர்த்த அறிவுடையவை. அவை எந்த நோக்கத்திற்கு பகைப் புலத்தில் கொண்டு செல்லப்பட்டனவோ அதை அறிந்து செயல்படக்கூடியவை, இதனை ஆகாயமானமது மறையும் படி காற்றைப் பிளந்து கொண்டு ஒளிவீசும் கதிர்களையுடைய ஞாயிற்றை அடைவதைத் தம் நோக்கமாக நெஞ்சில் கருதி செல்பவை குதிரைகள் என்ற பத்துப்பாட்டு செய்தி வாயிலாக அறியமுடிகிறது. இக்கருத்தை,

**" அம் கண் மால் விசும்பு புதைய, வளி போழ்ந்து,**
**ஒண் கதிர் ஞாயிற்று ஊறு அளவாத் திரிதரும்**
**செங்கால் அன்னத்துச் சேவல் அன்ன,**
**குரு மயிர்ப் புரவி உராலின், பரிநிமிர்ந்து,**
**கால் எனக் கடுக்கும் கவின் பெரு தேரும்''[78]**

என்ற பதிற்றுப்பத்து பாடலடிகள் வாயிலாக அறியலாம். வீர மரணம் அடையும் மறவர்களைப் போன்று போர்க்களத்தில் குதிரைகளும் தம் ஆற்றல் மிக, வலிமையோடு போரிட்டு மாண்டுள்ளன. இதனை,

**" ஒளிறு வாள் மறவரும், களிறும், மாவும்,**
**குருதி அம் குரு புனற் பொரு களத்து ஒழிய,[79]**

என்ற புறப்பாடல்களாலும்,

**" விறற் புகழ் மாண்ட புரவி எல்லாம்**

**மறத் தகை மைந்தரொடு ஆண்டுப் பட்டனவே"[80]**

என்ற புறப்பாடலாலும் உணரலாம். பேராற்றல் மிக்க குதிரைகளைக் கொண்ட வேந்தர்களை குதிரையின் தன்மைக் கூறி அவர்களை வாழ்த்தும் மரபு இருந்துள்ளது. இதற்குச் சான்றாக பின்வரும் பாடல்கள் அமைகின்றன.

**" கண் ஆர் கண்ணி, கலிமான் வளவ!"**

**" வயமான் தோன்றல் !.......................... "**

**"கதிர் இலை நெடுவேற் கடுமான் கிள்ளி"**

**"களம் கொள் யானை, கடுமான் , பொறைய![81]**

வள்ளல்களும், வேந்தர்களும் சிலர், குதிரையின் ஆற்றலை வியந்து அதற்கு பெருமதிப்பு கொடுத்து தன் பெயரையே வழங்கியுள்ளார்கள். அவர்களை குறிப்பிடதக்கவர் காரி, ஓரி போன்றோர் தம் குதிரைக்கு காரி, ஓரி என்றே பெயரிட்டு அழைத்துள்ளனர். இதனைப் பகைவர் சுட்டிக் காட்டுவதின் வாயிலாக அறிய முடிகிறது.

இவ்வாறாக குதிரையானது மன்னர்களின் போர் வாழ்வில் அவர்களின் போர் ஆற்றலுக்கு நிகராக தான் முழு ஆற்றலையும் வெளிப்படுத்தி போர்க்களத்தில் பெரிதும் உதவியுள்ளது.

## 7.0. கூத்துக்கலை

கூத்து என்பது ஒன்றொடொன்று தொடர்பில்லாத தனித்தனி வரலாற்று நிகழ்ச்சிகளை நடித்துக் காட்டுவதாகும். இறைவனை பற்றியும் நாட்டில் நடைப்பெற்ற ஆட்சி பற்றியும் எடுத்துரைக்கவும், மக்களின் பொழுது

போக்கிற்காகவும், இவ்வகையிலான கூத்து கலையில் வல்லுநர்களே சிறப்பு பெற்று இத்தொழிலை செய்கின்றனர். இதனால் நாட்டில் நடைபெறும் அனைத்துச் செய்திகளை அறியும் வண்ணம் படித்தவன் படிக்காதவன் என்ற பாகுபாடு இல்லாமல் அனைவரும் மதி நுட்ப வல்லுநர்களாக திகழ்ந்துள்ளனர். மேலும் மகளிர் இக்கூத்துக்கலையை தங்களுடைய வருமானத்திற்காகவே பயன்படுத்தியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இது போன்ற கூத்துக்கலையை செய்தவர்கள் கூத்தர், விறலியர், பொருநர் என்ற பெயரில் வாழந்து வந்தனர் என்று சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

சங்ககாலத் தமிழ் சமுதாயத்தில் தத்தமக்குரிய கலைத்திறனை மேன்மேலும் நயம் பெற வளர்த்து வந்தனர்.

பல்வேறு மத்தளம், வெண்கலத்தால் இயன்ற தாளம் மயிற்பீலி கட்டப்பட்ட கொம்பு யானைக் கை போன்ற நெடுவங்கியம், குறுந்தூம்பு, குழல், கரடிகை, சல்லி, ஒருகண் மாக்கிணை முதலிய இசைக் கருவிகளை கொண்டுச் சென்று குறுநில மன்னனாகிய நன்னனை சில கலைஞர்கள் காணச் சென்றனர்.

**"திண்வார் வசித்த முழவொரு, ஆகுளி**

**-------------------------------------**

**-------------------------------------**

**நேர் சீர் சுருக்கில் காயகலப் பையீர்''[82]**

என்ற மதுரைக் காஞ்சிப் பாடல் கூத்தர்கள் ஏந்திச் செல்லும் பல்வேறு இசைக் கருவிகளின் பெயர்களைக் குறிக்கிறது. எல்லா இசைக் கருவிகளுக்கும் மத்தளம் அடிப்படைக் கருவியாக விளங்குதலால் முதலில் கூறப்பட்டது. மத்தளத்தின் ஒலி, குறிப்பிடபட்டுள்ளது. வாரினால் இறுக

கட்டப்பட்ட வழியே மத்தளத்தின் கண்களிலிருந்து இனிய ஓசை பிறக்கும். தாளத்தொடும் அதற்குரிய கிரியைகளோடும் ஒத்து இயையுமாறு இயற்றப்படுதலால் பண்இசை எனப்பட்டது. தோல் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி என்னும் நால்வகைக் கருவிகளும் ஈண்டுச் சுட்டுப்பட்டுள்ளன.

ஊது கொம்பிற்கு மாலை சூட்டுதல் மரபு. நெடு வங்கியம் உள்ளீடில்லாத நீண்ட புழையுடைதாகும். அது யானையின் கைபோல் நீண்டு, அகன்ற, முன்புறம் வளைந்து காணப்படுவதாகும். யானையின் உயிர்ப்புக் கருவியாக விளங்குதலால் துதிக்கை ஈண்டு “உயிர்'' என்க் கூறப்பட்டது.

குறுந்தூம்பு என்னும் இசைக்கருவி “இளி'' என்னும் நரம்பின் ஓசையை உண்டாக்க வல்லது.

புல்லாங்குழல், ஏனைய இசைக் கருவிகளுக்கு ஆதாரமாய்ப் பாட்டின் கருதினைத் தன்னகத்தே கொண்டு விளங்குவதாகும்.

கரடிகை என்னும் கருவி, தோற் கருவியாகும். தாளத்தின் அளவிற்கு ஏற்ப, தவளையின் குரலைப் போல தட்டைப்பறை என்றும் இதனைக் கூறுவர்.

சல்லிகை என்னும் பறை, தாளத்தின் தன்மைக்கு ஏற்ப ஒலிப்பதாகும்.

ஒரு கண் மாக்கினை என்னும் பறை, ஒலியளவின் தன்மையை மிகவும் நுட்பமாகக் காட்டுவதாகும்.

இசைக் கருவிகள் தனித்தனியே சிறுசிறு முடிச்சுக்களாய்க் கட்டப்பெற்று அவை காவில் கோத்துத் தொகுதியாக எடுத்துச் செல்லப் பெறும். இரு முடிச்சுக்களின் தொகுதி பலாக்காய்கள் கார்காலத்தில் பலா மரத்தில் கொத்துக் கொத்தாகத் தொங்குவன போல் உள்ளது.

**"நல்யாழ் ஆகுளி, பதலையொரு சுருக்கி**
**செல்லாமோ தில் சில் வளை விறலி''[83]**

என்கிறது புறநானூறு நல்ல யாழினை சிறுபறையையும் ஒரு புறத்தே அடிக்கப்படும் பதலை எனும் பறையையும் மக்களின் பொழுது போக்கு இசைக் கருவி என்று இப்பாடல் விளக்குகிறது.

**"ஒருதலை பதலை தூங்க, ஒரு தலைத்**
**தூம்பகத் சிறு முழாத் தூங்கத் தூக்கித்''[84]**

என்ற புறநானூற்றுப் பாடல் அரசனுடைய புகழைப் பாடும் விறலியும், கூத்தரும், பாணரும் ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறார்க்கு என்று கூறப்படுகிறது. இதில் பண்ணனை இசைக்கக் கூடிய கருவியாக ஒரு தலை பதலை முக தோற்கருவியை குறித்து.

**"பண்ணமை முழவும் பதலையும் பிறவும்**
**கண் அறுத்து இயற்றிய தும்பொடு சுருக்கிக்''[85]**

என்ற பதிற்றுப்பத்து பாட குறிக்கிறது. (41) நல்ல யாழை இளை மகளிர் தாங்கினர். தன் கண்களி இசையமைத்த மத்தளமும் ஒரு கண் மாக்கினையும் பிறவாத்தியங்களும் மூங்கிலின் கணுக்களை அறுத்து இயற்றப்பட்ட பெருவங்கியமும் ஆகிய கருவிகள் இருந்தன என்று இப்பாடல் எடுத்துரைக்கிறது.

**"கண் விடு தும்பிற் களிற்று உயிர் தொடுமின்''[86]**

என்ற புறநானூறு தம்முடன் வந்த பாண் சுற்றமும் முழா, யாழ், பெருவாங்கியம், சல்லி, சிறுபறை, பதலை போன்ற இசைக்கருவிகள் கொண்டு

ஓரியின் புகழைப் பாடச் சொல்வதன் முலம் அவர்கள் கொண்டு வந்த இசைக் கருவிகளின் பட்டியை உணர்த்துகிறது.

**"ஓய் களிறு எடுத்து நோயுடை நெடுங்கை**
**தொரு செல் கோடியர் தூம்பின் உயிர்க்கும்''[87]**

என்ற அகநானூறு மூங்கிலின் அறுத்துச் செய்யப்பட்ட பெரு வங்கியம் என்னும் இசைக் கருவியைக் குறிக்கிறது. இது தூம்பாகிய களிற்றினது கைபோலும் வடிவையுடைய பெரு வங்கியம் என்று கூறப்படுகிறது.

**"கழைவளர் தூம்பின் கண்ணிடம் இமிர''**
**தட்டைப் பறையிற் கறங்கும் நாடன்''[88]**

என்ற தொடரில் பல்லியங்களில் தட்டைப் பறை என்ற ஒரு தோற் கருவி உள்ளதைக் குறிக்கிறது. இந்த கருவியை கரடிகை என்று கூறுவர். என்ற குறுந்தொகைப் பாடல் (59) ஒரு கண் மாக்கிணையே இயக்குகின்ற தாளத்தை உடைய பாணர்.

**"காவில் தகைத்த துறை கூடு கலப்பையர்''[89]**

ஆகியோரும் இருந்தார்,

**"காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை''[90]**

கலப்பையினை கொண்டு கூத்தர்கள் இசையினை இசைக்கின்றனர் என்பதை இப்பாடல் விளக்கியது. இதில் கூத்தர் பல்வேறுக் கருவியைக் கொண்டு மன்னர்களின் பொருமையை மக்களின் பெருமையையும், இசைத்துள்ளனர். இதனால் கூத்துக் கலை வளர்ச்சியடைந்துள்ளது என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

## 7.1 ஆடல் தொழில்

விறலியர் மக்களின் பொழுது போக்கிற்காக ஆடற் தொழிலைச் செய்கின்றனர். அப்படிப்பட்ட தொழிலை செய்யும் மகளிர் அதில் கிடைக்கும் வருமானத்தை வைத்து தங்களுடைய தேவைகளை நிறைவேற்றிக் கொள்கின்றனர்.

**"ஆடல் மகளிர் பாடல் கொளப் புணர்மார்**
**தண்மையில் திறந்த இன்குரல் தீம் தொடை**
**கொம்மை வருமுலை வெமையில் தடைஇ''**[91]

ஆடல் தொழில் செய்யும் விறலியர் தம் பாட்டினை யாழில் இசைப்பதற்கு நரம்பினை தெறித்துப் பார்க்க அவை தண்மையால் ஓசை வெளிப்படுத்தாது நிலைத்திரிந்து இருந்தன என்பதை நெடுநல்வாடை குறிக்கிறது.

## தொகுப்புரை

* சங்க இலக்கியத்தில் சிறுத்தொழில்கள்யாவும் மக்கள் தங்கள் வாழ்க்கையை முன்னேற்றப் பாதையில் கொண்டுச் செல்வதற்கு பெரும் பங்காற்றியுள்ளன.

* ஆயினும் இதுபோன்ற சிறுத்தொழில்களைப் நோக்குகையில் மக்கள் ஏழ்மை நிலையில் இருந்திருக்கின்றனர்.

* சங்க இலக்கியத்தில் சிறுத்தொழில்களாக கிணறு தோன்றல், விறகு வெட்டுதல், ஆடையைத் தூய்மைச் செய்தல், சலவைச் செய்தல், மண்பாண்டம் செய்தல், பூ விற்றல் தச்சர் தொழிலில் துணி

தைத்தல், பாய் பின்னுதல், கட்டில் பின்னுதல், வேட்டையாடுதல் தேன் எடுத்தல், முத்துக்குளித்தல், நகை செய்தல் ஆகியனவாகும்.

* இச்சிறுதொழில்கள் வாயிலாக மக்கள் பல்வேறு நிலமக்களோடு தொடர்பு கொண்டு தொழில்களை வளர்க்கவும், திருவிழாக் காலங்களில் நட்புறவு காரணமாக வெளியுறவு மக்களுடன் இணைந்து வாழ்ந்துள்ளனர்.

* மேலும் உள்நாட்டு மற்றும் வெளிநாட்டில் இருந்துவந்து வாணிபம் செய்பவர்களுக்கும் இச்சிறுதொழில் வாயிலாக மக்கள் பயன் அடைந்துள்ளனர்.

* இதனையே இவ்வாய்வுக்கட்டுரை வாயிலாக அறிந்து கொள்ள முடியும்.

# சான்றெண் விளக்கம்

| நூல் | பாடல் எண் | பக்கஎண் |
|---|---|---|
| 1. சங்க கால வாழ்வியல் | | ப.59 |
| 2. மேலது | பா. 511 | ப.20 |
| 3. மேலது | பா. 654 | ப.25 |
| 4. மேலது | பா. 532 | ப.22 |
| 5. மேலது | பா.643 | ப.25 |
| 6. திருமுருகாற்றுப் படை | பா.193 | ப.13 |
| 7. மேலது | பா. 300 | ப.18 |
| 8. மலைபடுகடாம் | பா. 171 | ப.370 |
| 9. நற்றிணை | பா. 97 | ப.174 |
| 10. மேலது | பா. 118 | ப.216 |
| 11. பொருநர்ஆற்றுப்படை | பா. 82 | ப.83 |
| 12. பெரும்பாணாற்றுப்படை | பா. 155 | ப.78 |
| 13. மேலது | பா. 163 | ப.78 |
| 14. குறுந்தொகை | பா. 139 | ப.322 |
| 15. பெரும்பாணாற்றுப்படை | பா. 52 | ப.206 |
| 16. புறநானூறு | பா. 395 | ப.863 |
| 17. ஐங்குறுநூறு | பா. 21 | ப.51 |

| | | |
|---|---|---|
| 18. பட்டினப்பாலை | பா. 21 | ப.303 |
| 19. பெரும்பாணாற்றுப்படை | பா.253 | ப.84 |
| 20. புறநானூறு | பா. 352 | ப.763 |
| 21. மேலது | பா. 81 | ப.216 |
| 22. அகநானூறு | பா. 269 | ப.804 |
| 23. மலைபடுகடாம் | பா. 430 | ப.380 |
| 24. அகநானூறு | பா. 282 | ப.841 |
| 25. நற்றிணை | பா. 142 | ப.260 |
| 26. மேலது | பா. 142 | ப.260 |
| 27. புறநானூறு | பா. 82 | ப.208 |
| 28. திருமுருகாற்றுப்படை | பா. 85 | ப.8 |
| 29. நற்றிணை | பா. 77 | ப.137 |
| 30. நெடுநல்வாடை | பா. 141 | ப.182 |
| 31. ஐங்குறுநூறு | பா. 106 | |
| 32. மேலது | பா. 48 | |
| 33. குறுந்தொகை | பா. 31 | ப.88 |
| 34. அகநானூறு | பா. 241 | |
| 35. பெரும்பாணாற்றுப்படை | பா. 281 | ப.215 |
| 36. மேலது | பா. 336 | ப.217 |
| 37. அகநானூறு | பா. 79 | ப.238 |

| | | |
|---|---|---|
| 39. புறநானூறு | பா. 70 | ப.182 |
| 40. மேலது | பா. 312 | ப.90 |
| 42. அகநானூறு | பா.246 | ப. 490 |
| 43. புறநானூறு | பா. 228 | ப.538 |
| 44. மேலது | பா. 256 | ப.587 |
| 45. வளர்தமிழ்ஆய்வு | | ப. 238 |
| 46. மேலது | | ப. 248 |
| 47. புறநானூறு | பா. 274 | ப.616 |
| 48. முல்லைப்பாடல் | பா. 37 | ப.327 |
| 49. சிலம்பு | பா. 128 | |
| 50. நற்றிணை | பா. 33 | ப.327 |
| 51. கலித்தொகை | பா.108. | |
| 52. நெடுநல்வாடை | பா.159 | ப.183 |
| 53. நற்றிணை | பா. 90 | ப.270 |
| 54. கலித்தொகை | பா.49 | |
| 55. நற்றிணை | பா. 156 | ப. 236 |
| 56. புறநானூறு | பா.311 | ப.681 |
| 57. அகநானூறு | பா. 89 | ப.266 |
| 58. சீவக சிந்தாமணி | பா. 91 | ப.227 |
| 59.நெடுநல்வாடை | பா. 32 | ப.61 |

| | | |
|---|---|---|
| 60. நற்றிணை | பா. 90 | ப.270 |
| 61. குறுந்தொகை | பா. 330 | |
| 62. அகநானூறு | பா. 34 | |
| 63. பத்துப்பாட்டு | பா. 4 | |
| 64. சிலம்பு | பா. 5 | ப.222 |
| 65. மணிமேகலை | பா.28 | ப. 222 |
| 66. பலமொழி | பா.73 | ப.223 |
| 67. கம்பராமாயணம் | பா.9964 | ப.223 |
| 68. நற்றிணை | பா. 92 | |
| 69. மேலது | பா 96 | |
| 70. திருக்கோவையார் கலம்பகம் | பா. 9120 | ப.223 |
| 71. புறநானூறு | பா.15 | ப.38 |
| 72. பதிற்றுப்பத்து | பா. 25 | ப.72 |
| 73. புறநானூறு | பா.38 | ப.107 |
| 74. பதிற்றுப்பத்து | பா. 67 | ப.233 |
| 75.புறநானூறு | பா. 98 | ப.236 |
| 76. மேலது | பா. 178 | ப.432 |
| 77. மேலது | பா. 303 | ப.665 |
| 78. பதிற்றுப்பத்து | பா. 2 | ப.7 |
| 79. மேலது | பா. 4 | ப.21 |

| | | |
|---|---|---|
| 80. புறநானூறு | பா.167 | ப.399 |
| 81. கலித்தொகை | பா78 | ப.329 |
| 82. புறநானூறு | பா.103 | ப.247 |
| 83. மதுரைக்காஞ்சி | பா.610 | ப.24 |
| 84. புறநானூறு | பா.64 | ப.169 |
| 85. மேலது | பா.152 | ப.353 |
| 86. பதிற்றுப்பத்து | பா.41 | ப.127 |
| 87. புறநானூறு | பா.152 | ப.353 |
| 88. அகநானூறு | பா.111 | ப.338 |
| 89. குறுந்தொகை | பா.59 | ப.152 |
| 90. புறநானூறு | பா.206 | ப.405 |
| 91. நெடுநெல்வாடை | பா.67 | ப.179 |

# இயல் – 3

## உள் நாட்டு வாணிகம்

1.0. வணிகர்கள் வெளிப்படையாக வாணிகம் செய்தல்

1.1. அப்பவணிகர்

1.2. வணிகச் சாத்து

1.4. மிதவைகள்

1.5 கடைத்தெருக்கள்

1.6 வணிகர் வாழும் தெருக்கள்

1.7 பன்மொழியாற்றல்

1.8 சுங்கம்

1.9 காசு

1.10 நாளங்காடி

1.11 அல் அங்காடி

2.0 சிறுவணிகர்கள்

2.1 அறநிலை வணிகர்கள்

2.2 அறுவை வணிகன்

2.3 காவிரிப்பூம்பட்டிணம் நறுமணப் பொருட்கள் விற்கும் இடம்

2.4 முத்து விற்போர்

3.0 உப்பு வணிகர்

3.1 உப்பை விலைக்கூறி விற்றல்

3.2 எருதுகளில் உப்பை கொண்டு சென்று விற்றல்

3.3 உப்பை படகுகளில் ஏற்றிச் செல்லுதல்

3.4 கழுதைகளில் உப்பை ஏற்றிச் செல்லுதல்

3.5 உப்பிற்கு மாறாக நெல்லை பெறுதல்

4.0 கள்

4.1 பசுவிற்கு மாறாக கள்

5.0 தயிரை கொடுத்து நெல்லை பெறுதல்

6.0 மீன்களை விற்றல்

6.1 மீனுக்கு மாறாக கள்ளை பெறுதல்

6.2 மீன் துண்டு கொடுத்து கள்ளை பெறுதல்

6.3 மீனை கொடுத்து நெற்பயிரை பெறுதல்

6.4 மீனிற்கு மாறாக நெல்லை பெறுதல்

7.0 தேன் கிழங்கு விற்றல்

7.1 இறைச்சி விற்றல்

7.2 மீன்இறைச்சி

7.3 கரும்பு அவல் மாறாக இறைச்சி பெறுதல்

7.4 மான் இறைச்சியை கொடுத்து நெல்லை பெறுதல்

7.5 யானை தந்தத்தை விற்றல்

7.6 யானையின் தந்தத்திற்கு மாறாக கள்ளை பெறுதல்

7.7 தானியத்திற்கு யானை தந்தத்தை கொடுத்தல்

8.0 கள்ளிற்கு மாறாக முத்து

8.1 கள்ளிற்கு மாறாக நெல்லை பெறுதல்

8.2 மிளகு

# இயல் – 3

# உள்நாட்டு வாணிகம்

சங்க கால மக்கள் வாணிகத்தை பண்ட மாற்று முறையில் செய்தனர். சங்க கால மக்கள் தம்மிடம் அதிகமாக உள்ள பொருட்களை பிறரிடம் கொடுத்து தமக்கு தேவையான பொருட்களை அவர்களிடமிருந்து பெற்றுக் கொண்டனர். இதற்கு பண்டமாற்று முறை வாணிகம் என்று பெயர். இவ்வகையிலான வணிகமுறைகள் உள்நாடுகளில் அதிகமாக பரவி இருந்தன என்பதை பற்றியும், மற்ற நில மக்களோட கொண்டிருந்த தொடர்பின் காரணமாக வாணிகம் வளர்ந்த முறைப்பற்றி விரித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## 1.0. வணிகர்கள் வெளிப்படையாக வாணிகம் செய்தல்

சங்ககால வணிகர் நவவணிகர் அப்பவணிகர் என்ற இரண்டு முறைகளில் குறிப்பிடப்படுகின்றனர். இவ்வணிக வல்லாரும் நடுவு நிலை தவறாது தங்களது தொழிலைச் செய்து வந்தனர். இதில் அப்ப வணிகர் தாம் பொருளை வாங்கியதற்கு கொடுத்த விலையையும் அப்பொருளை விற்பதால் தமக்கு கிடைக்கும் இலாபத்தையும் வெளிப்படையாக சொல்லியே வாணிகம் செய்தனர். அவர்களது வணிக மாண்பினை,

**“நடுவு நின்ற நல்நெஞ்சினேயர்**
**வடுவஞ்சி வாய் மொழிந்து**
**தமவும் பிறவும் ஒப்ப நாடிக்**
**கொள்வதூவும் மிகை கொளாது**
**கொடுப்பதூவும் குறை கொடாது”[1]**

என்று பட்டினப்பாலை உணர்த்துகின்றது.

## 1.1. அப்பவணிகர்

சங்க காலத்தில் அப்பத்தை செய்து அதனை விற்று கொண்டவர்கள் அப்பவணிகர் அவர்கள் நிலையினை,

**குறுங் கால் காஞ்சி சுற்றிய நெடுங்கொடிப்**

**பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூ**

**கார் அகல் கூவியர்பாகொடு பிடித்த**

**இழை சூழ்வட்டம் பால் கலந்தவை போல்**

**நிழல் தாழ்வார் மணல் நீர் முகந்து உறைப்ப"[2]**

என திருமுருகாற்றுப்படை மலர்கள் ஆங்காங்குள்ள நிழலில் மணற்பரப்பிலுள்ள குழிகள் மிதந்து கொண்டிருக்கும். அது காண்பவருக்கு அப்ப வணிகர் பாகொடு பிறவும் கலந்து பிடித்த அப்பம் கரிய அகலில் கிடந்தாற் போன்று காட்சியளிக்கும் என்பதை கூறுவதிலிருந்து அப்பவணிகரின் நிலைகள் தெளிவாகின்றது.

**பணிலம் கலி அவிந்து அடங்க, காழ் சாய்த்து**

**நொடை நவில் நெடுங்கடை அடைத்து, மடமதர்,**

**நல்வரி இறாஅல் புரையும் மெல் அடை ,**

**கவவொடு பிடித்த வகை அமை மோதகம்,**

**தீம் சேற்றுக் கூவியர் தூங்குவனர் உறங்க,**

**விழவின் ஆடும் வயிரியர் மடிய ,**

**பாடு ஆன்று அவிந்த பனிக்கடல் புரைய,**

**பாயல் வளர்வோர் கண்இனிது மடுப்ப ,**

**பானாள் கொண்ட கங்குல் இடையது"[3]**

என மதுரைக்காஞ்சி சங்குகள் ஆரவாரம் ஒழிந்து அடங்கிய பின் கடைகளுக்கு முன் நிழலின் பொருட்டுத், தட்டியைத் தாங்கும் கால்களாகிய சட்டக்காலை எடுத்துவிட்டனர்.பின் பண்டங்களுக்கு விலை கூறி விற்கும் நெடிய கடையை அடைத்து இளமையும் செருக்கும் ஒள்ளிய அணில்களையும் உடைய மகளிர் நடந்து வந்தனர். சர்க்கரையைச் சூடுபடுத்திச் சமைத்த பாகினைக் கூட்டியமைத்த தேக்காயும் பருப்புமாகிய உள்ளீட்டோடு பிடித்த பலவகையான கொழுக்கட்டைகளையும் (மோதகம்) இனிய பாகொடு சேர்த்துக் கரைத்த மாவினையும் உடைய அப்ப வாணிகரும் கொண்டு வந்தனர் என்ற கருத்தினை தெளிவுப்படுத்துகிறது .

## 1.2. வணிகச் சாத்து

வணிகர்கள் தங்கள் பொருட்களை வண்டிகளிலும் எருதுகளையும் ஏற்றிக் கொண்டு கூட்டம் கூட்டமாகச் சென்று விற்று வந்தனர். அவர்கள் அவ்வாறு செல்லும் பொழுது இடை வழியில் கள்வர் முதலியோரால் நேரும் இடையூறுகளை எதிர்த்தல் கருதி போர் பயிற்சி பெற்ற வீரர்களை தங்களுக்கு துணையாக அழைத்துச் சென்றனர். வீரர் கூட்டத்துக்கு வணிகச் **சாத்து** என்று பெயர் வழங்கப்பட்டது. அதனை நடத்திச் செல்லும் தலைவன் **சாத்தன்** என்னும் பெயரால் வழங்கப் பெற்றான்[4].

## 1.3. வணிகத்தொழில்

பண்டமாற்று முறையில் பெறக் கூடியப் பொருள்களை வாணிக நோக்கில் பல்வேறு இடங்களுக்கு கொண்டு சென்று விற்று வாணிகத்தை பெருக்கியுள்ளனர். நாவாய்க் கப்பல்கள் துறைமுகத்தை அடைந்த போது அதை மிக்க மகிழ்ச்சியோடு எதிர் கொண்ட அழைத்தனர் என்பதை,

**"தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரைசேரும்**

**ஏமுறி நாவாய் வரவெதிர் கொள்வார் போல்"[5]**

என்ற பரிபாடல் தெளிவாக விளக்கியுள்ளது. ஆறலைக் கள்வரை எதிர்க்க வேண்டி வணிகர்களும் போர் பயிற்சி பெற்றிருந்தனர் அவ்வாறு உள்நாட்டில் போர் வீரர்களின் துணை கொண்டு வணிகத் தொழிலை நடத்தி வந்த வணிகர்கள் கடல் கடந்து வெளிநாடுகளுடன் தொடர்பு கொண்டு வாணிகத் தொழிலை வளப்படுத்தினார்கள். வெளிநாட்டு வாணிகமும் புரிந்தார்கள் அவர்களுடைய நன்முயற்சியால் கடலில் காற்றின் பருவ நிலையுணர்ந்து நாவாய் செலுத்தும் தொழிலில் தமிழகம் முதலிடம் பெற்று விளங்கியது.

## 1.4. மிதவைகள்

சங்க காலத்தில் வாணிகத்திற்குப் பயன்படுத்தப்பட்ட மூன்று வகையான மிதவைகள் இருந்தன. அவை சிறுகலங்கள பெருங்கலங்கள், கப்பல்கள் அல்லது நாவாய்கள் என்பவையாகும். சிறுகலங்கள் என்பவை புணை, பரிசல், தோணி, ஓடம் ஆகியன. பெருங்கலங்கள் என்பவை திமில், படகு, அம்பி ஆகியவகையாகும். அவற்றுள் அம்பி என்னும் மரக்கலம் பெரும்பாலும் யானை, சிங்கம் குதிரை முதலியவற்றின் முகம் போல அமைக்கப்பட்டிருந்தது.

வாணிகத்தின் பொருட்டுக் கடலில் சென்ற கப்பல்கள் சில சமயங்களில் கவிழ்வதும் உண்டு. இதனை "கலங்கவிழ் மாக்கள், உடைகல மாக்கள்[6] என இலக்கிங்களில் வரும் தொடர்களால் அறியலாம். கடல் வழியாக வாணிகம் செய்த அவர்கள் பெருஞ் செல்வந்தர்களாக விளங்கினார்கள். அவர்களை வள்ளுவனார்,

**"தாழ்விலாச் செல்வர்"[7]**

எனக் குறிப்பிட்டார். பெருஞ்செல்வந்தர்களாக விளங்கிய அவ்வணிகர்களின் "**மன்னர் பின்னோர்"** என்றும் இளங்கோக்கள் என்றும் மன்னர்க்கு அடுத்தாகப் பாராட்டப் பெறும் சிறப்பினை உடையவர்களாக இருந்தனர். மன்னர்கள் அவர்களுக்கு எட்டி என்னும் பட்டமும் பொற்பூவும் அளித்துச் சிறப்பித்தனர்''[8] என்றும் குறிப்பிடபடுகிறது.

## 1.5 கடைத்தெருக்கள்

சங்க காலத் தமிழகத்தில் நடந்த கடைத்தெரு வணிகமும் மிகச்சிறப்பு வாய்ந்தது. தமிழகத்துத் தலை நகரங்களில் கடைத்தெரு வணிகம் சிறப்புற்று விளங்கியது. கடைத் தெருவில் பொருள் வகைகளை அறிவிக்கும் கொடிகள் கட்டி விற்பனை செய்யும் வழக்கம் இருந்து வந்தது. கள் விற்கப்படும் கடையில், பகையரசரின் யானையினது வெண் கோட்டைக் கொண்டு கட்டப்பட்ட கொடி அசைந்து கொண்டிருந்தது.கள்ளுக்கடையில் கள்ளுக்கு விலையாக யானையின் தந்தத்தைக் கொடுத்துக் பெற்றனர்.

**மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு**
**பொன்னுடை நியமித்துப் பிழி நொடை கொடுக்கும்"[9]**

என்ற பதிற்றுப்பத்து வாயிலாக கடைத்தெரு வாணிகம் வியக்கத் தக்க வகையில், வகை வகையாக அமைந்து நாட்டின் செல்வ வசதியை மென் மேலும் பெருகச் செய்யும் வகையில் வாணிகம் நடைபெற்று வந்ததை உணர்த்துகின்றன.

## 1.6 வணிகர் வாழும் தெருக்கள்

சங்ககால மக்களோடு அயல் நாட்டுக்குச் சென்று பொருட்களை வாங்கி விற்கும் வணிகர்களின் தெருக்கள்

**பல்வேறு பண்ட மோடு ஊண் மலிந்து கவினி**

**மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும்**

**பல்வேறு திருமணி முத்தமொடு பொன் கொண்டு**

**சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர் நரும்**[10]

என மதுரைக்காஞ்சி அறநூலோர் இல்லறத்தார்க்கு ஓதிய நன்னெறிப் பிறழாதவராய் இல்லறத்தில் வாழ்ந்தவராய் நெருங்கிய மலைகளின் தொகுதியைக் கண்டால் போன்று மாட்சிமை உடையனவும், பருந்துகள் தங்கி இளைப்பாறி, பின்னர் உயரப்பறக்கும் உயர்ச்சி உடையனவும், பல்வேறு பண்டங்களோடு பல உணவுகளும் நிறைந்து அழகு பெற்று மலை, நிலம், நீர் மற்றுமுள்ள இடங்களில் கிடைக்கும் பலவகைப்பட்ட பொன், மணிகள், முத்து, ஆகியவற்றை வாங்கிக் கொண்டு அயல் நாட்டுப் பண்டங்களை விற்கும் வணிகர் வாழும் தெருக்கள் இருந்ததாக குறிப்பிடுகிறது.

## 1.7. பன்மொழியாற்றல்

சங்க கால மக்கள் பல்வேறு மொழிகளைக் கற்று திறமை வாய்ந்த மக்களிடையே வாணிகம் தொடர்பாக நல்லுறவு கொண்டனர்.

**"பல் ஆயமொடு பதி பழகி**

**வேறு வேறு உயர்ந்த முதுவாய் ஒக்கல்**

**சாறுஅயர் மூதூர் சென்று தொக்காங்கு**

**மொழிபல பெருகிய பழிநீர் தேஎத்துப்**

**புலம் பெயர் மாக்கள் கலந்து இனிது உறையும்**

**முட்டாச் சிறப்பின் பட்டினம்"**[11]

என்று பட்டினப்பாலை குறிக்கிறது. புகார் நகரில் பழமொழி பேசும் வேற்று நாட்டவர் பலர் தங்கியிருந்தனர். அவர்கள் புகாரை அடைந்தமை முதுவாய் ஒக்கலையுடைய திரண்டு வந்தமை போல் விளங்கிற்று.

வேற்று நாட்டவர் பலரும், இந்நாட்டில் எவ்வகை அச்சமும் இன்றி வாழ்ந்தமையோடு, எல்லா நலன்களும் பெற்று மகிழ்ச்சியோடும், சோழ நாட்டு மக்களுடன் நல்ல நட்புறவு கொண்டு வாழ்ந்தனர். அத்துடன் வாணிபம் செய்ய பல மொழிகளும் கற்று தேர்ந்த திறமையுள்ளவர்களாக சோழ நாட்டு மக்கள் இருந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

## 1.8. சுங்கம்

உள்நாட்டு வாணிகத்தாலும், வெளிநாட்டு வணிகத்தாலும் சங்க கால மன்னர்கட்குச் சுங்கம் கிடைத்து வந்தது. உள்நாட்டு வணிகர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று வணிகம் செய்தனர். அவர்கள் சென்ற வழிகளில் சுங்கச் சாவடிகள் இருந்தன. அவரவர் எடுத்துச் சென்ற வணிகப் பொருட்களுக்கு ஏற்றபடி சுங்கம் வாங்கப்பட்டது. சுங்கம் என்பது சங்க காலத்தில் "உல்கு" என்னும் பெயராலும் வழங்கப்பட்டது. சுங்க சாவடிகள் இருந்த பெருவழியினை

**உல்குடைப் பெருவழி"[12]**

எனப் பெரும்பாணாற்றுப்படை வாயிலாக கூறப்படடுள்ளது. கடல் வாணிகத்துக்குரிய ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்களில் சுங்கம் அதிக அளவில் கிடைத்து வந்தது. குதிரைகளுக்கு நாள் முழுவதும் ஓய்வு இல்லாதது வேலை செய்தவர்களுக்கு நாள் முழுமையும் ஓய்வே இல்லை என்பதை,

**"தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட**
**சிறுசுளைப் பெரும் பழங் கடுப்ப மிரியல்**
**புணர்ப் பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்து**
**அணர் செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்**
**வில்லுடை வைப்பின் வியன்"[13]**

எனப் பெரும்பாணாற்றுப்படை வாயிலாக கடியலூர் உருத்திரங் கண்ணனார் குறிப்பிடுகிறார்.இக்கருத்தினை

**"நல்லிறைவன் பொருள் காக்கும்**

**தொல்லிசைத் தொழில் மாக்கள்**

**காய்சினந்த கதிர்ச் செல்வன்**

**தேர் பூண்ட மாஅபோல**

**வைகல் தொறும் அசை இன்றி**

**உல்கு செய்"[14]**

என்ற பட்டினப்பாலை பண்டக சாலைகளிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களுக்கும் இறக்குமதி செய்யப்படும் பொருட்களும் சுங்கம் விதிக்கப்பட்டன. சுங்கம் விதிக்கப்படும் பொருட்களுக்கு சோழர்களின் சின்னமாகப் புலிப்பொறி பொறிக்கப்படும். மரக்கலங்களில் ஏற்றப்படும் பொருள்களும், அவற்றிலிருந்து கரைக்கு இறக்கப்படும் பொருட்களுக்கும் மனத்தால் அளந்தறியப்பட்டு சுங்கம் விதிக்கப்பெறும். சுங்க சாலைகளில் பணிப்புரிவோர் கால ஒழுங்கும் கடுமையும் உடையவர். குதிரைகளில் வருவோருக்கும் சுங்கம் வசூலிக்கப்படுகிறது.

## 1.9. காசு (நாணயம்)

சங்க காலத்தில் பண்டமாற்று வாணிகம் நடந்ததை அறிகிறோம். ஆனால் பண்டமாற்று வாணிபம் நடந்த அந்தக் காலத்தில் காசு வழங்கப்பட வில்லை என்று கருதுவது கூடாது. அதே காலத்தில் செம்பு, வெள்ளி, பொன் காசுகளும் வழங்கி வந்தன. அந்தக் காசுகள் விலையுயர்ந்த பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தப்பட்டன. பண்டமாற்று நடந்ததைச் சங்க நூல்களிலிருந்து தெரிந்து கொள்வது போலவே காசுகள் வழங்கி வந்ததையும் சங்கச் செய்யுட்களிலிருந்து அறிகிறோம்.

பாலை நிலத்து வழியிலே இருந்த நெல்லி மரங்களிலிருந்து உதிர்ந்துள்ள நெல்லிக் காய்கள் பொற்காசுகள் உதிர்ந்துகிடப்பன போலக் உவமையாக கூறப்பட்டன. என்பதை,

**“புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்**

**கல்லதர் மருங்கில் கடுவளி உதிர்ப்ப**

**பொலஞ்செய் காசிற் பொற்பதாஅம்** [15]

என அகநாகனூறு குறிக்கிறது .

**“குயில்கண் அன்ன குரூஉக் காய்முற்றி**

**மணிக்கா சன்ன மால்நிற இருங்கனி**

**உகாஅ மென்சினை உதிர்வன கழியும்**

**வேனில் வெஞ்சுரம்”** [16]

என அகநானூறு குயிலின் கண்களைப் போன்ற காய்கள் முற்றி அழகிய பொற்காசு போன்ற நிறமுடையது.

**“ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த**

**பொலஞ் செய் பல்காசு அணிந்த அல்குல்** [17]

என புறநானூறு குற்றம் இல்லாத பொற்கொல்லனால் செய்ய பெற்ற மேகலையும், பொன்னாலாகிய மாலையும், விளக்கமுற அணி செய்து கொண்டு இருப்பவள் என்று பொற்காசின் பெருமையை சிறப்பாக எடுத்துரைத்துள்ளார்.

**"மேனி ஐதமை நுசுப்பில்**

**பல்காசு நிரைத்த கோடடு ஏந்து தல்குல்**

**மெல்லியில் குறுமகள்"[18]**

என்கிறது அகநானூறு. பல மணிகள் கோத்த மேகலையையும் என்று கூறும் பொழுது காசுகளை மாலை தொடுத்து மகளிர் அணிந்திருந்தனர் என்பது இப்பாடல் வாயிலாக அறியமுடிகிறது.காசு மாலை அணிந்த இன்னொரு பெண்ணை ஓதலாந்தையார் .

**பொலம் பசும் பாண்டிற் காசு நிறை அல்குல்**

**இலங்குவளை மென்றோள்"[19]**

என்று குறிப்பிடுகிறார். காப்பியாற்றுக் காப்பியனார்க்கு 40ஆயிரம் பொன் பரிசாக கொடுத்தான் என்று கூறப்படுகிறது. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை அரிசில் கிழாருக்கு ஒன்பது நூறாயிரம் காணம் பரிசாகக் கொடுத்தான். மேலும் இளஞ்சேரல் இரும்பொறை தன்னைப் பாடிய பெருங்குன்றூர் கிழார் முப்பத்திராயிரம் காணம் பரிசாகக் கொடுத்தான் என்பதை 9ஆம் பத்துப் பாயிரத்தினால் அறிகிறோம்.

பட்டினப்பாலை பாடிய கடியலூர் உருத்திரங்கண்ணனார்க்குச் சோழன் கரிகாலன் நூறாயிரங்காணம் பரிசு வழங்கினான். இவ்வாறு, காணம் என்னும்

பொற்காசு அக்காலத்தில் வழங்கி வந்ததை அறிகிறோம். செங்கம் என்னும் ஊரில் ஈயக் காசுகள் வழங்கி வந்ததை அங்கிருந்து கிடைத்த பழங் காசுகளிலிருந்து அறிகிறோம். அந்த ஈயக் காசுகளில் "பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருப்பதனால் கி.பி இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பு வழங்கி வந்தவை என்று தெரிகிறது. அந்த காசில் உள்ள எழுத்துக்கள் தேய்ந்து உருத்தெரியாமல் மழுங்கிப் போனமையால் அவ்வெழுத்துக்களின் வாசகத்தை அறிய முடியவில்லை. அந்தச் சான்றுகள் அக்காலத்தில் கடல் கடந்த கப்பல் வாணிகத்தின் மூலமாக உரோம தேசத்து நாணயங்கள் சங்கமக்களிடையே இருந்திருக்கின்றன என்பதை உணரலாம்[20].

## 1.10. நாளங்காடி

வணிகத்திற்கு முக்கியமான இடமான நான்மாடக் கூடலாகிய மதுரையில் வணிகப் பொருட்கள் அனைத்தும் நாளங்காடியில் குவிகின்றன. அப்படிப்பட்ட நாளங்காடியில் மக்கள் கூட்டம் திருவிழாக் காலம் போல அலைமோதுகின்றன என்பதை

**"மழை கொளக் குறையாது புனல் புகமிகாது**
**கரை பொருது இரங்கும் முந்நீர் போல**
**கொளக் கொளக் குறையாது தரத்தரமிகாது**
**கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி**
**ஆடு துவன்று விழவின்நாடு ஆர்த்தன்றே**
**மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்**
**நாள் அங்காடி நனந்தலைக் கம்பலை"[21]**

என்ற மதுரைக்காஞ்சி நாள்அங்காடி மேகங் கொள்ளுதலால் குறையாமலும், ஆற்றுநீர் வந்து சேர்தலால் மிகாமலும் கரையில் மோதி முழங்கும் கடல் போல பலரும் வந்து கொள்ளுதலால் குறையாமலும், வணிகர் பலரும் கொண்டு வருதலால் எப்பொழுதும் பண்டங்களாலும் ஆரவாரத்தாலும் நிறைந்திருந்தது. மாடங்களாலே விளக்க முற்ற மிக்க புகழை உடையதாயிருந்தது, நான்மாடக் கூடலாகிய மதுரை கண் உள்ளது. நாளங்காடி இங்கு உண்டாகும் ஆரவாரம் திருவிழாவைக் காண அவ்விழாவிற்கு கூடிவந்த நாட்டு மக்களின் ஆரவாரம் செய்தல் போல் இருந்தது.

## 1.11. அல் அங்காடி

மதுரையில் உள்ள அல்அங்காடி பல்வேறு பண்டங்களை விற்பனை செய்யும் தெரு வாகும். அங்கு வணிகர் கூட்டம் மற்றும் மக்கள் கூட்டம் நிரம்பி வழிவது போல காட்சியளித்து உள்ளது. இக்கருத்தினை,

**வால் இதை எடுத்த வளிதரு வங்கம்**
**பல்வேறு பண்டம் இழிதரும் பட்டினத்து**
**ஒல்லென இமிழ் இசைமான கல்லென**
**நனந்தலை வினைஞர் கலம் கொண்டு மறுக**
**பெருங்கடல் குட்டத்துப் புலவுத்திரை ஓதம்**
**இருங்கழி மருவிப்பாய பெரிது எழுந்து ,**
**உருகெழு பானாள் வருவன பெயர்தலின் ,**
**பல்வேறு புள்ளின் இசை எழுந்தற்றே ,**
**அல்அங்காடி அழிதரு கம்பலை"[22]**

என்கிறது மதுரைக்காஞ்சி. மரக்கலங்கள் கடலில் நல்லவெண்ணிறப் பாய்களை விரித்து வருதலால் கடற்கரைக்கு காற்று கொண்டு வந்து சேர்க்கின்றது. அக்கலங்களிலிருந்து பல்வேறுபட்ட சரக்குகள் இறங்குகின்ற போது அப்பட்டினத்தில் ஓசை இருந்தது.

அந்த ஓசையை போல அயல்நாட்டு வணிகர், ஈண்டுச் செய்த அணிகளை விலைக்கு வாங்கிக் கொண்டு போவதற்காகப் பல மொழிகளில் பேசிய வண்ணம் இயங்குகின்றனர். அவ்வொலி பெரிய கடல் சூழ்ந்த இடத்தினின்றும், புலால் நாறும் அலைகளை உடைய கடல் நீர்கழிகளில் பெருகிப் பாய்கின்ற போது அச்சம் பொருத்திய அந்த நடுஇரவில் பல்வேறு இனத்துப் பறவைகளின் ஓசை எழுந்தாற் போன்று இருந்தது. இது சங்க காலத்தில் மதுரையில் உள்ள அல்அங்காடி கடைத்தெருவில் மிகுதியாகத் தோன்றிய ஆரவாரம் ஆகும்.

**2.0. சிறுவணிகர்கள்**

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் திருவிழாக்காலங்களிலும் சிறுவணிகர்கள் ஒன்றாகச் சேர்ந்து வாணிகம் செய்வதோடு பலரும் பல்வேறு நிகழ்ச்சிக்கு ஒன்று சேர்க்கின்றனர். இதனை,

**தீம்புழல் வல்சிக் கழல்கால் மழவர்**

**பூந்தலை முழுவின் நோன்தலை கடுப்ப**

**பிடகைப் பெய்த கமழ் நறும் பூவினர்**

**பலவகை விரித்த எதிர் பூங்கோதையர்**

**பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தர்**

**தகை செய்தீம் சேற்று இன் நீர்ப்பசுங்காய்**

நீடுகொடி இலையினர் கோடு

இருதலை வந்த பகை முனை கடுப்ப

இன்வயிர் அஞ்சி இன்னா வெய்து உயிர்த்து"

ஏங்குவனர் இருந்து அவை நீங்கிய பின்றை

பல்வேறு பண்ணியம் தழீஇத் திரிவிலைஞர்

மலைபுரை மாடத்துக் கொழுநிழல் இருத்தர"[23]

என்கிறது மதுரைக்காஞ்சி. இனிய பண்ணியகாராமாகிய உணவினையும் ஒப்பனை செய்யப்பட்ட வீரமத்தளத்தின் கண்போன்ற வட்ட வடிவமான பூந்தட்டிலே, மணம் கமழும் மலர்களையும் வைத்தவர்கள். பல வகையாக விரித்து வைத்த ஒன்றற்கொன்று மாறுபட்ட பூமாலையுடையவர்கள். இடிக்க வல்லார் திரண்டு இடித்த பூந்தாதுக்கள் போல், புரக்கும் சுண்ணத்தை உடையர்கள் உடலுக்கு அழகைக் கொடுக்கும் கருங்காலி சீவிக் காய்ச்சின. இனிய நீரினையுடைய பசிய களிப்பாக்குடன் வளர்ந்த கொடிகள், ஈன்ற வெற்றிலை விற்பரும், சங்கு சுடுதலால் உண்டான சுண்ணாம்பை விற்பரும், பல்வேறுபட்ட பண்டங்களை வைத்துக் கொண்டு அவற்றை திரிந்து விற்பாரும் இருந்தனர்.

## 2.1. அறவிலை வணிகன்

இப்பிறப்பின்கண் செய்ததொன்று மறுபிறப்பிற்கு உதவும் என்று கருதிப் பொருளை விலையாக கொடுத்து அதற்கு ஈடாக அறம் கொள்ளும் வணிகன் ஒருவர் இருந்தான் இதனை,

"இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்" எனும்

அற விலை வணிகன் ஆஅய் அல்லன்[24]

என்ற புறநானூறு அறநிலை வணிகனைப் பற்றி தெளிவாகப் புலப்படுத்துகிறது.

## 2.2. அறுவை வாணிகர்

சங்ககாலத்திலே பருத்தி பயிர்செய்வதும் நூற் நூற்பதும் துணி செய்வதும் ஆடை விற்பதுமாகிய தொழில் சிறப்பாக நடந்தது. துணிகளை விற்ற வாணிகருக்கு அறுவைவாணிகர் என்று பெயர் கூறப்பட்டது. மதுரையில் இருந்த இளவேட்டனார் என்னும் புலவர் அறுவை வாணிகம் செய்தார். ஆகையால் அவர் மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனர் என்று பெயர் பெற்றார்[19]. அவர் இயற்றிய பன்னிரண்டு செய்யுட்கள் சங்க இலக்கியங்களில் தொகுக்கப்பட்டுள்ளன.உள்நாட்டு வணிக முறையினையும் சில குறிப்புகள் உணர்த்துகின்றன.

''தொண்டிரை அவிர் விறல் கடுப்ப

குறியவும் நெடியவும் மடிதருவிரித்து

சிறியரும் பெரியரும் கம்மியர் குழிஇ[25]

நால்வேறு தெருவிலுங் காலுற நிற்றரக்காணப்படும் தன்மையை மதுரைக்காஞ்சி சுட்டும் தன்மையில் தெருவில் ஆடைகொணர்ந்து விற்கும் நிலையினை விளக்குகிறது.

## 2.3. காவிரிபூம்பட்டினம் நறுமணப் பொருள் விற்கும் இடம்

சோழநாட்டில் தான், விற்பவரது நறுமணப் பண்டங்களின் மணத்தினைப் பெற்ற வண்டுகள் மொய்க்கும் என்பதை

**"பகா அர் பண்டம் நாறும் வண்டுஅடர் ஐம்பால்''[26]**

என்ற இப்பாடல் அடிகள் மேலே சொல்லப் பட்ட செய்திகளை விளக்குகின்றன.

## 2.4. முத்து விற்போர்

நெய்தல் நிலத்தில் வாழும் பரதவர்கள் மீன்பிடி தொழிலையும் முத்தினை எடுத்து வந்து விற்பனை செய்திருக்கின்றனர்.

**"வளைபடு முத்தம் பரதவர் பகரும்**

**கடல் கெழு கொண்கன் காதன் மடமகள்''[27]**

என ஐங்குறுநூறு வளைப்பத்து பெறுதற்குரிய முத்தைப் பரதவர் விற்கும் கடல் கெழு கொண்க என்றது.

## 3.0. உப்பு வணிகர்

பண்டையக் காலத்தில் "பெருமணல் நிலம் எனத் தொல்காப்பியம் கூறும் "நெய்தல்" எனப்பட்ட தமிழ் நாட்டுக் கரையோரப் பிரதேசங்களில் வாழ்ந்து வந்த மக்கள் தங்கள் நிலத்தில் எந்தப் பொருட்களையும் விளைவித்துப் உற்பத்தியில் ஈடுபடவில்லை. அவர்கள் வாழ்ந்து வந்த நிலப்பகுதி தானியங்களை

விளைவிப்பதற்கு தகுதியற்று இருந்தது. ஏனெனில் அது மணற்பாங்கான பூமியாகவும் உவர்சத்து மிக்கதாகவும் இருந்தது. மேலும் இவர்கள் கடற்கரைப் பிரதேசங்களில் வாழ்ந்ததால் கடல் அலைகளுக்குள் போராடி மீன்களைப் பிடித்து வந்து அவற்றை உணவாக உட்கொண்டு வந்தனர். இவர்களது குடில்கள் யாவும் உணவு சேகரிக்கும் இடமாகவும் திகழ்ந்தது. இவர்களை சங்க இலக்கியங்கள் பரதவர் என்று குறிப்பிடுகின்றன.

பரதவர்கள் கடல்மேற் செல்வதற்கு திமில், அம்பி எனப்படும். கட்டுமரங்களையும் படகுகளையும் பயன்படுத்தினர். மீன்களை பிடிப்பதற்கும் கொல்வதற்கும் உளி, வலை ஆகிய சாதனங்களையும் பயன்படுத்தினர். மேற்கண்ட மீன்பிடிக் கருவிகள் அனைத்தும் அந்தந்த பரதவர் குடில்களுக்கெல்லாம் பொதுவுடைமையாக இருந்தன. இவர்கள் கூட்டமாக இக்கருவிகளைப் பயன்படுத்தி பிடித்து வந்த மீன்களை பகிர்ந்து கொண்டனர்.

உப்பு வணிகர் பலர் ஒன்று கூடியே செல்வர். எருதுகள் பூட்டப் பெற்ற தங்கள் வண்டிகளை வரிசையாக நிறுத்தி வைப்பர். நீரற்ற காட்டுவழிகளில் எருதுகளை உரப்பி ஓட்டும் ஒலி மலையில் எதிரொலிக்கும். வழியில் கல்லடுப்பு வைத்துச் சமைத்து உண்டு செல்வர். தீக்கடைக் கோலால் மூட்டிய அடுப்பில் யானையின் இறைச்சியை உலையிலிட்டு ஆக்குவர்.

தங்கள் குடும்பத்துடன் நீண்ட தொலைவு சென்று வணிகம் செய்வர். வண்டியின் அச்சு முறியாமல் இருக்க அதன் கீழ் சேமவச்சு கட்டியிருப்பர் . வண்டியின் முக்கணையின் மீதிருந்து உமண மகளிர் எருத்தைச் செலுத்துவர். ஆண்கள் எருதுகள் செல்லும் பொழுது அச்சு முறியாமலும் பாதுகாத்து வருவர். உள்நாட்டில் சென்று வர வண்டிகளேயன்றி, கழுதை, கோவேறு கழுதை போன்றவையும் பொருள்களை எடுத்துச்செல்லப் பயன்பட்டன.

தாழை மரங்கள் வேலியாக நிற்கும் இளமரக்காவின் கண் வந்து செறியும். துவலையின் ஓசையும் வரிசை வரிசையான திமில்களில் இருந்து மீன் வேட்டையாடுவோர் கரை வந்து சேரும்போது உண்டாகும் ஆரவாரமும் பெரிய உப்பங்கழிகளிடத்தே உப்புப் பாத்தியில் வெள்ளிய உப்பு விற்கும் அளவர் ஒலியுடன் சேர்ந்து முழக்கம் அடங்காத புது வருவாயினை உடைய முது வெள்ளிலை என்னும் ஊரின்கண்.

## 3.1. உப்பை விலை கூறி விற்றல்

உப்பை ஊர்கள் தோறும் கொண்டுச் சென்று விற்று விட்டு வந்தனர். என்பதை,

**"சிறு துளைக் கொடு நகம் நெறிபட நிரைத்த**

**பெருங் கயிற்று ஒழுகை மருங்கில் காப்பச்''[28]**

என்று இப்பாடல் விளக்குகிறது.

## 3.2. எருதுகளில் உப்பைக் கொண்டு சென்று விற்றல்

கடற்கரைக்கு அப்பால் உள்ள உள்நாடுகளும் மலைநாடுகளுக்கும் எருதுகள் உப்பு வண்டியை இழுத்துக் கொண்டு போயின.என்றதை,

**"கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்**

**ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்**

**உரனுடை நோன்தாள் பகடு"[29]**

என புறநானூறு கடற்கரைக் கழிமுகத்திலுள்ள நீரால் விளைந்த உப்பினைச் சுமந்து மலைநாடு நோக்கிச் செல்லும். ஆரக்கால்கள் அமைந்த வண்டி அதனைப் பள்ளத்தில் ஆழ்ந்துவிடாதபடி வலிமையுடையதும், சுமை தாங்குவதுமான காளை இழுத்துச் செல்லும் என்று உணர்த்துகிறது.

**“உவர்விளை உப்பின் குன்று போல் குப்பை**

**மலை உய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்**

**கணங்கொள் உமணர்”[30]**

என நற்றிணை உவர் நிலத்திலே விளையும் குன்று போல் குவிந்த உப்பின் குவியலை உப்பு வணிகர் மலை நாட்டு ஊர்களில் கொண்டு போய் விலை கூறி விற்பர். ஓர் இடத்திலும் நிலைத்தலில்லாத வாழ்க்கையைக் கொண்டது. உப்பு வணிகர் கூட்டம் தம் வண்டியின் அச்சு இயல்பு கெட்டு அவிழ்ந்த போது அதனை வீசி யெறிந்துவிட்டு செல்வர் என்று கூறுகிறது.

**“எருதே இளைய; நுகம் உணராவே;**

**சகடம் பண்டம் பெரிது பெய்தன்றே;**

**அவல் இழியினும், மிசை ஏறினும்;**

**அவணது அறியு நர் யார்? எனஉமணர்**

**கீழ்மரத்து யாத்த சேம அச்சு அன்ன”[31]**

என புறநானூறு இளைய எருதுகள் வண்டியில் நுகம் பூட்டி இழுத்தலை அறியா; அவ்வண்டியில் உப்பாகிய பண்டம் அதிகமாக ஏற்றப்பட்டது. அவ்வண்டி பள்ளத்தே சென்றாலும் மேட்டிலே ஏறினாலும் அவ்விடத்து வரும் இடையூற்றை நினைத்து உப்பு வணிகர் அச்சு மரத்தின் கண்ணே காவலாகிய சேம அச்சைக் சேர்த்து கட்டியிருப்பர்.

**சில்பத உணவின் கொள்ளைச் சுற்றிப்**

**பல் எருத்து உமணர் பதி போகு நெடுநெறி**

**எல்லடைக் கழியுநர்க்கு ஏமம் ஆக"[32]**

என பெரும்பாணாற்றுப்படை சிறிய துணைகளையுடைய உருண்டை நுகத்தில் எருதுகளை பெரிய கயிற்றால் ஒருவழிப்படுமாறு வரிசையாகக் கட்டின. சகடங்களின் பக்கங்களில் அச்சு முறியாமல் நின்று பாதுகாத்து வரவும். சோற்றிற்கு இடும் உப்பாகிய உணவினை விரையை ஊர்கள் தோறும் எதிர் வருவார்க்குக் கூறும் பகற்பொழுதிலே போவார்க்கு காவலாய் அமையும் என்று இப்பாடல் விளக்குகிறது.

**"வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**

**நெல்லொடு வந்த வல்வாய் பஃறி**

**பணை நிலைப் புரவியின் அணை முதல் பிணிக்கும்**

**கழிசூழ் படப்பை கலியாணர்ப்**

**பொழில் புறவின் பூந்தண்டலை''[33]**

எனப் பட்டினபாலை வெண்மை நிற உப்பின் விலையைக் கூறிவிற்று அதற்கு ஈடாகக் கொண்டு வந்த நெல்லை ஏற்றி வந்ந வலிமையான படகுகளைக் குதிரைகளைக் வரிசையான வைப்பது போல ஆங்காங்குள்ள கட்டுத்தறிகளில் கட்டியுள்ளன்.

## 3.3. உப்பை படகுகளில் ஏற்றிச் செல்லுதல்

உப்பு வணிகர் ஆறுகளிலும் கால்வாயும் உள்ள ஊர்களில் படகுகளில் உப்பை ஏற்றிக் கொண்டு போய் நெல்லிற்கு மாற்றி வந்தனர். அப்படி வாங்கிய நெல்லை படகுகளில் ஏற்றி வந்ததை இப்பாடல் உணர்த்துகின்றது.

**நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்**

**சேர் விலைமாறு கூறலின்''[34]**

என அகநானூறு கூறுகிறது.

## 3.4 கழுதைகளில் உப்பை ஏற்றிச் செல்லுதல்

சங்க கால மக்கள் கழுதைகளில் உப்பை ஏற்றிக் கொண்டு சென்று விற்று வந்தனர். மாட்டு வண்டிகள் போகமுடியாத பாறைகளும், மலைகளும், மேடுகளும், உள்ள ஊர்களுக்கு உப்பு மூட்டைகளை கழுதை மேல் ஏற்றிக் கொண்டுப் போய் விற்றார்கள். அவர்கள் கூட்டமாகச் சேர்ந்து நல்ல நிமித்தம் பார்த்து வீரர்களையும் அழைத்துக் கொண்டு மலை நாடுகளுக்குப் போனார்கள் என்று கூறுகிறது. இதனையே,

**"பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய**

**திருந்துவான் வயவர்''[36]**

என்கிறது அகநானூறு. உப்பு மூட்டைகள் மட்டுமல்லாமல் மிளகு முதலான வேறு பண்டங்களைச் சுமந்து கொண்டு போகக் கழுதைகளையும் அக்காலத்தில் பயன்படுத்தினார்கள்இக்கருத்தினைசங்க கால சமுதாய சிந்தனைகள் என்ற நூலின் ஆசிரியர் குறிப்பிடுகிறார்[35].

**"இல்போல் நீழல் செல்வெயில் ஒழிமார்**

**நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றைப்**

**புறநிறைப் பண்டத்துப் பொறையசாக் களைந்து[37]**

என அகநானூறு உப்பு உற்பத்தியும், உப்பு வாணிகமும், செம்மையாக நடந்தன என்று குறிப்பிடுகிறது.

## 3.5. உப்பிற்கு மாறாக நெல்லைப் பெறுதல்

நெய்தல் நிலமக்கள் உப்பை விளைவித்து அதனை கொண்டு சென்று விலைக்கு கொடுத்து விட்டு அதற்கு ஈடாக நெல்லைப் பெற்றுவந்தனர். என்பதை,

**உப்பை மாறி வெண்ணெய் தரீஇய**

**உப்பு விளை கழனிக் சென்றனள், யாவும்**

**பனி இரும் பரப்பின் சோர்ப்பற்கு**

**இனிவரின் எளியன்''[38]**

என குறுந்தொகை தெளிவாக்குகிறது.

**“கதழ்கோல் உமணர் காதலர் மடமகள்**

**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**

**“நெல்லின் நேரே வெண்கல உப்பெனச்**

**சேரிவிலை மாறு கூறலின்”[39]**

என்றும்,

**“நெல்லும் உப்பும் நேரே ஊரீர்**

**கொள்ளிரோவெனச் சேரிதொறும் நுவலும்”[40]**

என அகநானூறு உப்பிற்கு நெல்லை மாற்றிக் கொண்டுச் சென்றுள்ளனர் என்பதை விளக்குகிறது. மேலும் இதே கருத்தினை,

**“உமணர் தந்த நொடைநெல்”[41]**

நற்றிணைப்பாடல் அடிகள் தெளிவாக எடுத்துரைக்கிறது.

**“உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு”[42]**

என்று அகநானூற்றுப்பாடல் உப்பு விற்று வாங்கி வந்த நெல்லாலே ஆக்கப்பட்ட வெண்ணெல் சோறு என்று புலவர் பாடியுள்ளனார். நெய்தல் நிலமக்கள் பண்டமாற்று முறையில் பரிமாறி கொண்ட செய்தியை சங்க நூல்கள் தெளிவாக புலப்படுத்துகிறது.

## 4.0 கள்

கள்ளைக் காய்ச்சி விற்கும் தொழில் வருவாய்க்குரிய தொழிலாக இருந்த நிலையை அறிய முடிகிறது. கள் விற்கும் கடை இருந்தது. கடைக்குச் சென்று கள்ளுண்டனர். களிப்பேறிய பின்னரும் அதிகமாகக் கள்ளை உண்டனர். கள்ளைக் காய்ச்சுதலையும் விற்றலையும் தொழிலாகக் கொண்டவர்கள் இத்தொழிலின் மூலம் தங்கள் உடைமையைப் பெருக்கிக் கொண்டிருப்பர். "சங்ககாலத் தமிழகத்திலே கள்ளும், மதுவும் உற்பத்தி செய்யப்பட்டன. ஆனால் அவை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகவில்லை, உள் நாட்டிலே செலவாயின. கள், தேறல், தோப்பி, மகிழ், மட்டு, நறவு, பிழி முதலான பெயர்களாகக் கூறப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்தின் வழிப் பல்வேறு விதமான தொழில்களைக் காண்கிறோம். இவையாகவும் மனித குலத்தைத் தனியுடைமைக்குத் தள்ளுவதில் தான் வெற்றி பெற்றன. இது பரிணாம வளர்ச்சியே.

**பல் வேறு பண்ணியக் கடை மெழுக்கு உறுப்ப,**

**கள் ளோர் களி நொடை நுவல**[43]

பண்டம் விற்போர் பலவாய் வேறுபட்ட பண்டங்களையுடைய கடைகளில் விற்பனைச் செய்தனர். கள் விற்போர் களிப்பினை உடைய கள்ளிற்கு விலை கூறி விற்றனர் என்று உரைக்கின்றன.

## 4.1 பசுவுக்கு மாறாக கள்

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் போர் தொழிலில் வெற்றி பெற்ற பின்னர் வெளி நாட்டில் பசு மற்றும் பொருட்களை கொண்டு வந்து தாங்கள் குடித்த கள்ளுக்கு ஈடாக கொடுத்துச் சென்றனர். என்பதை,

**"செல் நாய் அன்ன கருவில் சுற்றமொரு**

**கேளா மன்னர் கடிபுலம் புக்கு**

**நாள் ஆ தந்து நறவு நொடை தொலைச்சி**

**இல் அடு கள்ளின் தோப்பி பருகி**

**மல்லல் மன்றத்து மதவிடை கெண்டி"[44]**

என திருமுருகாற்றுப்படை உள்நாட்டில் நடைப்பெற்ற பண்டமாற்று முறைகளை தெளிவாக எடுத்துரைக்கிறது.

## 5.0. தயிரைக் கொடுத்து நெல்லை பெறுதல்

சங்க காலத்து மக்கள் தங்கள் வீட்டிற்கு தேவையான பொருட்களை மாற்றிக் கொண்டு வந்துள்ளனர். அப்படி மாற்றியப் பொருட்களில் தயிரும் ஒன்று. சங்க மகளிர் தயிரைக் கொண்டுச் சென்று மற்ற நிலங்களில் விலைக்கு கொடுத்து அதற்கு மாறாக நெல்லைப் பெற்றுவந்தனர் என்பதை,

**“கானுறை வாழ்க்கை கதநாய் வேட்டுவன்**

**மான்தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்**

**தயிர் கொடு வந்த தசுப்பும் நிறைய**

**ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்**

**குளக்கீழ் விளைந்த களக்கோள் வெண்ணெல்**

**முகந்தனர் கொடுப்ப உவந்தனர் பெயரும்**

**தென்னம் பொருப்பன் நன்னொடு [45]**

எனப் புறநானூறு வெளிக் கொணர்கின்றது.

## 6.0 மீன்களை விற்றல்

உழவர்கள் கழனியில் இருந்து பிடித்து வந்த மீன்களை விற்று செல்கின்றனர் என்ற செய்தியை,

**“கம்புள் சேவல் இன்துயில் இரிய**

**வள்ளை நீக்கி வய மீன் முகந்து**

**கொள்ளை சாற்றிய கொடுமுடி முகந்து”[46]**

என மதுரைக்காஞ்சி கொடுமுடி வலைஞர் கோழியின் இனிய உறக்கம் கெடும்படி வள்ளைக் கொடிகளை அகற்றி பெரிய மீன்களை முகந்து கொண்டு வந்து விலை கூறி விற்பவர் என்கிறது.

## 6.1 மீனுக்கு மாறாக கள் பெறுதல்

நெய்தல் நில மக்கள் தாங்கள் கொண்டு வரும் மீனை கள்ளிற்கு மாறாக கொடுத்து தன்னுடைய கடனை அடைத்து விடுவர் என்றதை,

**"மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்**

**இனிது பெற பெருமீன் எளிதினில் மாறி**

**அலவன் ஓடிய புலவு மணல் மன்றில்"[47]**

என நற்றிணை மீனிற்கு பதிலாக கள்ளை பண்டமாற்று முறையில் பயன்படுத்தினார்கள் என்பது தெளிவாகின்றது.

## 6.2 மீன்துண்டு கொடுத்து கள்ளைப் பெறுதல்

மீன்களை பிடித்துவந்து கருவாடாக காய வைத்து அதனை துண்டாகச் செய்து விற்பனைச் செய்துள்ளனர்.

**"நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து**

**நாள்துறைப் பட்ட மோட்டு இரு வராஅல்**

**துடிக்கண் கொழுங்குறை நொடுத்து, உண்டு ஆடி, [48]**

என அகநானூறு பாணர்கள் வைகறை வேட்டையில் துறையிடத்து அகப்பட்ட பெரிய வயிற்றினையுடைய வரால் மீனின் கொழுவிய துண்டினை விற்று, அதற்கு பதிலாக கள்ளுண்டு களித்து ஆடினர் என்று பார்க்கும் பொழுது பண்டமாற்று முறை நடைப் பெற்றுள்ளது தெளிவாகின்றது.

## 6.3. மீனைக் கொடுத்து நெற்பயிரைப் பெறுதல்

பாணர் உள்நாட்டு நீர் நிலைகளில் வலை வீசியும் தூண்டிலில் பிடித்த மீன்களையும் பாண்மகளிர் கொண்டுச் சென்று பயிறுக்கும் தானியத்திற்காகவும் மாற்றினார்கள் என்பதை,

**"முள் எயிற்று பாண்மகள் இன்கெடிலு சொரிந்த**

**அகன் பெரு வட்டி நிறைய மனையோள்**

**அரிகால் பெரும்பயிறு நிறைக்கும்"[49]**

என்ற ஐங்குநூறு மருதம் புலவிபத்து 47-ல் புலவர் ஓரம் போகியார் கூறியுள்ளார்.

## 6.4. மீனிற்கு மாறாக நெல்லைப் பெறுதல்

மீனைப்பிடித்து கொண்டுச் சென்று அதனைக் கொடுத்து விட்டு அதற்கு மாறாக நெல்லைப் பெற்றுக் கொண்டு சென்றனர் என்பதை,

**"வலைவல் பாண்மகன் வாலேயிற்று மடமகள்**

**வரா அல் சொரிந்த வட்டியுள் மனையோள்**

**யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர**

**யாண்டுச்செய் குறியோ"[50]**

என்று ஐங்குநூறு மருதம் புலவிப் பத்து மீனைக்கு கொடுத்து நெல்லை பெறுதல் என்று புலவர் பாடியுள்ளார். மேலும் இதே கருத்தினை அடுத்த செய்யுளான,

**“ அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்**

**சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்”[51]**

என்ற ஐங்குறு நூறு மருதம் புலவிப்பத்திலும் கூறுகிறார்.

**“மீன் நொடுத்து நெல் குவைஇ,**

**மிசை அம்பியின் மனை மறுக்குந்து”[52]**

என புறநானூறு வாயிலாக பாணர்கள் அகநாடுகளுக்குக் கழிகள் மூலமாக மீனைக் கொண்டு சென்று விற்று நெல்லை பெற்றுக் கொண்டு வந்தனர் என்கிறது.

## 7.0. தேன் கிழங்கு விற்றல்

சங்க கால மக்கள் தேன்கிழங்கை விற்று அதற்கு மாறாக மீன், நெய், மது ஆகியவை வாங்கிச் சென்றுள்ளனர்.

**“தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**

**மீன் நெய்யோடு நறவு மறுகவும்”[53]**

எனப் பொருநர்ஆற்றுப்படைப்பாடல் தெளிவாக எடுத்தியம்பியுள்ளது.

## 7.1. இறைச்சியை விற்றல்

காட்டில் வேட்டையாடிய இறைச்சியை கொண்டு வந்து விற்று அதற்கு ஏற்றுப் பொருளைப் பெற்றுள்ளனர்.

**வளை தலை மாத்த தாழ் கரும் பாசவர்**

**எஃகு ஆடு ஊனம் கடுப்ப, மெய் சிதைந்து**

**சாந்து எழில் மறைத்த சான்றோர் பெருமகன்"[54]**

எனப் பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்தில் ஏழாம் செய்யுளில் இறைச்சியைக் கொண்டுச் சென்று விற்றுள்ளனர் என்பது தெரிய வருகின்றது.

## 7.2 மீன் இறைச்சி

வேடர் தேனையும் கிழங்கையும் தன்னுடைய நிலப்பகுதியில் இருந்து கொண்டு வந்து அதற்கு மாறாக மீன் இறைச்சியைப் பெற்றுக் கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பதை முடத்தாமக் கண்ணியார்,

**மீனெய்யொடு நறவு மறுகவும்"[55]**

எனப் பொருநர்ஆற்றுப்படையில் பொருளை மாற்றிக் கொண்டு வாழ்ந்தது தெளிவாகின்றது.

## 7.3 கரும்பு அவல் மாறாக இறைச்சியை பெறுதல்

பண்டமாற்று முறையில் கரும்பையும் அவலையும் விற்ற குறிஞ்சி நில மக்கள் அதற்கு ஈடாக மான் இறைச்சியையும் கள்ளையும் வாங்கிச் சென்றனர் என்ற செய்தியை,

**தீங் கரும்பொடு அவல் வகுத்தோர்**

**மான் குறையொடு மது மறுகவும்"[56]**

என்ற பொருநர் ஆற்றுப்படை விளக்குகின்றது.

## 7.4 மான் இறைச்சியை கொடுத்து நெல்லைப் பெறுதல்

வேடன் தான் வேட்டையாடிக் கொண்டு வந்த மான் இறைச்சியை உழவனிடத்தில் கொடுத்து அதற்கு ஈடாக நெல்லை மாற்றிக் கொண்டுச் சென்ற செய்தியை,

**"கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்**
**மான்தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்"[57]**

என புறநானூற்றில் கோவிலூர் கிழார் குறிப்பிடுகின்றார்.

**"அரிகிளர் பணைத்தோள் வயிறணி திதலை**

**அரிய லாட்டியர் அல்கு மனை வரைப்பின்**

**மகிழ் நொடை பெறாஅர் ஆகி நினைகவுள்**

**கான யானை வெண்கோடு சுட்டி**

**மன்றாடு புதல்வன் புன்றலை நீவும்**

**அருமுனை பாக்கம்"[58]**

என அகநானூறு பருத்த தோளினையும் தேமல் படர்ந்த வயிற்றினையும் உடைய கள் விற்கும் பெண்கள் தங்கியிருக்கின்ற வீட்டின் கண் கள்ளிற்கு விலையாகக் கொடுப்பதற்கு கைப்பொருள் வேறு இல்லையாக தம் மனைகுடத்து உள்ள காட்டு யானையின் வெண்ணிறக் கொம்புகளைச் சுட்டிக் காட்டி அவற்றை எடுத்து வரும்படி அந்த வணிகர்களிடம் கூறி அனுப்புவாள் என்கிறது.

## 7.5 யானை தந்தத்தை விற்றல்

குறிஞ்சி நிலத்தில் வளைவு கிடைகவில்லையெனின் யானைக் கோட்டை விற்று உண்ணுவர் குறுந்தொகை கூறுகிறது.

## 7.6 யானையின் தந்தத்திற்கு மாறாக கள்ளைப் பெறுதல்

காட்டில் வேடவர்கள் வேட்டையாடிக் கொன்ற யானையின் தந்தங்களை மதுபானக் கடையில் கொண்டு போய் கொடுத்துப் அதற்கு பதிலாக மதுபானம் அருந்தினதை மாமூலனார் கூறுகிறார்.

**வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ**

**அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்**

**அண்ணல் யானை வெண்கொடு கொண்டு**

**நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயரும்** [59]

என்ற அகநானூற்றுப்பாடலடிகள் பண்டமாற்று முறையில் மக்கள் பொருட்களை மாற்றிக் கொண்டு வாழ்ந்துள்ளனர்.

## 7.7 தானியத்திற்கு மாறாக யானைத் தந்தத்தைக் கொடுத்தல்

மலைமேல் வாழ்ந்த சிறுகுடி மக்கள் தங்களுடைய சுற்றத்தார் அனைவரும் பசித்திருந்தமையால் தங்களிடம் உள்ள யானைத் தந்தத்தைக் கொடுத்து விட்டு அதற்கு பதிலாக தானியங்களை பெற்றுக் கொண்டு வாழ்ந்தனர் என்பதை கபிலர்,

**"காந்தளஞ் சிலம்பில் சிறுகுடி பசித்தெனக்**

**கடுங்கண் வேழத்துக் கோடு கொடுத்துண்ணு**

**வல்வில் ஓரி கொல்லிக் குடவரை"** [60]

எனக் குறுந்தொகைப்பாடல் வாயிலாக எடுத்துரைத்துள்ளார்.

## 8.0. கள்ளுக்கு மாற்றாக முத்து

கொற்கைத் துறைமுகத்தில் மீன் பிடிக்கவும் போது மீனுடன் முத்துச் சிப்பியும் கிடைத்தனவாம். மீன் பிடிப்போர் அச்சிப்பிகளைக் கொண்டுப் போய் கள்ளுக் கடையில் கொடுத்து அதற்கு மாற்றாக கள்ளை வாங்கி உண்டனர் என்ற செய்தியை

**"பன்மீன் கொள்பவர் முகந்த சிப்பி**

**நாரரி நறவின் மகிழ் நொடைக் கூட்டும்**

**பேரிசைக் கொற்கை"[61]**

என அகநானூற்று அடிகள் உணர்த்துகின்றன. இங்ஙனம் பண்டமாற்று முறைகளையும் மக்கள் பின்பற்றியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

## 8.1 கள்ளிற்கு மாறாக நெல்லைப் பெறுதல்

சங்ககால பெண்கள் கள்ளைச் சமைத்து விலைக்கு விற்று அதற்கு மாறாக நெல்லைப் பெறுகின்றனர் என்பதை,

**"திணைக்கள் உண்ட தெளிகோல் மறவர்"[62]**

என அகநானூறு திணை கொண்டு வந்து கொடுத்து சமைத்த கள்ளினை உண்டு வேட்டைக்குச் சென்றிருக்கின்றனர்.

## 8.2 மிளகு

உள்நாட்டு வணிக முறைகளில் இருந்த மிளகை வெளி நாடுகளுக்கும் கடல் வழியாக ஏற்றுமதி செய்துள்ளனர். மருத்துவ குணம் கொண்ட மளிகை அயல்நாடுகளில் அதிகமாக வாங்கி பயன்படுத்தினர் என்பதை பின்வரும் குறிப்புகள் வாயிலாக அறிந்துக் கொள்ள முடியும். உதாரணமாக தமிழரும் தாவரமும் என்ற நூலில் கு.வி.கிருஷ்ணமூர்த்தி "கிரேக்க மருத்துவரான டீயாஸ் கோருடீஸ் என்பவர் மிளகு இந்தியாவில் இருந்து கொண்டு வரப்பட்டது என்று கூறியுள்ளார். இச்செய்தியை அறியும் பொழுது தமிழரின் வணிகம் சங்க இலக்கியப் பாடல்களில் மிளகைப் பற்றி 20இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. மிளகை தமிழகத்தில் இருந்து வெளிநாடுகளுக்கு கொண்டு யவனர்களைச் சாறும்.

**நீரின் வந்த நிமிர் பரிப்புரவியும்**

**காலின் வந்த கருங்கறி மூடையும்**[63]

நச்சினார்கினியர் தன்னுடைய வரையில் குதிரைகள் மிளகு மூட்டைகள் கடல் வழியாக கொண்டுவரப்பட்டன என்று குறிப்பிட்டுள்ளார்.

"மிளகு ஒரு முக்கியமான தாவரப் பொருள் என்று கிரேக்கர்களுக்கு கி.பி முதலாம் நூற்றாண்டிலேயே தெரிய வந்தது என்ற கிரேக்க மருந்துவர் இந்த தகவலை தன்னுடைய மருத்துவ நூலில் குறிப்பிட்டுள்ளார். மிளகு இந்தியாவில் இருந்து பெறப்பட்ட ஒரு பொருளாகும் இதில் பல்வேறு மருத்துவ குணங்களைக் கொண்டது என்று குறிப்பிட்டுள்ளார். மிளகு தென்இந்தியாவில் மேற்கு கடற்கரையில் இருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட ஒரு பொருள் என்ற கிரேக்க எகிப்திய வணிகர் கி.பி.535ல் குறிப்பிட்டுள்ளார்.

மிளகு, வெற்றிலை ஆகிய இரு சரக்குகளும் நாடி இத்துறைமுகத்துக்கு கப்பல்கள் மிகுதியாக வருகின்றன. பேரளவான மணப்பொருட்களை வணிகர் இங்கே கொண்டு வருகிறார்கள்.

கி.பி.226ல் நிறுவப்பெற்றதாக நம்பப்படும் பியுட்டிங் செரியன் பட்டயங்களின்படி அக்காலத்தில் கூட உரோமர்கள் தங்கள் வாணிக நலங்களை காப்பதற்காக முசிறியில் 2 படைபிரிவுகளை (800 முதல் 1200) வீரர் வரை வைத்திருந்தனர்[64] என்றும் அதே காலத்தில்

**"யவனர் தந்த வினை மாண் நன்கலம்**

**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"[65]**

என அகநானூறு யவனர்கள் மிளகை ஏற்றுமதி செய்ததை உணர்த்தும். இச்செய்தியை கிரேக்க எகிப்திய வணிகர் கி.பி.535இல் தமிழரும் தாவரமும் என்ற நூலில் குறிப்பிடுகின்றார்.

**"கறிக்கொடிக் கருந்துணர் சாய"[66]**

என திருமுருகாற்றுப்படை மலைப்பகுதியில் மிளகுக் கொடியின் கரியக் கொத்து காய்கள் சாய்ந்து நிற்கின்றன. இப்படி மிளகை ஊடு பயிராக செய்து வாணிப நோக்கில் மக்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**- - - - - - - - - - - - - - அவ்வழி**

**பழு மிளகு உக்கபாறை நெடுஞ்சுனை**

**முழு முதல் கொக்கின் தீம் கனி உதிர்ந்தென**

**புள் எறி பிரசமொடு ஈண்டி**

**காலின் வந்த கருங்கறி மூடை**[67]

என்று கடியலூர் உருத்திர கண்ணனார் பட்டினபாலையில் கரிய மிளகுப் பொதிகள் என விளக்குகிறது. இதுபோன்ற மிளகை சங்க மக்கள் உணவிற்கு அதிகமாக பயன்படுத்திள்ளனர் என்பதை பின்வரும் சங்கப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

**“கறி வளர் சாந்தம்”**[68]

மலைகளில் மிளகு கொடி வளர்ந்தது என்று அகநானூறு கூறுகிறது.

**“கறிவளர் அடுக்கம்”**[69]

என குறுந்தொகை மலையில் மிளகு படர்ந்துகிறது என்பதை விளக்கியுள்ளது. இப்பாடல்,

**“கறிவளர் சிலம்பை”**[70]

என்ற அகநானூற்றுப்பாடல் ,

**“துறுகல் நண்ணிய கறியிவர் படப்பை**[71]

என்ற அகநானூற்றுப்பாடல் மிளகு தோட்டம் இருப்பதாக கூறப்படுகிறது.

பசுங்காய் போழோடு கறிகலந்து

கஞ்சக நறமுறி யளைஇ"[72]

என்ற பெரும்பாணாற்றுப்படை மிளகை மோரினால் எடுத்த வெண்ணேயில் வேகவைத்து மாதுளங்காய் பொறியாளருக்கு கொடுக்கப்பட்டது. இதுபோன்ற மிளகை சங்க மக்கள் தங்களுடைய உணவிற்குப் பயன்படுத்தியதோடு வாணிப நோக்கத்திலும் பயன்படுத்தி உள்ளனர் என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை :

* சங்ககால மக்கள் தங்கள் வாழ்க்கையில் பொருளாதார முன்னேற்றம் அடைய உள்நாட்டு வாணிபத்தை பயன்படுத்திக்கொண்டனர்.

* வெளிநாடுகளிலிருந்து பல்வேறு பொருள்களை கொண்டு வந்து உள்நாடுகளில் விற்றனர்.

* வெளிநாட்டு கலைகளை உள்நாட்டிற்கு கொண்டு வந்து சிற்பங்களிலும் அரண்மனையிலும் கோவில்களிலும் மரப் பொருள்களிலும் பயன்படுத்தியுள்ளனர்.

* ஆடைகளில் கலைநுட்பத்திறன் கொண்டு இறக்குமதி செய்துள்ளனர்.

* தங்களுடைய பொருட்களை தேவைக்கு ஏற்ப பண்டமாற்று செய்துள்ளனர். உதாரணமாக

1. **உப்புக்கு பதில் நெல்லை பெறுதல்.**

2. **முத்திற்கு பதில் நெல்லை பெறுதல்.**

3. **கள்ளிற்கு பதில் பசுவை கொடுத்தல்.**

4. **இறைச்சியை கொடுத்து நெல்லை பெறுதல்.**

5. **இறைச்சியை கொடுத்து கள் பெறுதல்.**

6. **மீனைக்கொடுத்து கள்ளை பெறுதல்.**

ஆகியவை உள்நாட்டு வாணபத்தை பண்டமாற்று முறையில் மாற்றி கொள்ள வழிவகை செய்தது.

- சங்கமக்கள் உள்நாட்டில் வாணிபம் செய்ய பலமொழிகளை கற்று இருந்தனர்.

- அதனால் உள்நாட்டில் வாணிபம் செய்யவும் மற்றவர்களுடன் நட்புறவை வளர்த்துக்கொள்ளவும் இவ்வாணிக முறை பயன்பட்டது.

# சான்றெண் விளக்கம்

| நூல் | பாடல் எண் | பக்களண் |
|---|---|---|
| 1. பட்டின பாலை | பா. 207 | ப.310 |
| 2.திருமுருகாற்றுப்படை | பா.75 | ப.12 |
| 3.மதுரைக்காஞ்சி | பா.621 | ப.24 |
| 4.தமிழர் வாணிகம் | | ப.35 |
| 5. பரி பாடல் | பா. 10 | ப.263 |
| 6.தமிழர் வாணிகம் | | ப.35 |
| 7.தமிழர்சால்பு | | ப.262 |
| 8.மதுரைக்காஞ்சி | பா.81 | ப.4 |
| 9.பதிற்றுபத்து | பா.68 | ப.30 |
| 10.மதுரைலக்காஞ்சி | பா.503 | ப.19 |
| 11.பட்டினப்பாலை | பா.213 | ப.310 |
| 12.பெரும்பாணாற்றுப்படை | பா. 81 | ப.207 |
| 13.மேலது | பா. 77 | ப.207 |
| 14. பட்டினப்பாலை | பா. 120 | ப.307 |
| 15. அகநானூறு | பா. 365 | ப.1059 |
| 16. மேலது | பா. 293 | ப.871 |
| 17. புறநானூறு | பா. 353 | ப.765 |

| | | |
|---|---|---|
| 18. அகநானூறு | பா.75 | ப.225 |
| 19. ஐங்குறுநூறு | பா.10 | |
| 20.பட்டினப்பாலை | பா.199 | ப.304 |
| 21. மதுரைக்காஞ்சி | பா. 424 | ப.16 |
| 22. மேலது | பா. 536 | ப.21 |
| 23. மேலது | பா. 621 | ப.15 |
| 24. புறநானூறு | பா. 134 | ப.310 |
| 25. அகநானூறு | பா.56 | ப.165 |
| 26.அகநானூறு | பா.320 | ப.10 |
| 26. ஐங்குறுநூறு | பா. 195 | |
| 22. அகநானூறு | பா. \|௨௯ | |
| 23. புறநானூறு | பா. 60 | ப.159 |
| 24. நற்றிணை | பா.89 | ப.161 |
| 25. புறநானூறு | பா. 102 | ப.245 |
| 26. பெரும்பாணாற்றுப்படை | பா.27 | ப.214 |
| 27. பட்டினப்பாலை | பா. 89 | ப.306 |
| 28. மேலது | பா. 27 | ப.304 |
| 30. அகநானூறு | பா. 89 | ப.266 |
| 31. மேலது | பா.343 | ப.10 |
| 32. குறுந்தொகை | பா. 269 | ப.391 |

| | | |
|---|---|---|
| 33. அகநானூறு | பா. 140 | ப.425 |
| 34. மேலது | பா. 390 | ப.1127 |
| 35. நற்றிணை | பா. 254 | ப.523 |
| 36. மேலது | பா. 60 | ப.177 |
| 37. மதுரைக்காஞ்சி | பா. 661 | ப.25 |
| 40. திருமுருகாற்றுப்படை | பா. 139 | ப.14 |
| 41. புறநானூறு | பா. 33 | ப.92 |
| 42. பெரும்பாணாற்றுப்படை | பா. 155 | ப.210 |
| 43. மதுரைக்காஞ்சி | பா. 254 | ப.10 |
| 44. நற்றிணை | பா. 239 | ப.439 |
| 45. அகநானூறு | பா. 196 | ப.589 |
| 46. ஐங்குறுநூறு | பா. 48 | |
| 47. மேலது | பா. 49 | |
| 48. புறப்பாடல் | பா. 343 | ப.746 |
| 49.பொருநர் ஆற்றுப்படை | பா.214 | ப.89 |
| 50.பதிற்றுபத்து | பா.7 | ப.215 |
| 51. பொருநர் ஆற்றுப்படை | பா. 214 | ப.89 |
| 52. மேலது | பா. 216 | ப.89 |
| 53. மேலது | பா. 216 | ப.89 |
| 54. அகநானூறு | பா. 245 | ப.733 |

55. மேலது பா. 61 ப.180

56. குறுந்தொகை பா. 100 ப.243

57. அகநானூறு பா. 296 ப.879

58. பட்டினப்பாலை பா. 186 ப.308

59.சங்க கால சமுதாய சிந்தனைகள் ப.45

60. அகநானூறு பா. 112 ப.342

61.பட்டினப்பாலை பா.308 ப.304

62.அகநானூறு பா.2 ப.6

63. குறுந்தொகை பா. 288 ப.15

64. அகநானூறு பா. 112 ப.342

65. மேலது பா. 272 ப.83

66. பெரும்பாணாற்றுப்படை பா. 307 ப.211

# இயல் – 4

## வெளிநாட்டு வாணிகம்

1.0. வெளிநாட்டு வாணிகம் பற்றிய செய்திகள்

1.1. வாணிகம் செய்தவர்கள்

1.2 யவனர்களின் வருகை

1.3 உரோமர்களின் வருகை

1.4. இந்தியாவிற்கு எகிப்தியர்களின் வருகை

1.5 வாணிக நோக்கில் தமிழ் மொழிச் சொற்கள்

1.6 நம்பிக்கைகள்

2.0 போக்குவரத்துச் சாதனங்கள்

2.1. கன்னல் என்னும் கருவி

2.2 மரக்கலங்கள்

3.0. நடுக்கடலில் வழிப்பறிக் கொள்ளையை அடக்கி ஆழுதல்

3.1. நறவு

4.0 முசிறி துறைமுகம்

4.1. மிளகு

5.0. காவிரிப் பூம்பட்டினம்

5.1. புகார் துறைமுகம்

**8.6 வெளிநாட்டுடன் கலை பரிமாற்றம்**

**8.6.1 சிந்து சமவெளி நாகரீகம்**

**8.6.2 சீனர்களின் பங்கு**

**8.6.3 அயற்கலை தொடர்புகள்**

**8.6.4 கல்வெட்டு சான்றுகள்**

**8.6.5 ஐரோப்பியரின் வருகை**

**8.6.6 போரிச்சுக்கீசியர்**

**8.6.7 கலைகளின்  பாகுபாடுகள்**

**8.6.8  சமயமும்  கலையும்**

# வெளிநாட்டு வாணிகம்

சங்க கால மக்கள் தங்களிடம் உள்ளப் பொருட்களை பண்டமாற்று முறைகளில் மாற்றிக் கொண்டு வாழ்ந்தனர். பிறகு மரக்கலங்கள் வாயிலாக கடல் கடந்துச் சென்று போர் செய்து நாட்டைக் கைப்பற்ற மற்ற அரசர்களுடன் போர் புரிந்தனர். பிறகு இது போன்ற செயல்களினால் தான் உள்நாட்டில் நடைப்பெற்ற வாணிகம் வெளிநாட்டிற்கு பரவியது. பின் வெளிநாட்டின் நாகரீகமும், கலைகளும் சங்ககால மக்களிடம் வளர்ச்சிப் பெற்றது. பின்பு அங்குள்ள பொருட்களை வாங்கி கொண்டு வந்து விற்பனை செய்திருக்கின்றனர் என்பதை விரித்து காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## 1.0. வெளிநாட்டு வாணிகம் பற்றிய செய்திகள்

''பிளினியின் உயிர் நூலிலும் தாளமியின் கூகுல நூலிலும் கடல் வாணிகத்தை பற்றிய பல செய்திகள் காணப்படுகிறது. சங்க இலக்கியம் தரும் செய்திகளை புதுச்சேரிக்கு அண்மையில் உள்ள அரிக்கமேடு என்னும் இடத்தில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியின் மூலம் புதைபொருட்கள் கிடைத்துள்ளன. அவற்றுள் சிறப்பானவை ரோமாப்புரியின் நாணயங்கள் பலந்தமிழகத்துடன் மேற்கொண்டிருந்த கடல் வாணிகத்தின் விரிவை இவ்நாயணயங்கள் எடுத்துக்காட்டுகின்றன''[1]

''கி.மு 2ம் 3ம் நூற்றாண்டுகளில் இலங்கையில் தமிழ் வாணிகர் இருந்ததை அக்காலத்து பிராமி எழுத்து சாசனங் கூறு கள் கின்றன. மயிலை.சீனி வேங்கடசாமி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்''[2].

மிகத்தொடக்கக் காலத்திலிருந்து தமிழகத்தின் பொருள் வளங்கள் தொலைநாடுகளின் வணிகர் கவனத்தை கவர்ந்து வந்தன. சாலமன் ஆட்சியின்போது (கிட்டதட்ட கி.மு.1000ல்) மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை தார்ஷிஷின் கப்பல்கள் தங்கம், வெள்ளி, தந்தம், குரங்குகள், மயில்கள் ஆகியவற்றை ஏற்றிக்கொண்டு சென்றன என்று கேள்விப்படுகிறோம். ஏனெனில் இறுதிப்பொருட்கள் இரண்டையும் குறிக்க எபிரேய மொழியின் திருநூல் வழங்கிய பெயர்கள் கபிம் துகிம் என்பன.வி.கனகசபை ஆயிரத்துதொண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் என்று கூறுகிறார்[3].

## 1.1. வாணிகம் செய்தவர்கள்

''வர்த்தக குலம் பெரும்பாலும் நகர்புறங்களில் காணப்பட்டது. தொல்காப்பியர் அவர்களை வைஸ்சியர் என்று கூறி வாணிக குலமாக கருதவர்.அவர்கள் வியாபாரிகள் அவரை துவரை, வரகு முதலிய எண்வகை கூலங்களை விற்பவர்கள் வைசியர். தமக்கு விதித்த வாழ்க்கை நெறியை நுணுக்கமாக பின்பற்ற வேண்டுவது போலவும். வைசியர்களும் மிகுந்த லாபம் கருததாது வாணிகம் செய்தனர்'' [4] என்று குறிப்பிடபடுகிறது.

## 1.2. யவனர்களின் வருகை

யவனர்கள் தங்கள் நன்கலங்களில் கொண்டு வந்த குளிர் நறுமதுவைப் பணிப் பெண்டிர் பொற்கலங்களில் ஏந்த, அவ்வினிய நறாமாத்தியக் களிப்புடனும் அமைதியுடனும் நாட்கள் கழிந்தன.

இக் கவிஞர்களால் குறிப்பிடப்பட்ட யவனர்கள் எகிப்திய கிரேக்கர் என்பதில் ஐயமில்லை. ஏனெனில், செங்கடற் பயணத்தில் குறிப்பிட்டப்படி,

எகிப்திலிருந்து வந்த கிரேக்க வணிகர்கேள மது, பித்தளை, ஈயம், கண்ணாடி ஆகிய பொருள்கை முசிறிக்கும் வைக்கரைக்கும் கொண்டு வந்து, அவற்றுக்கு மாற்றாக அத்துறைமுகங்களிலிருந்து மிளகு, வெற்றிலை, தந்தம், முத்து, மெல்லாடை ஆகியவற்றை வாங்கிச் சென்றனர் என்று அறிகிறோம்.[5]

'கிரேக்கர்கள் எகிப்திலிருந்து ஜூலை மாதம் புறப்பட்டு ஜனவரி மாதத்தில் முசிறியிலிருந்து மீண்டும் புறப்பட்டனர். மலபாரில் அவர்கள் தங்கிய காலத்தில் அவர்கள் தங்கள் நாகரிகத்தை இயல்பாகவே தமிழரிடம் படியவிட்டிருப்பர்'[6].

## 1.3 உரோமர்களின் வருகை

இந்தியக் கடல்களில் கடல் கொள்ளைக்காரர் தொல்லைகளில் இந்நிலையில் உரோமருடன் அரசியல் தொடர்பு கொண்டவன் பாண்டிய அரசனேயாவான். உரோமர் நேசநாட்டினனாகும் எண்ணத்துடன் இருந்து வந்ததால், கிரேக்க வணிகர் தம் கப்பல்களிலேயே ஒரு கிரேக்க வில்வீரர் படைப்பிரிவை உடன் கொண்டு வந்தனர். எகிப்து இச் சமயம் உரோமர் ஆட்சியில் இருந்தது. ஆகவே, கிரேக்க வணிகர்கள் வந்த வில்வீரர் உரோமப் படைவீரராகவே இருந்திருக்க வேண்டும். இந்த உரோம வீரர்களின் மேம்பட்ட படைக்காலங்களும் மேம்பட்ட படைக்கட்டுப்பாடும் தமிழர் மதிப்பைப் பெற்றதுடன், உரோமர்களுடன் இன்னும் நன்கு பழகி அவர்கள் நாகரிகத்தை மேற்சொன்ன வேண்டுமென்ற அவாவையும் தூண்டாதிருந்திருக்க முடியாது.

உரோமப் படைவீரர்கள் பாண்டிய அரசர் பணியிலும் மற்றத் தமிழரசர் பணியிலும் அமர்ந்திருந்தார்கள். ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் ஆட்சியில் மதுரைக் கோட்டை வாயில் காப்பாளராக உரோமப் படைவீரர்கள் அமர்வு பெற்றிருந்தனர்.

இக்காலப் புலவர் ஒருவர் ஒரு தமிழரசன் போர்க்களத்திலுள்ள படைவீட்டைப் பற்றிக் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்.

“படைவீட்டின் மதில்கள் இரும்புச் சங்கிலிகளால் இறுகப் பிணிக்கப்பட்ட ஈரடுக்கான பாய்த் துணிகளால் அமைக்கப் பெற்றிருந்தன. அதனைக் காவல்காத்து நின்ற வலிமை வாய்ந்த யவனரின் கடு நோக்குக் காண்பவருக்கு அச்சந் தருவதாயிருந்தது இந்த யவனவீரரின் நீண்ட தளர் சட்டைகள் இடுப்புடன் அரைக்கச்சைகளால் இறுக்க கட்டப்பட்டிருந்தன. சைகைகளால் மட்டுமே கருத்தறிவிக்கவல்ல ஊமர்களான சில மிலேச்சர்கள் வெளிக் கூடத்தில் இரவு முழுதும் காவல் காத்தனர். அழகிய விளக்கால் ஒளிதரப்பெற்ற உட்கூடங்களை சுற்றி அவர்கள் ஓயாது திரிந்தவண்ணம் இருந்தனர்.[7]

## 1.4. இந்தியாவிற்கு எகிப்தியர்களின் வருகை

இந்தியாவிலிருந்து எகிப்துக்கும், எகிப்திலிருந்து இந்தியாவிற்கும் அந்நாட்களில் பலர் பயணம் செய்து வந்தனர். இது சராசரிடமிருந்து மலைகள், ஆறுகள், நகரங்கள் ஆகியவற்றை பற்றிய விவரங்களை டாலமி உசாவியறிந்தார்’’[8].

## 1.5 வாணிக நோக்கில் தமிழ் மொழிச் சொற்கள்

‘‘கப்பலில்கொணரப் பெற்ற வாணிகப் பொருட்பட்டியல் எபிரேய மொழியிலுள்ள மன்னர் நூலிற் கிடைக்கப் பெறுகின்றது.ஆங்குக் காணப்பெறும் தமிழ் சொற்களே உலக இலக்கியத்தில் முதன் முதலாகக் காணக்கிடைக்கும் தமிழ் சொற்கள் என்று கால்டுவெல் குறிப்பிடுகிறார்’’[9].

## 1.6. நம்பிக்கைகள்

சங்ககாலத்தில் வாழ்ந்த மக்கள்மற்ற நாடுகளோடு தொடர்புக் கொண்டிருந்தனர். அதன் பின் "பௌத்த மக்கள் தாங்கள் கடல் வழியாகச் செல்ல கடல் தெய்வமான மணிமேகலை வணங்கிச் சென்றார்களாம் "அப்படிச் செல்லும் பொழுது எந்த விதமான இடர்பாடுகளும் வராமல் இருக்க வேண்டும் என்பதற்காக வழிப்பாடு செய்துள்ளனர். இதனை தமிழ் மக்களும் சங்க காலத்தில் பின்பற்றி இருந்தனர் என்பதை,

**எங்கோ வாழிய குடுமி ! தங்கோச்**

**செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த**

**முந்நீர் விழவின் நெடியோன்**

**நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"**[10]

எனப் புறநானூறு வாயிலாக அறியமுடிகின்றது. இக்கருத்தினையே பின்வரும் காலமான சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய நூல்களில் காண முடிகின்றது.

## 2.0 போக்குவரத்துச் சாதனங்கள்

வணிகப் பொருள் ஒரே இடத்தில் உற்பத்தியாவதில்லை. வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு பொருட்கள் உற்பத்தியான படியல் அப்பொருள்களை யெல்லாம் ஓரிடத்தில் கொண்டு வந்து சேர்ப்பதற்கு வாணிகர்கள் கால்நடைகளையும் வண்டித்தில் பயன்படுத்தினார்கள். ஆனால் இகக்ாலத்தில் உள்ள போக்குவரத்து சாதனங்கள் போல அன்றைய நிலையில் இல்லை. ஆகவே அக்காலத்தில் வந்த வாணிகர்கள் எருது, கழுதை, வண்டி, படகு,

பாய்மரக் கப்பல்களைப் பயன்படுத்தினார்கள். எருமைக் கடாவை ஏர் உழுவதற்குப் பயன்படுத்தினார்கள். பின் எருதுகளைப் பொதிசுமக்கவும் வண்டியிழுக்கவும் பயன்படுத்தினார்கள் எருதுகளுக்கு அடுத்தபடியாக கழுதைகள் படுத்தப்பட்டன.

வெளி நாடுகளில் இருந்து குதிரைகள் கொண்டு வரப்பட்டன. அவை கடல் வழியாகக் கப்பல்களில் கொண்டு வரப்பட்டன. குதிரைகளை அரசரும் செல்வரும் பயன்படுத்தினார்கள். ஆனால் மற்ற வேலைகளுக்கும் பயன்படுத்தினர்.

## 2.1. மரக்கலங்கள்

சங்க மக்கள் வாணிகம் செய்ய பாய் மரப்படகைப் பயன்படுத்தியுள்ளனர். அப்படி பயன்படுத்தும் பொழுது கடல் சீற்றங்கள் வாயிலாக அழிவதும் உண்டு என்பதை,

**"பனை மீன் வழங்கும் வளை மேய்பரப்பின்**

**வீங்கு பிணி நோன் கயிறு அறீ இதை புடையூக்**

**கூம்பு முதல் முருங்க ஏற்றிச் சாய்நதடன்**

**கடுங்காற்று எடுப்ப, கல்பொழுது உரைஇ**

**நெடுஞ் சுழிப்பட்ட நாவாய் போல"**[11]

என்ற மதுரைக்காஞ்சி பனைமீன் இனம் உலவுவதும் சங்குகள் மேய்வதுமாகிய பரப்புடைய கடலில் இறுகும். பிணிப்பினையுடைய வலியபாய் மரக்கயிற்றை அறுத்து பாயையும் கிழித்து, பாய் மரத்தின்அடிப்பாகத்தை முறித்து மோதி வேகமாக பெருங்காற்று வீசுதலால் நங்குரக் கல்லுடனும்

கயிற்றுடனும் நின்று அசைந்து நெடிய சுழியிலேப் பட்ட மரக்கலம் சுழன்று அசையும், அப்படிப்பட்ட மரக்கலத்தின் வாயிலாக வெளிநாட்டு வாணிகம் நடைபெற்றது என்று இப்பாடல் வழி தெளிவாகிறது.

## 2.2. கன்னல் என்னும் கருவி

பாத்திரத்தில் நீர் சொட்டு சொட்டாக விட்டால் அதனை அளக்க கூடிய கருவியாக கன்னல் என்னும் கருவியை பயன்படுத்தியுள்ளனர். அப்படிப்பட்ட ஒரு கருவியை யவனர் தன்னுடைய நாட்டில் இருந்து தமிழகத்திற்கு கொண்டு வந்தார்கள் என்பதை,

**பொழுதளந்து அறியும் பொய்யா மாக்கள்**

**குறுநீர்க் கன்னல் இனைத்தென் றிசைப்ப**[12]

என முல்லைப்பாட்டு நாழிகையை அளந்து இத்துணை என்று அறியும் பொய்த்தலில்லாத நாழிகைக் கணக்கர்கள் மன்னனை கையால் தொழுதபடியே கண்டு வாழ்த்திக் கடல் சூழ்ந்த உலகத்தே பகைவரை வெல்லச் செல்கின்றவனே! உன்னுடைய நாழிகை வட்டிலிற் சென்ற நாழிகை இத்துணைக் காண் என்று மன்னனுக்கு அறிவிக்கின்றனர். மேலும்,

**"குறுநீர்க் கன்னல் எண்ணுந ரல்லது**

**கதிர் மருங் கறியாது அஞ்சுவரப் பாஅய்"**[13]

என அகநானூறு வாயிலாக கன்னலும் இண்ணமும் நாழிகை வட்டில் எனவரும் பிங்கலந்தைச் சூத்திரம், பொழுது அறிந்து உணர்த்துகிறது. மேலும்

மன்னனிடத்து ஒன்றைச் சொல்ல விழைபவர் அவனை வணங்கி வாழ்த்திய பின்னரே, சொல்லும் மரபினையும் இப்பகுதியால் அறியலாம்.

## 3.0. நடுக்கடலில் வழிப்பறிக் கொள்ளையை அடக்கி ஆளுதல்

நடுக்கடலில் உள்நாடு மற்றும் வெளிநாட்டு வாணிகம்நடைப்பெறும் பொழுது கடற்கொள்ளையர்களால் இடையுறு ஏற்படுவதை நெடுஞ்சேரலான் தடுத்து ஆட்கொண்ட செய்தியை பின் வரும் துறைமுகங்கள் வாயிலாக எடுத்துரைக்கப்படுகிறது.

### 3.1. நறவு

துளு நாட்டிலே மங்களூர்த் துறைமுகத்துக்குத் தெற்கே நறவு என்னும் துறைமுகப் பட்டினம் இருந்தது. இதுவும் துளு நாட்டைச் சேர்ந்தது. துளு நாட்டு நன்னன் ஆட்சியில் இருந்தது. நறவு என்னும் சொல்லுக்குகள் மது என்னும் பொருளும் உண்டு.

துளு நாட்டின் எழில் மலைக்கு நேரே, கடலில் இருந்த ஒரு கடல் துருத்தில் கடம்பர் தங்கியிருந்து வாணிகத்தின் பொருட்டு அவ்வழியாக வருகிற கப்பல்களைக் கொள்ளையடித்தனர் என்றும் ஆகவே அவ்வழியாகக் கப்பல்கள் போவது ஆபத்து என்றும் "பிளைனி" என்னும் யவனர் எழுதியுள்ளார். ஆனால், அக்காலத்தில் சேர நாட்டையரசாண்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் அந்தக் கடற் குறும்பரை வென்று அடக்கினான். கடற் குறும்பர் அழித்த பிறகு யவனக் கப்பல்கள் சேர நாட்டுத் துறைமுகங்களுக்கு வந்து போயின[14].

கடல் துருத்தியில் இருந்த கடற்குறும்பர் அத்தீவில் கடம்ப மரம் ஒன்றை வளர்த்த வந்தனர். அவர்கள் அத்தீவிலிருந்து கொண்டு அவ்வழியாக வாணிகத்தின் பொருட்டு வந்த யவனக் கப்பல்களை முசிறித் துறைமுகத்துக்கு வராதபடி தடுத்தனர். ஆகவே அவர்களை அழிக்க இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னுடைய மக்கள் நால்வரில் ஒருவனான சேரன் செங்குட்டுவனைக் கப்பல் படையின் தலைவனாக அமைத்து அனுப்பினான்.

செங்குட்டுவன் கடலில் சென்று குறும்பரை வென்று அவர்கள் வளர்த்த கடம்ப மரத்தை அறுத்து அம்மரத்தினால் ஒரு முரசினை செய்தான். இவ்வாறு கடற்குறும்பர் அழிக்கப்பட்ட பிறகுயவனக் கப்பல்கள் சேர நாட்டிற்கு வந்து சேர்ந்தன. நெடுஞ்சேரலாதன் கடம்பரை அழித்த செய்தியைப் பதிற்றுப்பத்து இரண்டாம் பத்து ஐந்தாம் பத்திலும் அறிகிறோம் என்பதை,

**பவர் மொசித்து ஓம்பிய திரள்பூங் கடம்பின்**

**கடியுடை முழு முதல் துமிய ஏஎய்**

**வென்றெறி முழங்குபணை செய்த வெல் போர்**

**நாரரி நறவின் ஆரமார்பின்**

**போரடு தானைச் சேரலாத**[15]

என்ற பாடல் இரண்டாம் பத்தில் கடம்பரை நேரில் சென்று அடக்காமல் தன் மகனை ஏவனான் என்பது கூறப்படுகிறது. ஏவப்பட்டவன் இவனுடைய மகனான செங்குட்டுவன்,

**"இரு முந்நீர்த் துருத்தியுள்**

**முரணியோர்த் தலைச் சென்று**

**கடம்பு முதல் தடித்த கடுஞ்சின முன்பின்**

**நெடுஞ்சேரலாதன் வாழ்க அவன் கண்ணி"[16]**

என்ற பதிற்றுப்பத்தில் இரண்டாம்பத்து செங்குட்டுவன் கடல் துருத்திக் குறும்பரை வென்றபடியால் அவன் கடல் பிறகோட்டிய செங்குட்டுவன் என்று பெயர் பெற்றான். இவனைப் பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்தைப் பாடிய பரணர்,

**"தானை மன்னர்**

**இனியா ருளரோ நின் முன்னு மில்லை**

**மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது**

**விலங்குவரி கடவும் துளங்கிருங் கமஞ்சூல்**

**வயங்கு மணி இமைப்பின் வேலிடுபு**

**முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே"[17]**

என்ற பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தில் ஒளி வீசுதலையுடைய வேற்படைகளை ஏவி அக்காலத்தே எதிர்த்த பகைவரைத் தடுத்தளித்த மன்னர் என்று பெயர் பெற்றார். "கடம்ப மரத்தைக் காவல் மரமாகக் கொண்டிருந்த குறும்பரும் பிற்காலத்தில் சரித்திரப் புகழ் பெற்ற வாசிக் கதம்பரும் ஒருவரே என்று சாசனங்கள் கூறுகின்றனர். இடப்புண்ட பேரிஞ்சி வஞ்சியில் இட்ட கடப்ப

முது முரசம் கடம்ப மரத்தால் செய்யப்பட்ட பழைய முரசம் சேர நாட்டிற்கு அப்பால் கடலிலே உள்ள தீவுகளில் வாழ்ந்தவர்கள் அடிக்கடி சேர நாட்டில் புகுந்து பல துன்பங்களை இழைத்து வந்தனர். அதனால் கடுங்கோபமுற்ற இமய வரம்பன் நெடுஞ்சேரலதான் கடலில் சென்று அப்பகைவர்களை அழித்து, அம்மக்களின் மன்னனுடைய காவல் மரம் கடம்பினை அறுத்து அம்மரத்தினால் தனக்கு ஒரு முரசினைச் செய்து கொண்டான். பின் ஒரு சமயம் நடந்த போரில் வஞ்சியிலுள்ள சேரர் கோட்டை சோழர்களால் இடிக்கப்பட்டது. அப்போது சேரர் அஞ்சிப் போட்டு விட்டுச் சென்ற அக்கடம்ப முரசினைக் கொண்டு வந்தான் என்று இப்பாடல்வரி வாயிலாக அறிய முடிகின்றது. இச்செய்தினையே,

**"வலம்படு முரசிற் சேரலாதன்**
**முந்நீரோட்டிக் கடம்பறுத் திமயத்து**
**முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து**
**நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்**
**பணி திறை தந்த பாடுசால் நன்கலம்**
**பொன் செய்பாவை வயிரமொடு ஆம்பல்**
**ஒன்றுவாய் நிறையக் குவைஇ, அன்றவண்**
**நிலந்தினத் துறந்த நிதியம்"[18]**

என அகநானூற்று பாடலடிகள் வாயிலாக கடல் கொள்ளையர்களை அடக்கியவன் பெருஞ்சேரலாதன் என்ற செய்தி தெரிய வருகிறது.

## 4.0 முசிறி துறைமுகம்

தமிழ்நாட்டுக்கு வட மேற்கிலிருந்து வந்த வெளிநாட்டு வாணிகர்கள் சேர நாட்டின் முசிறி துறைமுகத்துக்கு வந்து வாணிகஞ் செய்தார்கள் "முசிறியில் அவர்கள் வாணிகஞ் செய்த இடத்துக்குப் பந்தர் என்று பெயரிட்டிருந்தார்கள். "பந்தர்" என்றால் அரவு மொழியில் கடைவீதி என்பது பொருள்" முசிறி துறைமுகத்துத்தில் முத்துக்களும் விலையுயர்ந்த நகைகளும் விற்கப்பட்டன.

தமிழகத்தில் வணிகம் செய்த யவன்களின் தொடர்பே இவ்வணிகருக்கு மிகுதியும் இருந்தது. ''பெரிபுளூஸ் நூலாசிரியர் போன்றோரும் யவனரது தொடர்பினால் முசிறி துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்பட்ட பொருட்கள் பற்றி கூறுகின்றன என்று சுவித்தியானந்தன், தமிழர் சால்பு என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்''.பெரியாற்றின் கடல்வாய் அருகே முசிறி ஒரு முக்கியமான துறைமுகமாயிருந்தது. அதன் வளங்களை கவிஞர் ஒருவர் வர்ணித்துள்ளார்.

திருவோங்குத் முசிறித்துறை முகநோக்கிப் பொன்னின் வளந்தாங்கிய யவனர்களுடைய அழகிய பெரிய மரக்கலங்கள் பெரியாற்றின் நீரை உந்தி வெண்ணுரைகளை வாரி இறைத்த வண்ணம் வருகின்றன.வீடு வீடாகக் கூடைகளில் நெல் கொண்டு வரப்படுகிறது. நெல்லை வாங்கிக் கொண்டு மக்கள் பண்டமாற்றாக மீனைக் கொடுக்கிறார்கள். அத்துடன் வீடுகளிலிருந்து மிளகு சாக்குகளில் சந்தைக்கு கொண்டு செல்லப்படுகிறது. கப்பலிருந்து கொண்டு வரப்படும் தங்கத்துக் கீடாக இச்சரக்குகள் விற்கப்படுகிறது. முசிறித்துறையில் கடலலையின் இனிய பண் ஒயாது இசைபாடுகின்றது.

தங்கம் படகுகளிலேயே வந்து கரையில் இறங்கி இத்துறைமுகங்களில் செங்கல்லாலும் காரையாலும் கட்டி எழு கடல் கடந்த நாடுகளிலிருந்து காலங்களில் குதிரைகள் வந்திறங்கின. மிளகும் கப்பல்களில்

கொண்டுவரப்பட்டன. வடமலைகளிலிருந்து தங்கமும் பன்மணிக்கற்களும் வந்தன. மேற்குமலையிலிருந்து சந்தனமும் அகிலும் கொண்டு குவிக்கப்பட்டன. தென்கடல் முத்தும் கீழ்கடல் பவளமும் இங்கே குழுமிக் கிடந்தன. கங்கைத் தீரத்தின் விளைப்பொருள்கள், காவிரிக்கரையில் வளங்கள் காழகத்தின் (பர்மாவின்) செய்பொருட்கள் யாவும் காவிரியில் பட்டினத்தின் வாணிகக் களத்துக்கு வந்து இறங்கின.இங்கு உயரிய கலங்கரை விளக்கங்கள் இருந்தன. கப்பல்களைத் துறைமுகங்களின் திசைநோக்கி அழைக்கும் முறையில் இங்கே இராக்காலங்களில் பேரொளியாக திகழ்ந்தது[19]

இதனால் வணிகர்கள் பல மொழிகளை கற்று அதில் திறமைப் பெற்றவர்களாக சங்க மக்கள் வாழ்ந்திருக்கின்றனர். அதனால் வெளிநாடுகளில் இருந்து பாவை விளக்கு, மிளகு, சந்தனம், வட்டமானகல், குதிரைகள், கோவேறு கழுதைகள் ஆகியவற்றை ஏற்றுமதி மற்றும் இறக்குமதி செய்துள்ளனர். அத்துடன் வெளிநாட்டில் இருந்து ஆடைகளை கொண்டு வந்து இறக்குமதி செய்துள்ளனர். இதனால் சங்க கால மக்கள் செல்வம் மிக்கவர்களாக திகழ்ந்துள்ளனர். மேலும் பொழுது போக்கிற்காக திருவிழாக் காலங்கள், சடங்கு முறைகள், ஆகியவற்றை உருவாக்கிள்ளனர். அதனால் வெளியுற வாணிகம் வளரவும், நட்புறவு வளரவும் இது வாணிகம் சிறப்பு பெற்று விளங்கியது.

அப்படிபட்ட வாணிகத்தில் கொற்கை துறைமுகம் முத்துக்குளிப்புத் தொழிலுக்குரிய ஒரு நடுவிடம் ஆகும். இந்நகரின் மக்களில் பெரும்பாலோர் முத்து குளிப்பவராகவும் சங்கறுப்பவராவும் இருந்தனர்.

**“நின் நயந்து வந்தனென் அடு போர்க் கொற்றவ!**

**இன் இசைப் புணரி இரங்கும் பௌவத்து,**

**நன் கல வெறுக்கை துஞ்சும் பந்தர்.[20]**

என்ற பதிற்றுப்பத்து 6ம் பத்தில் (செய்யுள்5) வாயிலாக கொல்லுகின்ற போரை செய்யும் அரசே! நின்னைக் காண விரும்பி வந்தேன். இனிய ஓசையையுடைய அலைகள் ஒலிக்கும் கடல் வாயிலாக வந்த நல்ல ஆபரணங்களாகிய செல்வம் தங்கும் பண்டக சாலைகளை உடையதும் மனம் வீசுகின்ற தாழை மரங்கள் பொருந்திய கடற்கரைச் சோலைகள் அழகிய பெரிய துறைகளையும் உடைய குளிர்ந்த கடற்பக்கத்தினை உடையதுமாகிய நல்ல நாட்டுக்கு வரிய ஒப்பற்றவனே என்று இச்செய்யுள் முசிறி துறைமுகத்தையும் அந்த நாட்டின் பெருமையும் சிறப்பாக விளக்குகிறது. மேலும் இக் கருத்தினையே,

**"பந்தர்ப் பெயரிய பேர் இசை மூதூர்**

**கடன் அறி மரபின் கை வல் பாண!**

**தென் கடல் முத்தமொடு நான் கலம் பெறுகுவை**

**கொல் படை தெரிய,**[21]

என்ற பதிற்றுப்பத்திலும் உயர்ந்த நோக்கு உரிய ஒப்பற்றோனாகிய செல்வத்தையுடைய கோமானை நெடுமொழியையுடைய சுற்றத்தோடு பாடினையாய் சென்றால், யாழை வாசித்தலின் முறையறிந்த கைதேர்ந்த பாணனே"கொடுமணம் என்னும் ஊரில் உண்டான நல்ல ஆபணங்களை பந்தரென்னும் பெயரை உடைய, பெரிய புகழை உடைய, பழைய ஊரிடத்தேயுள்ள தெளிந்த கடலில் விளைந்த முத்துக்களோடு பெறுவாய் என்று இப்பாடல் விளக்குகின்றது மேலும்,

**" பந்தர்ப் பயந்த பலர் புகழ் முத்தம்''**[22]

என்று எட்டம்பத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. வெளிநாட்டுடன் வாணிகத் தொடர்பு வைத்திருந்த காரணத்தால் அரபு நாட்டில் “அரிசி என்னும் தமிழ் சொல் ஒரூஜ் என்று வழங்குகிறது” என்று ஆசிரியர் மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் தன்னுடைய நூலில் குறிப்பிள்ளார்.

## 4.1. மிளகு

மலைப்பகுதியில் விளையும் மிளகை அயல்நாடுகளுக்கு ஏற்றிச் சொல்ல கடற்கரையில் பொதிகளாகக் குவிக்கப்பட்டிருக்கும். மரக்கலங்களில் கொண்டு வரப்பட்ட பொன்அணிகள் தோணிகளில் ஏற்றப்பட்டு கரையில் சேர்க்கப்படும். குட்டுவன் மலைபடு பொருள்களையும், கடல்படு பொருள்களையும் பரிசிலருக்கு வழங்குவான். அவனுடைய கடற்கரை துறைமுகம் முசிறி ஆகும். என்பதை,

**மனைக் குவை இய கறி மூடையால்,**
**கலிச் சும்மைய கரை கலக்குறுந்து,**
**கலம் தந்த பொற்பரிசம்**
**கழித் தோணியான், கரை சேர்க்குந்து,**
**மலைத் தாரமும், கடல் தாரமும்**
**தலைப் பெய்த, வருநர்க்கு ஈயும்**
**புனல் அம் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்**
**முழங்கு கடல் முழவின் முசிறி அன்ன,**[23]

என புறநானூறு வாயிலாக வாணிகத்தொடர்பின் சிறப்புகள் தெளிவாக எடுத்துரைக்கப்படுகிறது.

**யவனர் தந்தி வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளம் கெழு முசிறி ஆர்ப்பு எழு வளைஇ**
**அருஞ்சமம் கடந்து படிமம் வவ்விய**
**நெடு நல் யானை அடுபோர்ச் செழியன்**
**கொடி நுடங்கு மறுகின் கூடற் குடா அது**
**பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய**
**ஒடியா விழாவின் நெடியோன் குன்றத்து**
**வண்டுபட நீடிய குண்டுசுனை நீலத்து**
**எதிர்மலர்ப் பிணையல் அன்ன இவள்**
**அரிமதர் மழைக்கண் தென்பனி கொளவே**"[24]

என்கிறது அகநானூறு. அழகிய ஆற்றினது வெண்ணிற நுரை சிதறுமாறு, தொழில் மாட்சிமைப்பட்ட யவனர்கள் கொண்டு வந்த நல்ல மரக்கலம், பொன்னைக் கொண்டு வந்து விலையாகக் கொடுத்து விட்டு மிளகை ஏற்றிச் சென்றனர். அத்தகைய வளம் பொருந்திய முசிறி என்னும் பட்டினத்தில் நெடிய நல்ல யானைகளையும், பகைவரை வெல்லும் போர் ஆற்றலையும், உடைய பாண்டியன் ஆராவாரம் உண்டாக, அரிய போரை

வென்று அங்குள்ள பொற்பாவையினைக் கவர்ந்து கொண்டு சென்றான். என்று இப்பாடல் விளக்குவதிலிருந்து பாண்டியமன்னன் தன்னுடைய நாட்டை அழகுடையதாக கலை நயம்மிக்க பொருளைக் கொண்டுச் சென்று அழகு படுத்தியுள்ளான் என்பதுத் தெரியவருகிறது. அத்துடன் முசிறி துறைமுகத்தின் வாயிலாக யவனர்கள் வணிகம் செய்துள்ள செய்தியும் தெளிவாகின்றது.

## 5.0 காவிரிப் பூம்பட்டினம்

வாணிகம் நிகழ்ந்த செயல்பாட்டில் காவிரிப்பூம்பட்டினம் சிறந்து விளங்கியது என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. காவிரிப் பூம்பட்டினம் இயற்கை வளங்கள் மிகுந்தம் காணப்பட்ட நகரமாகும்.

**" செல்லா நல்லிசை அமரர் காப்பின்**
**நீரின் வந்த நிமிர் பரிப்புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூட்டையும்**
**வடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்து குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஆழத்து உணவும் காழகத்து ஆக்கமும்**
**அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**
**வளம் தலை மயங்கிய நனந்தலை மறுகின்"**[25]

என பட்டினப்பாலை காவிரிப் பூம்பட்டினத்திற்கு வந்த பொருட்களைப் பட்டியலிடுகிறது. அயல்நாடுகளிலிருந்து கடல் வழியாக மரங்கலங்களில் வந்தக் குதிரைகள், மிளகு மூட்டைகள், மணிகள் பொன்குவியல்கள் குடகு மலைகளில் தோன்றிய சந்தனக் கட்டைகள், அகில் கட்டைகள், தென்திசையில் தோன்றிய முத்து, கீழ்த்திசைக்கடலில் தோன்றிய பவளம், கங்கையாற்றுப் பகுதியில் விளைந்த பொருட்கள், கடாரத்தின்று கொண்டு வரப்பட்ட அரிய பொருட்கள், ஆகிய பலவகைப்பட்ட செல்வங்களும் ஒன்றுடன் ஒன்று கலந்துகிடக்கும் இடம் காவிரிப்பூம்பட்டினம் என்று இலக்கியச் சான்று பகர்கின்றது இப்பொருள் பாண்டிய நாட்டு துறைமுகத்தில் வந்திறங்கியது.

**" வெளில் இளங்கும் களிறு போலத்**

**தீம்புகார்த் திரை முன்துறைத்**

**தூங்கு நாவாய் துவன்றிருக்கை**

**மிசைக் கூம்பின் நசைக் கொடி"[26]**

என்றப் பட்டினப்பாலை துறைமுகத்தை அடுத்துள்ள மரூவூர்ப்பாக்கதில் அயல்நாடுகளிலிருந்து கப்பல் ஓட்டி வந்த மாலுமிகளும், கப்பலோடிகளும், கடற்கரைப் பக்கத்தில் தங்கியிருந்தார்கள். அவர்கள் வெவ்வேறு மொழிகளைப் பேசினார்கள். அவர்களில் யவனரும் இருந்தார்கள். என்று

**"மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்**

**புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்**

**முட்டாச் சிறப்பின் பட்டனம் பெறினும்"[27]**

என பட்டினப்பாலை வேற்று நாட்டவர் பலரும் இந்நாட்டில் எவ்வகை அச்சமும் இன்றி வாழ்ந்தமையோடு, காவிரியாற்றின் முகத்துவாரம் ஆழமாகவும் அகலமாகவும் பல கப்பல்கள் தங்குவதற்கு ஏற்றதாகவும் இருந்தது. வாணிகக் கப்பல்கள் பாய்களைச் சுருட்டாமலும் பாரத்தைக் கழிக்காமலும் நேரே ஆற்றினுள் புகுந்து துறைமுகத்தை அடைந்தன.

**"கூம்பொடு**

**மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது**

**புகாஅர்ப் புகுந்த பெருங்கலம், தகா அர்**

**இடைப்புலம் பெருவழிச் சொரியுங்**

**கடற்பல தாரத்த நாடு கிழ வோயே"[28]**

என புறநானூறு உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்ற புலவர் சோழர் நலங்கிளியைப் பற்றி புகழ்ந்து பாடுகிறார். துறைமுகத்தில் வந்து தங்கிய நாவாய்கள் யானைப் பந்தியில் நிற்கும் யானைகள் அசைந்து கொண்டு நிற்பன போல அசைந்து கொண்டிருந்தன.

ரோமாபுரியிலிருந்து புறப்பட்ட கப்பல்கள் சேர நாட்டில் முசிறி துறைமுகத்துக்கு வந்தது போல சீனாவிலிருந்து புறப்பட்ட கப்பல் நேரே காவிரிப்பூம்பட்டினத்திற்கு வந்தன எனக் கருதலாம். சேர நாட்டிற்கு வரும் கப்பல் வழி மறித்துக் கொள்ளையடிக்கும் கடற் கொள்ளையர்களான கடம்பரை முறியடித்தான் நெடுஞ் சேரலாதன் என்பதை,

"வரை மருள் புணரி வான் பிசிர் உடைய
வளி பாய்ந்து அட்ட துளங்கு இருங்கஞ்சூல்
நளி இரும் பரப்பின் மாக்கடல் முன்னி
அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்,
சூருடை முழு முதல் தடிந்த பேர் இசை,
கடுஞ்சின விறல் வேள் கிளிறு ஊர்ந்தாங்கு[29]

என பதிற்றுப்பத்து கடலிலே மலைபோல அலைகள் பெரியனவாய் எழுகின்றன. அவ்வலைகள் சிறுசிறு துளிகளாக உடைந்து சிதறும் வகையில் காற்றுப் பாய்ந்து அடிக்கிறது. இத்தகைய கரியக் கடலின் நடுவே சென்று உயிர்களை வருத்துகின்ற கள்வர்களை போர் செய்து முறியடித்தான் நெடுஞ்நேரலாதன் என்று விளக்குகிறது. இது போன்ற ஒத்த கருத்தினை உடைய மற்றொரு பாடலான,

துளங்கு பிசிர் உடைய மாக்கடல் நீக்கி
கடம்பு அறுத்து இயற்றிய வலம்படு விளன்பணை
ஆடுநர் பெயர்ந்து வந்து, அரும்பலி தூஉய்
கடிப்புக் கண் உறூஉம் தொடித்தோள் இயவர்[30]

என பதிற்றுப்பத்து நெடுஞ்சேரலாதன் கடற்கொள்ளையரை அடக்கினான் என்று கூறுகிறது. இதே போல்

**நும் கோ யார்? என வனவின் எம்கோ**

**இரு முந்நீர்த் துருத்தியுள்**

**முரணி யோர்த் தலைச் சென்று**

**கடம்பு முதல் தடிந்த கடுஞ்சின முன்பின்**

**நெடுஞ்சேரலாதன், வாழ்க, அவன் கண்ணி![31]**

என பதிற்றுப்பத்து உம்முடைய அரசன் யார்? என்று புலவரை வினவும் பொழுது கடலிடையே சென்று கடற்கொள்ளையர்களை அடக்கியவன் எம்முடைய அரசன் என்று இப்பாடல் எடுத்துரைக்கிறது.

**"கருங்கால் மராத்து வாஅல் மெல்இணர்**

**சுரிந்துவணர் பித்தை பொலியச் சூடி**

**கல்லா மழவர் வில்இடம் தழீஇ,**

**வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை**

**மொழி பெயர் தேஎத்தர் ஆயினும்**

**பழிதீர் காதலர் சென்ற நாட்டே"[32]**

என்றும்,

**"சால் பெருந் தானை சேரலாதன்**

**மால்கடல் ஓட்டி,கடம்பு அறுத்து, இயற்றிய**

**பண்அமை முரசின் கண் அதிர்ந் தன்ன,[33]**

என அகநானூறு சேரலாதன் கடற்கொள்ளையரை முறியடித்த செய்தியை இப்பாடல் உணர்த்துகிறது.

## 5.1. புகார் துறைமுகம்

புகார் துறைமுகத்தை கயவாய் என்றார் சங்க கால வாழ்வியல் ஆசிரியர். புகார் துறைமுகத்தையும் அங்கே நடைபெற்ற செயல்பாடுகளை பற்றியும் பட்டினப்பாலை விரிவாக விளக்கம் தருகிறது. பெரிய கப்பல்களுக்கும் சிறந்த துறைமுகமாக அப்பட்டிணம் விளங்கிற்று. சரக்குகளையும் பாயினையும் இறக்காமலே அத்துறைமுகத்தில் கப்பல்கள் நுழைய முடியும் கப்பல் நிலையாகவும் காவலாகவும் நின்றன. பரதவர் வாழிடங்களுக்கு அருகில் கடற்கரையில் பண்டங்களை சேகரிக்கப் பண்டசாலைகள் கட்டப்பெற்றன. அளந்தரியாப் பல்பண்டங்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாக காத்திருந்தன. இறக்குமதி ஏற்றுமதி எனும் இருவகைப்பொருட்களும் நிறைந்து கிடந்தன.

குதிரைகள் புகாரில் வந்து இறங்கின. தங்கம்ம் பொன்னும், மணியும், மேலை நாடுகளில் இருந்து சந்தனமும் அகிலும், முத்து பவளமும், காவிரி உணவு, நீலத்து திண்பண்டங்கள், ஆடைகள் ஆகியவை புகார் நகரத்திற்கு இறக்குமதி செய்யப்பட்டன. பொன்களால் செய்யப்பட்ட அணிகலன்கள் ஏற்றமதி செய்யப்பட்டன.

சமுதாய வாழ்வு கலைகள், தொழில்கள் என்பவற்றிற்கு அடிப்படையான வேதியலும் வேளாளரும் வட இந்தியாவில் இருந்து எனும் கொள்கையை நச்சினார்கினியர் குறிப்பிட்டுள்ளார்[34]. படகுகள் நிற்பது போர் குதிரைகள் நிறுத்தி வைப்பது போலக் காட்சியளித்தது என்று பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.புகார் துறைமுகம் பெருங்கடல் அலைகளைக் கிழித்துக் கொண்டு முன்னேற கப்பல்களின் பாய்கள் உதவின. கப்பல் தளத்தில் முரசொலித்தது. பாய்மரத்தினின்றும் உயரிய கொடி பறந்தது. இதனால் அக்கப்பல் எந்நாட்டவரது என்பது அறிவிக்கப்பட்டது தெளிவாகிறது.

## 5.2. கங்கை கரையாற்றின் வாணிபம்

கங்கையாற்றின் கடலில் கலக்கின்ற புகார் முகத்தின் உள்ளே கங்கையாற்றில் நுழைந்து கங்கை கரையில் உள்ள பாடலிபுரம், காசி (வாரணாசி) முதலான ஊர்களில் வாணிகம் செய்து திரும்பினர் என்று,

**“கங்கை வங்கம் போக்குவர் கொல்லோ”**[35]

என நற்றிணை எடுத்துரைக்கின்றன. மகத நாட்டின் தலைநகரான பாடலிபுத்திரத்தில் கங்கையாற்றின் கீழே பெருஞ்செல்வத்தைப் புதைத்து வைத்திருந்ததைப் பற்றி அறிந்தனர். தமிழக வாணிகத்தின் மூலமாக நந்த அரசரின் செல்வப் புதையலைத் தமிழ் நாட்டவர் அக்காலத்தில்

அறிந்திருந்தார்கள். என்பதை மாமூலனார் என்னும் சங்கப் புலவர் தம்முடைய செய்யுளான,

**“பல் புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்**
**சீர் மிகு பாடலிக குழீஇக் கங்கை**
**நீர்முதற் கரந்த நிதியங்கொல்லே”[36]**

என அகநானூற்றில் விளக்கி கூறியுள்ளார்.

**நாள் தர வந்த விழுக்கலம் அனைத்தும்**
**கங்கை அம்பேர்யாறு கடற் படர்ந்தா அங்கு**
**அளந்து கடை அறியா வளம் கெழு தாரமொடு**
**புத்தேள் உலகம் கவினிக் காண்வர**
**மிக்குப் புகழ் எய்திய பெரும் பெயர்[37]**

என மதுரைக்காஞ்சி அதிகாலையில் திறையாகக் கொண்டு வந்து சேர்ந்த சிறந்த கலங்களும் பிறவும் கங்கையில் பண்டங்களோடு தேவருலகம் போன்று பொலிவெய்தி விளங்க இங்குவந்து குவிந்தன என்று கூடகூடப்படுகிறது.

## 6.0. எயிற்பட்டினம்

எயிற்பட்டினம் என்ற துறைமுகம் உள்நாடு மற்றும் வெளிநாடுகளிலும் ஏற்றுமதி மற்றும் இறக்குமதி செய்ய இத்துறைமுகம் செயல்பட்டது. "பெரீப்ளூஸ் என்னும் கிரேக்க மொழி நூல் இந்தப் பட்டினத்தைச் "சோ பட்மா" என்று கூறுகிறது. சோ பட்மா என்பது சோ பட்டினம் என்பதன் மரூஉ" என்று மயிலை சீனி, வேங்கடசாமி அவர்கள் குறிப்பிடுகிறார்[38]. இந்த துறைமுகப்பட்டினத்தை பற்றி,

**"மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய,**

**பனி நீர்ப் படுவிற் பட்டினம்"[39]**

என சிறுபாணாற்றுப்படை கரையிடத்துள்ள வெள்ளிய மணற்பரப்பில் கடல் பரந்து கிடக்கின்றன. நெடுவழியிடை உப்பங்கழிகள் சூழ்ந்த ஊர்களையும் எயிலால் சூழப்பட்ட குளிர்மிகு பொய்கைகளையும் உடைய எயிற்பட்டினத்தை அணுகுவீர் என்று கூறப்படுகிறது.

**" ஓங்கு நிலை யொட்டகம் துயில் மடிந்தன்ன**

**வீங்கு திரை கொணர்ந்த விரைமா விறகு"[40]**

என்று சிறுபாணாற்றுப்படை கூறுகிறது. விரை மரமாகிய அகில்மரம் இறக்குமதி பொருள்களில் ஒன்று. அதனால் தான் இப்பாடல் கடல் கொணர்ந்து ஒதுக்கிய மரஅறகால் தீயினை எரித்து என்று விளக்குகிறது. மேலும்,

**"வானம் ஊன்றிய மதலை போல**

**ஏணி சாத்தியை வேற்றருஞ் சென்னி**

**விண்பொர நிவந்த வேயா மாடத்து**

**இரவின் மாட்டிய இலங்குசுடர் நெகிழி**

**உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும் துறை"[41]**

எனப் பெரும்பாணாற்றுப்படை மரக்கலங்கள் கடற்பரப்பில் திசை தப்பிச் செல்லாதவாறு தடுத்துத் துறைமுகத்திற்கு வழிகாட்ட, உயர்ந்த கலங்கரை விளக்கங்கள் அமைக்கப்பட்டிருந்ததையும் அவை விண்ணைத் தொடும் அளவு மிக உயிர்வாகக் கட்டப்பட்டிருந்தமையும் பாடல் வாயிலாக விளங்குகிறது.

**"உலகுகிளர் தன்ன உருகெழு வங்கம்**

**புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ**

**இரவம் எல்லையும் அசைவின் றாகி**

**விரை செலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்**

**கோடுயர் திணிமணல் அகன்றுறை நீகான்**

**மாட வெள்ளொரி மருங்கறிந்து ஒய்யா"[42]**

என்கிறது அகநானூறு. மீகார் கலங்கரை விளக்கின் உதவியால் மரக்கலங்களை இரவு நேரங்களில் துறைமுகங்களுக்கு ஓட்டிவந்தார்கள். இந்த கலங்கரை விளக்குகளுக்கு "மாட வெள்ளொரி" என்ற பெயரை மருதன்

இளநாகனார் தன்னுடைய பாடலில் எடுத்துரைக்கிறார். இதனால் வெளிநாட்டு வாணியகத்தின் வளர்ச்சி எவ்வளவு தூரம் வளர்ந்துள்ளது என்பதற்கு இக்கலங்கரை விளக்கே உதாரணமாகும்.

## 6.1 நீர்ப்பாயல் துறைப்பட்டினம்

"மாடம் ஓங்கிய மணல் மலி மறுகு" என வணிகர் தெருவைக் குறித்தார் ஆசிரியர். அப்பட்டினத்தில் பரதவர் தெருக்கள் பலப்பலவும், பிற தொழில் செய்வோர் வாழும்தெருக்களும் வணிகர்வாழும் தெருக்களும், பொருட்களைப் பாதுகாக்கும் பண்டகசாலைகளும், அமைந்து அந்நாட்டின் செல்வ வளத்தை எடுத்துக் காட்டுவதை இப்பாடலில் சுட்டிக் காட்டியுள்ளார்.

**—————————— பாற்கேழ்**

**வால்உளைப் பரவியொடு வடவளம் தருவம்**

**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை**

**மாடம் ஓங்கிய மணல்மலி மறுகின்**

**பரதர் மலிந்த பல்வேறு தெருவின்,**

**சிலதர் காக்கும் சேண்உயர் வரைப்பின்,**

**நெல்உழு பகட்தடாடு கறவை துன்னா,**

**ஏழுகத் தகரோடு எகினம் கொட்கும்**

**கூழ் வடை நல்இல் கொடும்பூண் மகளிர்,**

**கொன்றை மென்சினைப் பனிதவழ் பவைபோல்**

**பைங்காழ் அல்குல் நுண்துகில் நுடங்க,**

**மால்வரைச் சிலம்பில் மகிழ்சிறந்து ஆலும்**

**பீலி மஞ்ஞையின் இயலி, கால**

**தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப, உயர்நிலை**

**வான் தோய் மாடத்து, வரிப்பந்து அசைஇ,**

**கைபுனை குறுந்தொடி தத்த, பைபய,**

**முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்**

**பட்டின மருங்கின் அசையின்"[44]**

என பெரும்பாணாற்றுப்படை பால் போன்ற வெண்ணிற தலையாட்டத்தினையுடைய குதிரைகள் மேற்றிசையில் இருந்து வடதிசைக் கண் விளையும் நுகர் பொருள்களான மணியும், பொன்னும், பிறவும் கப்பலில் வந்து இறங்கியமையும் சுட்டிக் காட்டியுள்ளார். அத்துடன் துறைமுகப் பட்டினத்தில் நாய்களும் ஆட்டுக் கிடாய்களும் திரிதலை கூறியுள்ளார்.

**"கூர் உகிர் ஞமலிக் கொடுந் தாளேற்றை**

**ஏழகத் தகரோடு உகளும் முன்றில்"[45]**

என பட்டினப்பாலையும் மேலே சொன்ன கருத்தை எடுத்துரைக்கிறது.

## 6.2. நெல்லூர்த் துறைமுகம்

வானமும் கடலும் ஒன்று. அப்பெரிய கடல், படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றுத் தன்மைகளையுடையது. அப்படிபட்ட துறைமுகங்களில் பண்டங்களை நாட்டில் உள்ளோர் நுகர ஏற்றிக் கொண்டு இறக்கும் பெரிய மரக்கலங்கள் முகிலால் சூழப்பட்ட மலை போலக் காட்சியளித்தது நெல்லூர்த் துறைமுகம்.

**பொன் மலிந்த விழுப் பண்டம்**

**நாடு ஆர நன்கு இழிதரும்**

**ஆடு இயல் பெருநாவாய்,**

**மழை முற்றிய மலை புரையத்**

**துறை முற்றிய துளங்கு இருக்கை,**

**தெண்கடல் குண்டு அகழி,**

**சீர் சான்ற உயர் நெல்லின்**

**ஊர் கொண்ட உயர் கொற்றவ,"[46]**

என மதுரைக்காஞ்சி எடுத்துரைக்கின்றன. பாண்டிய நாட்டு வணிகர்கள், கடலில் உண்டான முத்துகளையும் சங்குகளை அறுத்து உண்டாக்கின வளையல்களையும், கப்பலில் வணிகர் கொண்டு வந்த நவதானியங்களையும், மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்திய உப்புக் கண்டங்களையும், நாவாய்களில்

ஏற்றுக் கொண்டு போய் அயல் நாடுகளில் விற்று அங்கிருந்து குதிரை முதலான பொருட்களை ஏற்றிக் கொண்டு வந்தனர்.

**"முழங்கு கடல் தந்த விளங்கு கதிர் முத்தம் ,**

**அரம் போழ்ந்து அறுத்த கண் நேர் இலங்கு வளை,**

**பரதர் தந்த பல்வேறு கூலம் ,**

**இருங்கழிச் செறுவின், தீம்புளி, வெள் உப்பு,**

**பரந்து ஓங்கு வரைப்பின் வன் கைத்தமிலர்**

**கொழு மீன் குறைஇய துடிக்கண் துணியல்**

**விழுமிய நாவாய் பெருநீர் ஒச்சுநர்**

**நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்,**

**புணர்ந்து உடன் கொணர்ந்த புரவியொடு அனைத்தும்,**

**வைகல் தோறும் வழிவழிச் சிறப்ப"[47]**

என்று மதுரைக்காஞ்சி முத்துக்களும், ஒளியுடைய வளையல்களும், செட்டி மக்கள் கொண்டு வருவதனர். மிகப் பலவாய் வேறுபட்ட பண்டங்களும் கரிய நிறக்கழியிடங்களின் அருகில் தித்திப்புக் கூட்டிப் பொறித்த புளியோட அங்கு விளையும் வெள்ளி உப்பும் மணற்குன்றுகள் உயர்ந்து மிகுந்து கிடக்கும். வலைஞர்கள் கொழுத்த மீன்களை அறுத்த துண்டங்களும், மரக்கலங்களை கடலில் செலுத்தும் மாலுமிகளும், யவனம் முதலிய நாட்டினின்

கொண்டு வந்த குதிரைகளும், இங்ஙனம் ஐந்து பிரிவுகளையுடைய நிலங்களும் அழகு பெற்றுப் பொருந்தியிருந்தன என்று உரைக்கிறது.

## 7.0. நாவல் தீவு

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் நாவல் தீவுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதற்கு சான்றாக,

> **"செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப**
> **வியன் கண் முது பொழில் மண்டலம் முற்றி**
> **அரசியல் பிழையாது அறநெறி காட்டி**
> **பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது**
> **குட முதல் தோன்றிய ஆர் இருள் மதியின்**
> **தேய்வன கெடுக, நின்தெவ்வர் ஆக்கம்"[48]**

என மதுரைக்காஞ்சி நாவல் தீவின்கண் உள்ள நாடுகளில் முத்தினையும், ஒளிவிளங்குகின்ற சங்கினையும், சங்கு குளிப்போர் இருப்பிடங்களையும் உடையது. என்று சிறப்பித்து கூறுகிறது.

## 7.1 யவனர்கள் செய்த வாணிகம்

யவனர்கள் சங்ககாலத்தில் உள்ளப் பொருட்களை வெளிநாட்டிற்கு கொண்டுச் செல்வதும், அங்கு உள்ள பொருட்களை தமிழகத்திற்கும் கொண்டு வந்து விற்பனையும் செய்துள்ளனர். அதனால் உள்நாடு மற்றும் வெளிநாடுகளுக்கு ஒரு பாலமாக இருந்திருக்கின்றனர் யவனர்கள் என்பதை,

**" வேள்வித் தூணத்து அசைஇ யவனர்**

**ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட**

**வைகுறு மீனின் பையத் தோன்றும்**

**நீர்ப் பெயற்று எல்லைப் போகி"**[49]

என்று நெடுநல்வாடை எடுத்துரைக்கிறது. இவர்கள் தங்களுடைய பொருட்களான பித்தளை, கழுதை, குதிரை, சந்தனம், அகில், ஆடை, மிளகு எனப் பலவாறு சங்க காலமக்களிடம் விற்று வாணிபத்தை வளர்த்துள்ளனர்.

## 7.2. பித்தளை விளக்கு

இரும்பாலும் பித்தளையாலும் செய்யப்பட்ட எண்ணெய் விளக்கை யவனர்கள் இந்தியாவிற்கு கொண்டு வந்தனர். இந்த விளக்கை வாணிகம் செய்ய கடல்வழியில் செல்லும் பொழுது இவ்விளக்கு பயன்பட்டது. வணிகத் தொடர்பு மக்களிடையே பரவியிருந்தது என்பதை

**"யவனர் இயற்றிய வினை மாண்பாவை**

**கையேந் தையகல் நிறைய நெய் சொரிந்து**

**பரூஉத்திரி கொளீஇய குரூஉத்தலைநிமிர் எரி"[50]**

என நெடுநல்வாடையும் யவன நாட்டினர் தங்கள் தொழில் திறம் விளங்குமாறு உருவாக்கிய பாவைகளின் கைகளில் ஏந்தி வியக்க தக்க அந்த விளக்கை யவனர்கள் கொண்டு வந்தனர். இவ்விளக்கின் சிறப்பைப் பற்றி

**"பாவை விளக்கின் பரூஉச் சுடர் அழல"[51]**

என்று முல்லைப்பாட்டும் விளக்குகின்றன.

**யவனர் நன்கலம் தந்ததன் கமழ் தேறல்**

**பொன்செய் புனைகலத் தேந்தி நாளும்**

**ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ் சிறந்து**

**ஆங்கினி தொழுகுமதி ஓங்குவான் மாற[52]**

என்கிறது புறநானூறு. யவனர் தம் நல்ல குப்பிகளில் கொண்டுவரப்பட்ட குளிர்ந்த மணமுடைய மதுவினைப் பொன்னாலாகிய கலத்தில் ஏந்திய ஒளியுடைய மகளிர் நாளும் உனக்கு ஊட்டுவர். என்று கூறுவதில் இருந்து யவனர்கள் நம் நாட்டில் வாணிகத் தொடர்பு கொண்டிருந்த நிலையை அறிய முடிகின்றது.

**"யவனர், ஓதிம விளக்கை"[53]**

எனப் பெரும்பாணாற்றுப் படை யவனர் தங்கள் மரக்கலக் கூம்பில் வைத்த ஓதிய விளக்கிடுதல் போன்று உள்ளது என்று கூறுகிறது.

## 7.3. கழுதை வாணிகம்

கழுதை இருபுறங்களிலும் பொதிகளைச் சுமந்து செல்ல ஒரு போக்கு வரத்து சாதனமாக பயன்பட்டது. அதனால் வாணிக நேக்கில் வெளிநாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்டது.

**" புணர்ப் பொறை தாங்கிய வடு ஆழ் நோன்புறத்து**

**அணர்ச் செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கம்**

**உல்குடைப் பெரு வழிக்கவலை காக்கும்"[54]**

என்று நெடுநல்வாடை எடுத்துரைக்கிறது. வெளிநாட்டிலிருந்து பல்வேறு வகையான கழுதைகள் நம் நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டன.

இவற்றில் ஒருவகையான கோவே கழுதையை பொதி சுமக்கவும், ஊர்தியாகவும், சங்க மக்கள் பயன்படுத்தியுள்ளமை தெளிவாகிறது.

**"கொடு நுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி**

**வடிமணி நெடுந்தேர் பூண"[55]**

என்கிறது அகநானூறு. கோவேறு கழுதையை எருதுகளுக்கு பதிலாக பயன்படுத்தியமையை,

**கழிச்சுறா வெறிந்த புட்டாள் அத்திரி**

**நெடுநீர் இருங்கழி பரிமெலிந்தசைஇ"[56]**

என நக்கீரர் அகநானூற்றிலும் குறிப்பிட்டுள்ளார்.

**"கழிச்சோறு ஆடிய கணைக்கால் அத்திரி**

**குளம்பிலும் சேயிறா ஒடுங்கின**

**கோதையும் எல்லாம் ஊதை வெண்மணலே"[57]**

என நற்றிணை வணிகர்கள் மதுரை வைகையாற்றில் நடந்த நீராட்டு விழாவிற்கு வந்தவர்கள் கோவேறு கழுதையை ஊர்தியாக பயன்படுத்தினார்கள்.

**"நெடுஞ் செவிக் கழுதை குறுங்கால் ஏற்றை**

**புறநிறை பண்டத்துப் பொறை"[58]**

என அகநானூறு மருதனிள நாகனார் மிளகு மூட்டைகளை ஏற்றிச்சென்றதை குறிப்பிடப்படுகிறது.

அணங்குடை முந்நீர் பரந்த செருவின்

உணங்குதிறம் பெயர்த்த வெண்கல் அமிழ்தம்

குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்

படையமைத் தெழுந்த பெருஞ் செயாடவர்

நிரை பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்

குறைக்குளம் புதைத்த கற்பிழற் இயவு"[59]

என அகநானூறு உப்பு மூட்டையை கழுதையின் மேல் ஏற்றிச் சென்றுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. மதுரையில் வைகையாற்றில் நடந்த நீராட்டு விழாவில் சிலர் அத்திரியூர்ந்து வந்தார்கள் என்பதை,

"அகவரும் பாண்டியும் அத்திரியும்''[60]

என பரிபாடலிலும் கோவேறு கழுதை ஆராய்ந்து பூட்டப்பட்ட வண்டி சுமந்து செல்வதற்கு உரியது என்று தெளிவாக எடுத்து உணர்த்துகின்றது.

## 7.4. ஆடைகள்

சங்ககாலத்தில் மக்கள் பருத்தி ஆடையை பெரிதும் உடுத்தியிருந்தனர். பின் வெளிநாட்டில் இருந்து பல்வேறு பெயர்களை கொண்ட மென்மையான முறையில் நெய்யப்பட்டத் துணியை கொண்டு வந்த விற்றனர். இக்கருத்தினை "உ.வே.சாமி நாதஜயரும் கூறியுள்ளார்" கலிங்க என்ற நாட்டின் பெயரைக்

கொண்டு "கலிங்க ஆடை" என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட கலிங்க ஆடையைப் பற்றி கம்பர்.

**"கலிங்க கம்மியர் ஆடைச் சிறந்தது"[61]**

ஏன கம்பர் 9120 பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளார்.

**"கழைபடு செவியினிழையணி வாரா ஒண்பூங்[62]**

எனப் புறநானூற்றிலும்,

**"இழை மருங்கறியா நுழைநூற் கலிங்கம்"[63]**

என மலைப்படுகடாமிலும் கலிங்க ஆடைகளைச் சங்க கால மக்கள் வாங்கிப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை உணர்த்துகிறது.

## 7.4.1. காழகம் ஆடை

சங்க காலத் தமிழர்கள் உடுத்திய மற்றொரு உடை காழகம். இவ்வுடை குறித்துப் பல எண்ணங்கள் அமைகின்றன. காளகம், காழகம் இரண்டு சொல்லாட்சிகளும் இதற்குண்டு,

**"கரையிடைக் கிழிந்த காழகம் உடுத்திய தலைவன்"[64]**

எனக் கலித்தொகைலும்.

**"புலராக் காழகத்தை புலர உடீ இய முனிவர்"[65]**

எனத் திருமுருகாற்றுப்படையிலும் "கடே" என்னும் இடமே பண்டைய காலத்தில் கடாரம் எனப்பட்டது. கடாரம் என்ற காழகத்திற்கு நெய்து அனுப்பப்பட்ட ஆடை காழகம் எனப்பட்டது பத்துப்பாட்டு ஆராய்ச்சி– மா. இராச மாணிக்கனார் கூறியுள்ளார்.இக்கருத்தை,

**"நெங்கரை காழக நிலம் பரலுறுப்ப"[66]**

என மதுரைக்காஞ்சியில் குறிப்பிடப்பட்டுள்ளது. காழகம் என்ற ஆடை உள்நாடு மற்றும் வெளிநாடுகளிலும் சிறப்புபெற்றுள்ளது. மேலும் சங்கமக்கள் எல்லைக்கோடுகள் வரையறுக்கப்படாத காரணத்தால் வாணிபத்தைப் பெருக்கியுள்ளனர். இதனை போல கச்சை என்ற சொல் கொண்ட ஆடையையும் கூறப்படுகிறது.

**"அகலல் குலில் காழகம் உடுத்திய பெண்ணொருத்தி"[67]**

எனக் கலித்தொகையில் காழகம் நெய்யப்பட்ட ஆடையாகும். "காழகம் என்ற சொல்லை பர்மாநாடு எனறு சிலர் கொண்டுள்ளனர். அறிஞர் சிலர் காழகம் எனப்படும் கடாரம் தாய்லாந்திலிருந்த துறைமுகத்தையும் அதைச் சுற்றிய நாட்டையும் குறித்தது என்பர். காழகம் என்ற நீலநிற ஆடை என்ற ஆசிரியர் பகவதி குறிப்பிடுகிறார். சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்களையும் காழகம் என்ற சொல்லை பயன்படுத்தியுள்ளனர் என்பதை பி.எல்.சாமி செந்தமிழ் செல்வி (1978)ல் கூறுகின்றார்[68].

**"காழகம் கடாரம் என்பது நச்சினார்க்கினியர் கூற்றாகும்[69].**

**"மலாய் நாட்டில் மேல்கரை**

இக்கச்சை என்ற ஆடையை "வடமொழியில் கக்ஷ" என்ற சொல்லினின்றும் தோன்றியது. இதிலிருந்து இந்தோ–ஆரிய மொழிகளிலுள்ள கச்சா, காசா என்னும் சொற்கள் பெறப்பட்டன என்பர். திரு.எஸ், வைத்தியநாதன் கருத்தும் இதனோடு ஒப்புடையதாகும். என்ற செய்தியை ஆடைகள் நூலாசிரியர் குறிப்பிடுகிறார்[58].மேலும்,

**"கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று"**[70]

என அகநானூறும்,

**"கச்சியாப்புறுத்த கால் வீங்களமுலை"**[71]

என பெருங்காதையிலும்,

**"வம்பு விசித்தியாத்த வாங் சாய் நுகப்பின்"**[72]

என நெடுநல்வாடை கச்சு ஆடை உள்நாடு மற்றும் வெளிநாடுகளிலும் அதிகமான ஆடை விற்பனை செய்யுள்ளது தெரிய வருகிறது.

### 7.4.2 உப்பு வாணிகர்

மீன் வேட்டையாடுவோர் கரை வந்து சேரும்போது உண்டாகும். ஆரவாரமும் பெரிய உப்பங்கழிகளிடத்தே உப்புப் பாத்தியில் வெள்ளிய உப்புவிற்கும் அளவர் ஒலியுடன் சேர்ந்து முழக்கம் அடங்காத புதுவருவாயினை உடைய முது வெள்ளிலை என்னும் ஊர் என நெய்தல் நிலத்தை,

"நிலவுக் கானல் முழவுத் தாழைக்

குளிர்ப் பொதும்பர் நளித்தூவல்

நிரை திமில் வேட்டுவர் கரை சேர் கம்பலை

இருங்கழிச் செறுநன் வெள்உப்புப் பகர்நரொடு

ஒலி ஓவாக் கலியாணர்

முது வெள்ளிலை"[73]

என மதுரைக்காஞ்சி எடுத்துரைக்கிறது.

### 7.4.3 வட்ட வடிவமானகல்

சங்க கால மகளிர் உடலில் உள்ள அழுக்கை அகற்றவும், சந்தனம் அகில் கட்டைகளை அரைத்து உடலில் பூசிக்கொள்ளவும் வட்டவடிவ கல்லைப் பயன்படுத்தியுள்ளனர். என்பதை,

"கடிடை வியல் நகர்ச் சிறு குறுந்தொழுவர்

கொள்காழ் நறுங்கல் பல கூட்டு மறுக

வடவர் தந்த வான்கேழ் வட்டம்

தென்புல மருங்கின் சாந்தொடு துறப்ப

-----------------------------------

இருங்காழ் அகிலொடு வெள் அயிர் புகைப்ப"[74]

என நெடுநல்வாடை நல்ல மணம் கமழும் கஸ்தூரி முதலிய வாசனை பொருட்களை அரைப்பதற்கு உதவும். வடநாட்டவர் தந்த வெண்மை நிறங்கொண்ட வட்டமானகல் என்று தெளிவாக்குகின்றது.

### 7.4.4. மதுபானம்

யவனர்கள் வாணிபத் தொடர்பு காரணமாக வந்து செல்லும் பொழுது மதுபானப்பாட்டில்களை கொண்டு வந்து மன்னர்களுக்கு விற்றுள்ளனர் என்பதை,

**தேன்தேர் சுவைய திரளமை மாத்துக்**
**கோடைக் கூழ்த்த கமழ் நறுந் தீங்கனி**
**பயிர்புறப் பலவின் எதிர் சுளை யளைஇ**
**இறாலொடு கலந்த வண்டு மூசு அரியல்**
**நெடு கண் ஆடமைப் பழுநிக் கடுந்திறல்**
**பாப்புக்கடுப் பன்ன தோப்பி வான் கோட்டுக்**
**கடவுளோங்கு வரைக் கோக்கிக் குறவர்**
**முறித்தழை மகளிர் மடுப்ப மாந்தி''**[75]

என அகநானூறு ரோமாபுரியிலிருந்து வாணிகத்துக்காக வந்த யவனர் மதுபானத்தையும் கொண்டு வந்தார்கள். அது திராட்சைப் பழச்சாற்றினால்

செய்யப்பட்ட கொடிமுந்திரிச்சாறு. அது விலையதிகமாகையால் அரசர்கள் மட்டும் வாங்கி அருந்தினார்கள். இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டி நன் மாறனை நக்கீரர் வழ்த்தின போது" யவனர் தந்த தேறலை என்று கூறுகிறார்.

## 8.0. தொண்டி துறைமுகம்

சங்க காலத்திலே கிழக்குக் கரையிலும் மேற்கு கரையிலும் இரண்டு தெண்டிப் பட்டினங்கள் இருந்தன. இரண்டும் துறைமுகப் பட்டினங்கள் இருந்தது. ஒன்று இருந்தது. மற்றொன்று தொண்டி சேர நாட்டில் கிழக்குக் கரையிலிருந்த பாண்டிய நாட்டுத் தொண்டியாகும். கடைச் சங்கப் புலவரான அம்மூவனார் ஐங்குறுநூற்றில் நெய்தற்திணையில் தொண்டிப்பத்து என்னும் தலைப்பில் பத்து செய்யுள்களைப் பாடியுள்ளார். அப்படிபாடியத் தொண்டி சேரநாட்டின் தொண்டியாகும். அந்த புலவரே அகநானூற்றின் பத்தாம் செய்யுளில் பாண்டிய நாட்டுத் தொண்டியைப் பாடியுள்ளார்.என்பதை,

**"கொண்ட லோடு**

**குரூஉத் திரைப் புணரி யுடைதரும் எக்கர்ப்**

**பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்**

**மோட்டு மணல் அடைகரைக் கோட்டு மீன் கொண்டி**

**மணங்கழ் பாக்கத்துப் பகுக்கும்**

**வளங்கெழு தொண்டி"[76]**

என அகநானூறு கிழக்கு கடலிருந்து வீசுகிற கடற்காற்றுக்கு கொண்டல் காற்று என்று பெயர். இந்தக் தொண்டி கிழக்குக் கடற்கரையிலிருந்து என்பதைக் கொண்டல் காற்று வீசுகிற தொண்டி என்று கூறுவதிலிருந்து அறிகிறோம்.

## 8.1. நீலக்கல்

கொங்கு நாட்டிலே சங்க காலத்தில் விலையுர்ந்த மணிக்கற்கள் கிடைத்தன. சங்க செய்யுட்களில் அந்த மணிகள் கூறுப்படுகின்றன. கொங்கு நாட்டில் கதிர்மணி கிடைத்ததைக் கபிலர் கூறுகின்றார்.

**"இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன் கண் வைப்பின் நாடு"[77]**

என ஏழாம் பத்தில் அரிசில் கிழார் "திருமணி" கொங்கு நாட்டில் கிடைத்ததை கூறுகிறார். உழவர் ஏர்உழுதபொழுது அந்த மணிகள் வெளிப்பட்டன. இதனையே,

**"கருவி வானந்த தண்டளி சொரிந்தெனாப்**
**பல் விதையுழவர் சில்லே ராளர்**
**பனிந்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்**
**கழுவுறு கலிங்கம் கடுப்பச்சூடி**
**இலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன்கண் வைப்பின் நாடு"[78]**

என எட்டாம் பத்தில் கன்னட நாட்டில் பாய்கிற காவிரியாறு வரையில் கொங்கு நாடு அக்காலத்தில் பரவியிருந்தது. அங்கு வடகொங்கு நாட்டிலே புன்னாடு என்னும் ஒரு பகுதியில் அக்காலத்தில் கோமேதகச் சுரங்கம் இருந்தது. புன்னாட்டின் தலைநகரம் கட்டூர். அது கப்பணி ஆற்றின் கரை மேல் இருந்தது. கப்பணி ஆறு காவிரியில் கலக்கிற உபநதிகளில் ஒன்று. கப்பணி ஆற்றின் கரைமேல் இருந்த கட்டூர். பிற்காலத்தில் கட்டூர் என்று வழங்கப்பட்டது. கட்டூர் அல்லது கட்டூரைத் தலைநகரமாகக் கொண்ட புன்னாட்டை அக்காலத்தில் குறுநில மன்னன் ஆண்டு வந்தான் என்று கூறுவதில் இருந்து கொங்கு வாணிகம் தெளிவாகிறது.

## 8.2. மருங்கூர் பட்டினம்

மருங்கூர்ப் பட்டினம் மருங்கை என்றும் கூறப்பட்டது. இது பாண்டிய நாட்டின் கிழக்குக் கரையிலிருந்த துறைமுகம் ஆகும். அப்படி துறைமுகத்தைப் பற்றி பாண்டிய நாட்டு புலவரான நக்கீரர், காயல்களும் (உப்பங்கழிகள்) தோட்டங்களும் உள்ள மருங்கூர்ப் பட்டினத்தின் கடைத்தெரு செல்வம் கொழித்திருந்தது என்று கூறுகிறார் அதனை தான்,

> **“விழுநிதி துஞ்சும் நீறுபெறு திருநகர்**
>
> **இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து**
>
> **எல்லுமிழ் ஆணவம்”[79]**

என அகநானூறு அங்காடியில் குவிந்திருந்த இறால்களைக் கவர்ந்து கொண்டு போய்க் காக்கைகள் துறைமுகத்தில் நிற்கும் கப்பல்களின் பாய்மரக் கம்பத்தில் அமர்ந்து இறால்களைத்தின்றன என்று இப்பாடல் எடுத்துரைக்கிறது.

**"முழங்குகடல் ஓதம் காலைக் கொட்கும்,**

**பழம்பல் நெல்லின் ஊஉணூர் ஆங்கண்"[80]**

என்கிறது அகநானூறு. குளிர்ச்சி பொருந்திய சாய்க்கானம் என்னும் பதிநெடிய கதிர்களை உடைய நெல்வயல்களைக் கொண்ட ஊர் என்று மருங்கூர் பட்டினத்தின் சிறப்பை எடுத்துரைக்கிறது.

## 8.3. கற்பூரம்

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் சந்தனக்கட்டையில் கற்பூரம் சேர்த்து உடலில் பூசிக் கொண்டு வந்தனர். "சுமத்ரா தீவில் கற்பூர வகைகள் உண்டாயின. கற்பூரம் என்பது ஒரு வகையான மரத்தின் பிசின் பளிதத்தை (கற்பூரத்தை) தமிழர் வெற்றிலையில் சேர்த்து அருந்தினார்கள்.வெற்றிலை யோடு அருந்திய கற்பூரம் பச்சைக் கற்பூரம் என்று பெயர் கூறப்பட்டது. அதற்கு பளித்தம் என்றும் பெயர் உண்டு. பௌத்த பிக்குகளும் மற்றவர்களும் உணவு உண்ட பிறகு தாம்பூலத்துடன் பளிதம் சேர்த்து அருந்தினார்கள்."[81] என்று மயிலை சீனி. வேங்கட சாமி குறிப்பிட்டுள்ளார். அப்படிபட்ட கற்பூரத்தை பற்றி

"செங் குங்குமச் செழுஞ் சேறு

பங்கம் செய் அகில் பல பளிதம்"[82]

எனப் பரிபாடல் சிவந்த குங்குமக் குழம்பினையும் சேறாக்கப்பட்ட அகிற்குழம்பினையும் பல கற்பூரங்களையும் சாந்தமைக்கும் என்று கூறுவதில் இருந்து கற்பூரத்தின் சிறப்பம்சங்கள் தெரிய வருகின்றது.

## 8.4 குதிரை

சங்க காலத்தில் குதிரைகள் வாணிக நோக்கில் வெளிநாட்டில் இருந்து இந்தியாவிற்கு கொண்டு வரப்பட்டது. அப்படி கொண்டுவந்த குதிரைகளை, பொருட்களை சுமந்து செல்லவும் போர்காலங்களில் குதிரைகளில் சென்று போர் செய்யவும் பயன்பட்டது. என்பதை சங்க இலக்கியங்களில் காணலாம்.

நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்

காலின் வந்த கருங்கறி மூடையும்

வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்

குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்

தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்

கங்கை வாரியும் காவிரிப் பயனும்

ஈழத் துணுவும் காழகத் தாக்கமும்

அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி

வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்"[83]

என பட்டினப்பாலை குதிரைகள் கடல் வழியாகக் கப்பல்களில் வந்து இறங்கின. கரிய மிளகு பொதிகளும், வடமலையாகிய மேரு மலையில் தோன்றிய மாணிக்க மணிகளும், சாம்பூநதம் என்னும் பொன்னும் பொதிகை மலையல் தோன்றிய சந்தனமும், அகில் கட்டைகளும், கீழ்திசைக்கடலில் விளையும் பவளங்களும், கங்கையாற்றைச் சார்ந்த பகுதிகளில் உற்பத்தியாகும். பொருட்களும், காவிரி கரைப்பகுதியில் விளையும் பொருள்களும், ஈழ நாட்டின் உணவுப்பொருட்களும், கடார நாட்டில் உண்டாகும் நுகர் பொருள்களும் , சீனம் முதலிய பிறநாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்ட கருப்பூரம், பன்னீர் , குங்குமம் போன்ற பொருட்களும் இவை தவிர பெரிய பல பொருட்களும், நிலத்தின் முதுகு நெளியும் படி, நீர் வழியாகவும் நிலத்தின் வழியாகவும் புகர் நகரத்தில் விற்பனை செய்வதற்காகக் கொண்டுவரப்பட்டன. அப்பொருட்கள், புகாரின் கடற்பரப்பிலும் கரையிடத்தும் அழிவில்லாமல் பாதுகாப்பாக வைக்கப்பட்டன. இவ்வாறு புகார் நகரின், அகன்ற தெருக்களில் வளம் அளவிட்டுக் கூற இயலாதவாறு பொருட்கள் மிகுந்து காணப்பட்டன.

**“அன்றே விடுக்கும் அவன் பரிசில்”[84]**

என பத்துப்பாட்டும் வரி பாகணிக்கு குதிரையை பரிசிலாக கொடுத்தான் என்று கூறுகிறது.

**“குரல்வார்ந்தன்ன குவுத்தலை நல்நான்கு**
**வீங்குசுவல் மொசியத் தாங்குநுகம் தழீஇ**
**பூம் பொறிப்பல்படை ஒலிப்பப் பூட்டி,**
**மதியுடை வலவன் ஏவலின் இதுகுறைப்**
**புனல் பாய்ந்தன்ன வாம்மான் திண் தேர்**

**கணை கழிந் தன்ன நோன்கால் வண்பரி**

**பால் கண் டன்ன ஊதை வெண்மணல்**

**கால் கண்டன்ன வழிபடப் போகி**[85]

தேரில் பூட்டப் பெற்ற குதிரைகள் நான்கும் புரவி நூல் கூறும் இலக்கணப்படிப் பிறந்த பிறப்பினை உடையன. நீல மணியாலான நெற்றி சுட்டியையும் கொய்யப்பெற்ற மயிர் அடர்ந்த பிடரினையும் உடையன. வரிசையான ஒரே விதமாக ஓடும் ஓட்டத்தையும் சிவந்த நிறத்தினையின் கதிர்கள் நீண்டு வளைந்தாற் போன்ற கருத்தினையும் உடையன. கொள்ளுடன் நெய் ஊற்றி மிதித்துச் செய்யப் பெற்ற கவளத்தை உண்ண மறுத்து கொழுவிய சோற்றை உண்ட அக்குதிரைகளைப் பருத்த கழுத்தில் பலவடங்கள் ஒலிக்கும்படி நுகத்தடியில் பூட்டி, அறிவுடைய பாகன் செலுத்த, அக்குதிரைகளும் தாழ்ந்த துறையின் கண் நீர் தாவிச் செல்வது போன்று அம்பு போர் பாய்ந்து தாவிச் சென்றன. அவ்வாறு சென்ற குதிரைகள் காட்டாற் போன்று கால் சுவடு உண்டாகும் அளவிற்கு காற்றென விரைந்து சென்றது.

**"நீயும் புல் ஆர் புரவு, வல் விரைந்து பூட்டி**

**நெடுந்தேர் ஊர்மதி வலவ**[86]

என அகநானூறும் உணர்த்துகிறது.

**"எல் இடை உறாஅ அளவை, வல்லே,**

**கழல் ஒலி நாவின்தெண்மணி கறங்க**

**நிழல் ஒளிப்பனை நிமிர் பரிப்புரவி**

**வயக்கு உறு கொடிஞ்சி பொலிய , வள்பு ஆய்ந்து**

**இயக்குமதி – வாழியோ கையுடை வலவ**[87]

என்கிறது அகநானூறு. மரம் நெருங்கின காட்டி வழியில் செல்லும் வழியின் இடையில் இருள் வருவதற்கு முன்னே மணிகள் ஒலிக்க கடி வாளத்தைத் கொடிஞ்சி அழகினைப் பெறுமாறு தேரினை வரைந்த செலுத்துவாயாக என்று இப்பாடல் கூறுகிறது.

**"நூல்நெறி நுணங்கிய கால் நவில் புரவி**

**கல்லெனக் கறங்குமணி இயம்ப வல்லோன்**

**வாச் சொல்ல வணங்கிய தாப்பரி நெடுந்தேர்"**[88]

என அகநானூறு புரவி கூறும் இலக்கண முறைப்படி நுட்பாக அமைந்த காற்றெனக் விரைவாக செல்லும் குதிரை கல்லென்று ஒலிக்கும் மணி இடைவிடாது ஒலிக்குமாறு தாவிச் செல்லும் அப்படிப்பட்ட குதிரையை பாகனால் அடக்கி செலுத்துவான்என்று விளக்குகிறது.

**" நால்கு உடன் பூண்ட கால் நவில் புரவிக்**

**கொடிஞ்சி நெடுந்தேர் கடும்பரி தவிராது,**[89]

என அகநானூறு, ஆகாயத்தில் அழகிய சிறகுகளை உடைய அன்னப் பறவைகளின் கூட்டம் பறந்து செல்வதைப் போன்று காற்றைப் போல விரைந்து செல்லும் குதிரைகள் நான்கினையும் கொடிஞ்சினையுடைய நீண்ட தேரிலே ஒரு சேரப் பூட்டுக என்று கூறுகின்றது.

**வென் வேல் இளையர் இன்புற, வலவன்**

**வள்பு வலித்து ஊரின்.[90]**

என்று அகநானூறும்,

**"பால் புரை புரவி நால்குடன் பூட்டி"[91]**

என்று பொருநர் ஆற்றுப்படையும் கூறப்படுகிறது.

**வளைகண் டன்ன வாலுளைப் புரவி,**

**துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி"[92]**

எனப் பெரும்பாணாற்றுப்படை திருப்பாற்கடலித்தே உள்ள வெண்சங்கைக் கண்டாற் போன்ற வெள்ளி பிடரிமயிரை உடையனவும் தம்மினத்தோடு இயைந்து தொழில் செய்வனவும் ஆகிய சிறந்த குதிரைகள் நான்கினையும் ஒரு சேரப் பூட்டி பொன்னாற் செய்த தேரினை தருகின்றன.

**நீ, காதலித்து ஊர்ந்த நின் காமக் குதிரையை,**

**ஆய்சுதை மாடத்து அணி நிலா முற்றுத்துள்,**

**ஆதிக் கொளீஇய அசையினை யாகுவை,**

**வாதுவன் வாழிய நீ"[93]**

என்று கலித்தொகையும் நீ ஏறிவந்த குதிரையைத் தெரிந்து கொண்டேன். பலகாலும் கத்தரித்து விடப்பட்ட பிடரிமயிரினை உடையது.நீல மணியைத் தோலிலே வைத்துத் தைத்துச் செய்த கட்டு வடத்தைக் கழுத்திற் கட்டிய வல்லிகையினை உடையது. இப்படி பல்வேறு வழிகளில் குதிரையின் அழகை இப்பாடல் வர்ணிக்கின்றது.

## 8.5 அகில்

வாசைனப் பொருட்களில் அகில் மரக்கட்டைகளும் ஒன்று. அவை வெளிநாட்டிலிருந்து தமிழகத்திற்கு இறக்குமதி செய்யப்பட்டுள்ளன.

> **" ஓங்கு நிலை யொட்டகம் துயில் மடிந்தன்ன**
> **வீங்குதிரை கொணர்ந்த விரை மாவிறகு"**[94]

என சிறுபாணாற்றுப்படை அகில் மரத்தை இறக்குமதி செய்யுள்ளதைக் குறிக்கிறது.

## 8.6. வெளிநாட்டுடன் கலைப் பரிமாற்றம்

எல்லா நாடுகளுடனும் வணிகத் தொடர்பினை கொண்டு இருந்தது. அதனால் தான் அயல்நாட்டுத் தொடர்புகள் நம் நாட்டில் மட்டுமல்லாது பிறநாடுகளிலும் கலைகளைப் பரவச் செய்தது. சுமார் 15,000 ஆண்டுகளுக்கு

முன் பிரான்சில் லாசெக்ஸ் பகுதியில் கண்டெடுத்த குகை ஓவியங்கள் கலை நயத்துடன் தெய்வம் முத்திரைகள், சடங்குகள், பழக்கவழக்கங்கள் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தன[95].

எகிப்தின் நகர நாகரீகம் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே இருந்து வந்துள்ளது. "கி.பி.3500–ல் சிகுராட் எனுமிடத்தில் தெய்வத்தின் கோயில்களும் நைல் நதியில் கி.மு.2614–2181 கால கட்டத்தில் எகிப்தின் கலாச்சார அடிப்படையிலான அரசர்களது உருவங்கள் கிடைத்துள்ளன. எகிப்தின் நாகரிகம் பழமையான கட்டக்கலையை அடிப்படையாக கொண்டது. கி.மு.3500–2000 சுமேரியரது கலையழகு அவர்களது வீட்டமைப்பு மூலம் அறியப்பட்டது. அங்கு 40அடி உயர வீடுகளின் உள்ளமைப்பும், ஓவியமும் அவர்களது கலைத்திறனை உலகுக்கு வெளிக்காட்டுவதாகவே அமைந்துள்ளது. எகிப்தின் கலைவாழ்வு கிரேக்கர்களின் கலைகளோடு ஒப்பிடத்தக்கது"[96].

## 8.6.1 சிந்து சமவெளி நாகரீகம்

சிந்து நாகரீகம் திரவிடர்களுடைய சொத்தாகும். இதற்கு அங்குள்ள தெய்வங்களும் தொழிலுமே இதற்கு மிகச் சிறந்ததொரு உதாரணம் ஆகும். அதே போல் மொகஞ்சதாரோ நகரின் கட்டிடக்கலை, சுட்ட கற்கள், சுவரில் வண்ணம் தீட்டுதல், மேற்கூறையை அழகுபடுத்துதல் முதலியன தமிழர்களின் எச்சமே ஆகும். சமயம் கலையை வளர்க்கும் ஒரு கருவியே ஆகும்[97].

இறந்தோர்க்கு கல்லெடுத்தலும், நடுகற்கள் முதலிய வழக்கங்கள் தமிழரிடமிருந்து பிறநாடுகளுக்கு பரவலானது. கி.மு.2,3–ல் வட்டக்கல் எடுத்தல், சக்தி வழிபாடு முதலிய ஹரப்பா நாகரீகத்தோடு நெருங்கிய தொடர்பினை உடையதாகும்[98].

சேரர்களுக்கு பனம்பூவும், மருதநிலத்திற்கு தாமரையும் அடையாளமாக இருப்பது போலவே சமயம் சாராதா கலைமரபிற்கு மரங்கள், சிற்பங்கள், தூண்கள், தாய் தெய்வ வழிபாடு முதலியன இருந்தபோதிலும் இவை அனைத்தும் தமிழர்களின் திராவிட கலை எச்சமே ஆகும்.

## 8.6.2. தமிழர்களின் தாழிகள்

கிரேக்கத்திலும் தமிழ்நாடு போலவே பிணங்களை தாழியில் வைத்துப் புதைக்கும் வழக்கம் இருந்து வந்துள்ளது. எகிப்தில் ஆரியக் கலையினது தாக்கம் சிற்பக் கலையில் மிகுந்து இருந்து வந்ததாக கூறுவர்.

சங்க இலக்கியங்களில் கலை குறித்த ஏராளமான செய்திகள் இருந்ததாக கூறுவர். கி.பி.5ல் காளிதாசன் கலை என்ற சொல்லைப் பயன்படுத்தினார். தமிழரின் வாழ்வில் கலை ஏதாவதொரு வடிவில் நீங்காத இடம் பிடித்திருந்தது. பண்டைய இலக்கியங்கள் அனைத்திலும் கலைகளுக்கான ஒரு தனியிடம் இருந்தது[99].

## 8.6.3. அயற்கலைத் தொடர்புகள்

ஈராயிரம் ஆண்டு பழமையினை உடையது தமிழகம். கலைகளின் வளர்ச்சி என்பது வாணிகத் தொடர்புகள் மூலமாகவே வளரத் தொடங்கின. சிலப்பதிகாரத்தில் கோவலனின் மூதாதையர்கள் செய்த வாணிகத் தொடர்வே கலைப்பரிமாற்றத்திற்கு வித்தாக அமைந்து இருந்தது. அப்படி வாணிகம் செய்தபோது கடலில் மூழ்கியவர்களை மீட்ட மணிமேகலா தெய்வத்தின் நினைவாகவே கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த வாணிகமே பண்பாட்டுக் கூறுகள் வளர அடிப்படையாக அமைந்தது[100].

ஆரியர்களின் பண்பாடும், திராவிடர்களின் பண்பாடும் ஒன்றியிணைய இத்தகைய வாணிகத் தொடர்புகளே அடிப்படையாக அமைந்திருந்தது. ஹரப்பா, மொகஞ்சதாரோ மக்களின் நாகரிக வளர்ச்சி கால மாற்றத்திற்கும், கலைப் பரிமாற்றத்திற்கும் பெரும் பங்கு வகித்தன. தமிழரது அடையாளங்கள் பிறநாடுகளில் இருக்கவும், பிறநாட்டு கலைப்பொருட்கள் இங்கே கிடைக்கவும், இத்தகு வணிகத் தொடர்புகளே அடிப்படையாக இருந்தது.

கலையும் காற்றும் ஒன்று; காற்றை அடைத்து வைக்க முடியாது. அதுபோல கலையையும் கட்டிப்போட முடியாது. இதற்கென கட்டுபாடும், எல்லையும் கிடையாது. வணிகம் மட்டுமே கலைகளை வளர்க்கச் செய்தன.

யவனர் என்போர் அன்று காவல் காப்போராகவும் விளங்கினர். அரசர்கள் அவர்களை காத்தனர். அவர்களுக்கென அரசவையில் தனியொரு இடம் இருந்தது.

சீனர்களின் டிராகன் ஐரோப்பா வரை சென்றதற்கு வணிகம் மட்டுமே காரணமாக இருக்க முடியும்[101].

## 8.6.4. கல்வெட்டுச் சான்றுகள்

இந்த கலைப் பரிமாற்றத்தை உறதிபடுத்தும் கருவியாகவே கல்வெட்டுகள் இருந்து வந்துள்ளன. தமிழகத்தில் இதுவரை இருபத்தைந்து ஆயிரம் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. ஆனால் வெளிவந்தவை வெகுசிலவே ஆகும். குடுமியான் மலைக் கல்வெட்டு இசைக்குறிப்புகள் நிறைய உள்ளது. சீனா.ல் உள்ள சுவான்செள எனும் ஊரிலுள்ள கோயிலில் கஜேந்திர மோட்சம், உரலில் பிணைக்கப்பட்ட கண்ணன் சிற்பங்களை காணலாம்.

முதலாம் இராசராசன், முதலாம் குலோத்துங்கன் ஆகிய சோழ மன்னர்களின் தூதுவர்கள் சீனாவுக்கு சென்ற செய்தியினை சீனாவின் 'சங்' வரலாறுகளில் காணலாம். அரேபிய எழுத்தாளர்கள் இடினே ஹாக்கல், ஈஸ்டாக்கி ஆகியோரது வணிகத் தொடர்பினை அவர்களின் நூல்களின் வாயிலாகவும் அறிய முடிகிறது. வெனீஸ் நகர பயணி மார்க்கோபோலோ போன்றோரது குறிப்புகள் வழியும் அறியாலம்.

தமிழர்க்கென ஒரு தனிப்பட்டதொரு நாகரிகமும் பண்பாடும் உண்டு. அது கடல் கடந்து அயல்நாடுகளுக்கும் பரவிற்று. இந்த நாகரிக மாற்றத்தை அறிய தமிழரது பண்டைய இலக்கியம் வழி அறிய முடிகிறது.

மன்னராட்சி காலத்தில் இத்தகு கலாச்சார பரிவர்த்தனைகள் நிகழ்ந்தன. பண்டைய தமிழகத்து மூவேந்தரும் இந்த மாற்றத்திற்கு பேருதவி புரிந்தனர் என்றே கூறலாம்[102].

## 8.6.5 ஐரோப்பியரின் வரவு

ஐரோப்பியரின் வரவும் கலைமாற்றத்தில் பேரிடம் பிடித்திருந்தன என்றே கூறலாம். இந்தியாவின் செல்வ செழிப்பைக் கண்ட ஆங்கிலேயர்கள் இந்தியாவில் கிழக்கிந்தியக் கம்பெனி எனும் நிறுவனத்தை நிறுவினர். ஆங்கிலேயர்கள் வாணிகத்தின் வளர்ச்சியில் மட்டுமே கண்ணும் கருத்துமாக இருந்து வந்தனர். "வரகுணராம குலசேகர பாண்டியன் கி.பி.1613ல் முடி சூட்டப் பெற்றான். இவனுக்கு குலசேகர சோமாசியார் எனும் பெயரினையும் கொண்டிருந்தான். இவனும் வாணிகம் மூலம் கலைத்தொடர்பினை தமிழகத்துக்கு கொண்டு வந்தான்''[103].

### 8.6.6 போர்ச்சுகீசியர் வருகை

இந்தியாவுக்குள் முதன்முதல் அடியெடுத்து வைத்த ஐரோப்பியர் இவர்களேயாவர். இவர்கள் வாணிகம் செய்து பொருளீட்டும் நோக்கத்துடனே நாட்டுக்கு வந்தனர். அவர்கள் தமிழகத்திற்கு மிளகையும், வாசைனப் பொருட்களையும், ஏலக்காய் முதலிய பொருட்களையும் வாங்கவே வந்தனர். இவர்களில் முதன்மையானவன் வாஸ்கோடகாமா ஆவான். வாணிகமே முதன்மை என்றபோதிலும் அவர்கள் நம் நாட்டை ஆக்கிரமிப்பு செய்யவே விரும்பினர்.

சோழ மண்டல கடற்கரைப் பகுதியும், அதனைச் சார்ந்துள்ள நிலப்பகுதியும் இந்திய வரலாற்றுல் கர்நாடகம் எனும் பெயரினை பெற்றிருந்ததற்கு அவர்களே காரணம் ஆகும்[104].

### 8.6.7. கலைகளின் பாகுபாடுகள்

மக்கள் பயின்றுவந்த கலைகள் **64** வகைகளாக தொகுக்கப்பட்டிருந்தன. இலக்கிய கலையை பயின்றவர்கள் (1) கற்றார் (2) கட்டுரை வல்லார் (3) கவி என மூவகைப்பட்டனர். மண்டபங்களின் ஓவியம் வரைதல், மேற்கூரையில் வரைதல், சுவர்களில் வரைதல், பாண்டங்களில் வரைதல், ஊசியில் மையைத் தடவி ஓலையில் பிறர் கண்ணில் படாதவாறு எழுதுவது முதலிய சோழர் காலத்துக் கலைகள் வேற்று நாடுகளில் பரவியதையும் அறியலாம்.

கணியர்கள் எனும் குலத்தினரும் கலைகள் வளரவும் பரவவும் ஒரு கருவியாகவே இருந்து வந்துள்ளனர். இவர்கள் காலங்கணிப்பவர்கள் என்று அழைக்கப்பட்டனர். நேரங்கணித்தல், ஜாதகம் எழுதுவது, மதிமுகம் காணல் முதலியவற்றில் தேர்ந்தவர்களாக இவர்கள் விளங்கினர்[105].

## 8.6.8. சமயமும் கலையும்

கலைகள் வளர சமயமும் ஒரு காரணமாகவே இருந்தது என்று கூறலாம். சமயம், கடவுள் வழிபாடு, சடங்குகள் முதலியன ஒரு நாட்டிலிருந்து பிற நாடுகளுக்கு பரவின. இதன் வழியே கலைகளும் பரிமாற்றம் பெறத் தொடங்கின.

சமயம் ஒன்று மட்டுமே கலைத் தொடர்புக்கு அடிப்படைக் காரணமாக அமைந்திருந்தது. இதற்கு நமக்கு கிடைத்துள்ள கல்வெட்டுச் சான்றுகளே போதுமானதாகும். பண்டமாற்று முறைகளும் கலைகள் வளர வாய்ப்பாக இருந்தன என்றே கூறலாம். இவையே கலைத் தொடர்பினை செய்தன. இவ்வாறு கலைகள் காற்று போல உலகம் முழுவதும் பரவி இருந்தது. அவை எல்லைகள் இன்றி விரிந்து பரவத் தொடங்கின. இதற்கு போதுமான வரலாற்றுச் சான்றுகள் உள்ளன.

வேற்று நாட்டுடன் கலைத்தொடர்புகள் என்னும் தலைப்பில் கலைப் பரிமாற்றம், சிந்து சமவெளி நாகரீகம், சீனர்களின் பங்கு, ஆயற்கலைத் தொடர்புகளும், கல்வெட்டுச் சான்றுகள், கலைகளின் பாகுபாடும், சமயமும் கலையும் இவைகளின் மூலம் பண்டையத் தமிழர்களின் கலைகளும், அவர்கள் வேற்று நாட்டுடன் கொண்ட கலைத் தொடர்பினை சிறப்பாக பாடப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.[106]

## தொகுப்புரை

* சங்க காலத்திலும் அதற்கு சற்று முன்னும், பின்னும் தமிழகம் மற்ற நாடுகளுடன் கொண்ட வாணிகத்தில் முக்கிய பங்காற்றியவை.

* புகார் கொற்கை, புதுச்சேரி, முசிறி, தொண்டி, கங்கை, காவிரி, போன்ற துறைமுகங்களில் பல வெளிநாட்டு கப்பல்கள் வந்தடைந்தன.

* வேளாண் தாவரப்பொருட்கள் மற்றும் இயற்கையில் கிடைக்கும் தாவரப்பொருட்கள் இவ்வாணிகத்தில் பெரும் பங்கு வகித்தன.

* மணமுள்ள சந்தன கட்டைகள், தீட்டப்பட்ட கருங்காலி, தேக்கு மரகட்டைகள், அகில், புளி, மா போன்றவை ஆகும்.

* வாசனை திரவியங்களான மிளகு, ஏலக்காய், கிராம்பு, இலவங்கப்பட்டை ஏற்றுமதி மற்றும் இறக்குமதி பொருட்களில் முக்கியத்துவம் பெற்றவை.

* இதில் முதன்மையாக யவனர்களின் பாவை விளக்காகும்.

